# இராசராச சேதுபதி ஒருதுறைக் கோவை

(குறிப்புரையுடன்)

சேதுசமத்தான மகாவித்துவான்

ரா. இராகவையங்கார் பாடியது

குறிப்புரை

பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை



மணிவாசகர் பதிப்பகம்

சிதம்பரம்

முதற் பதிப்பு : 1984



விலை : ரூ. 20/-

கிடைக்குமிடம் :

மணிவாசகர் நூலகம்

89, லிங்கி செட்டிதெரு, சென்னை - 600 001.

28-A வடக்கு ஆவணி மூலவீதி, மதுரை - 625 001.

93, கடைவீதி, கோயமுத்தூர் - 641 001.

12-பி, மேலசன்னிதி, சிதம்பரம் - 608 001.

அச்சிட்டோர் :

லாலி பிரஸ், ஆபிரகாம் பண்டிதர் சாலை, தஞ்சாவூர் - 613 001

# சிற்றிலக்கியச் செழுமை

பேராசிரியர் ச. மெய்யப்பன் எம். ஏ.,
*அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.*

ஒருதுறைக் கோவை நூலை வெளியிடுவதற்கு மணிவாசகர் பதிப்பகம் மிகுந்த மனமகிழ்ச்சியுடன் இசைவு தெரிவித்தது. முந்தைய தலைமுறையில் சிறந்த புலவராகவும் தலைசிறந்த கவிஞராகவும் விளங்கிய மகா வித்துவான் ரா. இராகவையங்கார் அவர்கள் நுண்மாண் நுழை புலத்தால் நல்லதொரு கோவையை நமக்கு அளித்துள்ளார்.

நீண்ட நாட்களாகக் கையெழுத்துப்படியாகவே இருந்ததனை அச்சு உரு ஏற்றித் தமிழ்கூறு நல்லுலகத்திற்கு வழங்க முன்வந்த மணிவாசகர் பதிப்பகத்தைப் பாராட்டுகின்றேன். 50 ஆண்டுக்கு முன்வந்த அரிய தமிழ் நூலை மறுபதிப்புச் செய்த பெருமையுடைய பதிப்பகம் இது. எது நல்லதோ சிறந்ததோ அதை வெளிக்கொணர்வதில் மணிவாசகர் பதிப்பகம் எப்போதும் முன்னிற்கிறது. ஒருதுறை பற்றிய கோவையாதலால் இதனை ஒரு சாதனையாகக் கருதி வெளியிடுகிறது.

மு. இராகவையங்கார் அவர்களின் 'ஆழ்வார்கள் காலநிலை' என்ற நூலையும் முன்பு மணிவாசகர் பதிப்பகம் மறுபதிப்புச் செய்தது, இரட்டையர்களாகிய இராகவையங்கார்கள் இருவர் நூல்களையும் பதிப்பிப்பதில் பெருமையடைகிறோம்.

எழுவர் சுமந்த ஈகைச் செந்நுகம் நல்லியக்கோடன் எனும் வள்ளல் ஒருவனால் தாங்கப் பெற்றதாகச் சிறுபாணாற்றுப்படை கூறுவதுபோல், ஆதீனங்களும் திருமடங்களும் பதிப்பித்த சிற்றிலக்கியங்களை இன்று மணிவாசகர் பதிப்பகம் தலையாய பணியாகக் கருதி, மிகுந்த கவனத்துடன் அழகிய செம்பதிப்புக்களாக வெளிக்கொணர்கிறது. 1961 தொடங்கி, சிற்றிலக்கியங்கள் பற்றிய ஆய்வுகளுக்கு முதன்மை கொடுத்து

வெளியிட்டுள்ளது. சிற்றிலக்கியங்களின் தோற்றம், வளர்ச்சி, வடிவம், பரப்பு, தொகை முதலிய அனைத்தையும் பற்றி மிக விரிவாக ஆராய்ந்து வெளியிட்ட ஒரே பதிப்பகம் மணிவாசகர் பதிப்பகம் என்பதை நினைந்து பெருமைப் படலாம். இந்நூல்களை ஊற்றுக்கண்ணாகக்கொண்டு, பல ஆய்வுகள் முகிழ்த்துள்ளன என்பதை நினைந்து மணிவாசகர் பதிப்பகம் பெருமை கொள்கிறது. அந்த வகையில் இந்த நூலையும் வெளியிடுவது எல்லா வகையிலும் போற்றுதற்குரியது. வெள்ளிவிழா நோக்கி வீறு நடைபோடும் மணிவாசகர் பதிப்பகம் இந்நாளில் நாவீறு படைத்த நல்ல கவிஞனின் சிறந்ததொரு படைப்பினைச் செம்பதிப்பாக வெளியிட்டுச் சிறக்கிறது.

இந்நூல் வெளிவர ஒல்லும் வகையில் உதவியவர்களும் மணிவாசகர் பதிப்பக வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பவர்களுமான பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்களையும் அறிஞர் கமலையா அவர்களையும் பாராட்டுகின்றேன். நீண்ட நெடிய கனவுகளை நனவாக்கி வரும் தமிழ்ப் பல்கலைக் கழகச் சிறப்புநிலை பேராசிரியராகத் திகழ்பவர் சண்முகம் பிள்ளை. ஆராய்ச்சி அறிஞரும் சிறந்த பதிப்பாசிரியருமாகிய பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை வழியில் பதிப்புப்பணி புரிந்துவரும் மு. சண்முகம் பிள்ளை அவர்கள் இந்நூலுக்குக் குறிப்புரை எழுதி வளம் சேர்த்துள்ளார்கள். பதிப்புப் பணியே தம் வாழ்நாள் பணியாகக் கருதி முழுமூச்சுடன் உழைக்கும் பதிப்பாசிரியர் மு. சண்முகம் பிள்ளையின் கைவண்ணம் இந்நூலில் பக்கந்தோறும் பளிச்சிடுகிறது. திரு. கமலையா அவர்கள் அரசு அலுவலிலிருந்து ஓய்வு பெற்றும் தமிழ்ப் பணியிலிருந்து ஓய்வு பெறாத 70 ஆண்டு இளைஞர்; சிந்தனையாளர்; திறனாய்வாளர். எந்த நல்ல செயலுக்கும் விதையாகவும் வேராகவும் அமைகின்றார். சேதுபதிகள் வளர்த்த தமிழை ஆராய்வதிலும் வெளிக்கொணர்வதிலும் வற்றாத ஆர்வமுடையவர். அவர்களுடைய நல்லெண்ணத்தாலும் தூண்டுதலாலும் ஒத்துழைப்பாலும் இந்நூலை மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்டுத் தம் பதிப்புப்பணி வரலாற்றில் ஓர் அணியைச் சேர்த்துக் கொள்கிறது.

---

# முகவுரை

கோவை என்பது கோக்கப்பெற்றது, ஒழுங்குற அமைக்கப் பெற்றது என்னும் பொருள்படும். எடுத்துக்காட்டாக ஆசாரக் கோவை, மும்மணிக் கோவை, வருக்கக் கோவை என்னும் நூற்பெயர்களைச் சுட்டலாம். இவற்றுள் முதலது ஒழுகலாறுகளாகிய ஆசாரங்களை ஒருசேரத் தொகுத்துத் தரப்பெற்ற நூல். மும்மணிக் கோவையோ வெண்பா, கலித்துறை, ஆசிரியம் என்னும் மூவகைப்பாக்களும் முப்மூன்றாய் மாறிமாறி வர முப்பது பாடல்கள் கொண்ட சிற்றிலக்கியமாம். அகரமுதலாகிய மொழி முதலாம் எழுத்து வருக்கங்கள் பாடலின் தொடக்கத்தில் வர அமைக்கப்பெறும் இலக்கியவகை வருக்கக் கோவையாம். இக்கோவைகள் எத்தகைய தன்மையன என்பதனைக் கோவை என்பதற்கு அடையாக வரும் சொற்களே புலப்படுத்திவிடுகின்றன. மேலும், இவையெல்லாம் புறப்பொருள் பற்றியவை.

இனி, அகப்பொருள் பற்றிய கோவை நூல்களும் உள. அவை அடையின்றி, 'கோவை' என்னும் பெயராலேயே சுட்டப்படும். இது சங்கநூல்கள் முதலிய பண்டைய அகப்பொருள் நூல்களுள் தொடர்பின்றி அமைந்திருந்த அகப்பொருள் துறைகளை நிகழ்ச்சிகள் தொடர்பாக அமையுமாறு கோக்கப் பெற்ற ஒரு புதுநூல் வகையாகும். அகப்பொருட் செய்திகளை முறைப்படக் கூறும் இப்புதுநூல்வகை 'கோவை' என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப் பெறுகிறது.

அகப்பொருள் பற்றிய இக் கோவை நூலுக்கு வழிகாட்டும் முதல் நூல் மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையார் ஆகும். திருக்கோவையார் நானூறு கட்டளைக் கலித்துறைப் பாக்களைக் கொண்டதாய் தலைவன் தலைவியர் காட்சி முதலாகக் களவு கற்பென்னும் பாகுபாட்டில் பிரிவு வரையில் அமைந்த கிளவித்துறைகள் நானூறும் கொண்டு அமைந்துள்ளது. இங்ஙனம் அகப்பொருள் தழுவியமையால் 'அகப்பொருட் கோவை' என்றும் இதனைப் பின் நூல்கள் சுட்டும். குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐந்திணைக் கூறுபாடுகளைக் கொண்டிருத்தலால் 'ஐந்திணைக் கோவை' என்றும் கூறுவர். நானூறு பாடல்கள் கொண்டதாதலின் 'நானூற்றுக் கோவை' என்றும் சுட்டப்பெறும்.

தொடர்பான கிளவித்துறைக் கோப்புடைய இதனைத் தொடர் நிலைச் செய்யுள் என்பர். தண்டியலங்காரப் பழையவுரை, 'கோவையும் பொருட்டொடர் நிலைச் செய்யுள் எனக் கொள்க' என்று குறிப்பிடுகிறது. பெருங்காப்பியம், சிறுகாப்பியம் எனப் பாகுபடும் இத் தொடர்நிலைச் செய்யுள் வகையுள் கோவை சிறு காப்பியமாகும்.

அகப்பொருள் இலக்கண நூலார் தாம் கூறும் இலக்கணத்திற்கு இலக்கியமாகக் கோவை நூல்களை எடுத்துக் காட்டியுள்ளனர். இறையனாரகப் பொருளுரைகாரர் பாண்டிக் கோவையிலிருந்து 327 பாடல்களை உதாரணமாகக் காட்டியுள்ளார். இவர் காட்டிய பாடல் களிலிருந்துதான் இந் நூலைப்பற்றி நாம் அறிய இயலுகிறது. தனியாக இந்நூல் முழுமையாய் நமக்கு இதுவரை கிட்டவில்லை. களவியற் காரிகையில் திருக்கோவையார், பாண்டிக்கோவை இரண்டும் எடுத்தாளப் பட்டுள்ளன. நம்பியகப்பொருள் நூலுரையுள் தஞ்சைவாணன் கோவை முழுமையும் வந்துள்ளது. மாறனகப்பொருளுக்கு இலக்கியமாய் அமைந்தது திருப்பதிக்கோவை. இலக்கண விளக்க உரையில் திருக் கோவையார், அம்பிகாபதி கோவை, தஞ்சைவாணன் கோவை, கப்பற் கோவைப் பாடல்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. இலக்கணத்திற்கு இலக் கியமாக வந்தமையால் இக்கோவைகள் கற்பாரிடையே மிகவும் போற்று தலைப்பெற்றன.

தெய்வத்தின் மேலும், அரசர், வள்ளல்கள் முதலியோரின் மேலும் பாடப்பெற்ற கோவை நூல்கள் பலவாகும். தெய்வ பரமான திருக் கோவையாருக்குத் 'திருச்சிற்றம்பலக் கோவை' என்று இடப்பெயர் சுட்டியும் ஒருபெயர் உண்டு. இது தில்லைச் சிற்றம்பலத்தைச் சிறப் பிப்பது. இம் மரபினை ஒட்டித் தெய்வத்தின் மேல் தல சம்பந்தமாக மதுரைக்கோவை, திருவாரூர்க்கோவை, வெங்கைக்கோவை, திருக் கழுக்குன்றக்கோவை, திருப்பதிக்கோவை, பழனிக்கோவை, மயூரகிரிக் கோவை, சீகாழிக்கோவை முதலியவாகப் பல நூல்கள் பிறந்துள்ளன. அரசர் மீது பாடப்பெற்ற கோவைகளில் பாண்டிக்கோவை, குலோத்துங்க சோழன் கோவை என்பவை குறிப்பிடத்தக்கவை. தஞ்சைவாணன் கோவை, கருமாணிக்கன் கப்பற்கோவை, உத்தண்டன் கோவை, அசதிக் கோவை, ஆனந்தரங்கன்கோவை முதலியன வள்ளல்கள் மீது பாடப் பெற்றவையாகும். இவ்வாறாகக் காலந்தோறும் வந்த அகப்பொருட் கோவை நூல்கள் பலப்பல.

அகப்பொருட் கோவை நானூறு கட்டளைக் கலித்துறைப் பாக்களால் அமைவதே முறை என முதற்கண் இலக்கியம் கண்டு இலக்கணமும் வகுக்கப்பெற்றது. கட்டளைக்கலித்துறை கோவைக்கே யுரிய பாடல் வகையாய் வரும் மரபுபற்றி இப் பாவினைக் 'கோவைக் கலித்துறை'

என்றும் வழங்கலாயினர். நானூறு பாடல்கள் எல்லையைத் தாண்டியும் சிற்சில நூல்கள் பின்னாளில் அமைவனவாயின. எடுத்துக்காட்டாகக் குலோத்துங்க சோழன் கோவை 510 செய்யுள்; தஞ்சைவாணன்கோவை 425; ஆரூர்க்கோவை 513; மயூரகிரிக்கோவை 536; திருப்பதிக்கோவை 527. இப் பின்னாளைய கோவைகள் சிற்சில புதிய துறைகளைப் படைத்துக் கொண்டமையும், ஒரு துறைக்கே ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்களை அமைத்தமையும் பாடல் எண் தொகை மிகுதற்குக் காரணமாயிற்று.

ஒருதுறைக்குப் பல பாடல்கள் தருவதில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது பாண்டிக்கோவை; இக்கோவையில் நயப்புணர்த்தல் துறையில் 6 பாடல் உள; பிரிவச்சத்திற்கு 2 பாடல்; இடமணித்து என்ற துறைக்கு 4 பாடல்; மென்மொழியாற் கூறிக் குறை நயப்பித்தல் 8 பாடல். இவ்வாறு உள்ள இவ்வமைப்புப் பிற்காலத்தில் ஒருதுறைக் கோவைகள் தோன்றுவதற்கு வழிகாட்டியாய் அமைந்திருத்தல் கூடும் என்று கருதலாம்.

ஒரு துறை பற்றியே பல பாடல்கள் பாடுவது புலவனுடைய கற்பனைத் திறனுக்கு ஓர் உரையாணியாகும். ஏதேனும் ஒரு துறையைக் குறித்தே நானூறு பாடல்கள் பாடப்பெற்றால் அதனை 'ஒருதுறைக்கோவை' எனக் குறிப்பிடலாயினர்.

இரகுநாத சேதுபதிமேல் பொன்னாங்கால் அமுத கவிராயர் 'நாணிக்கண் புதைத்தல்' துறையில் நானூறு பாடல்கள் பாடியுள்ளார். ஒருதுறைக் கோவையுள் முதன்மைபெற்ற முதல்நூல் இதுவே. டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் பதிப்பாகிய சிராமலைக்கோவையின் முகவுரையில், 'வண்டோச்சி மருங்கணைதல்' என்னும் துறைபற்றிய சசிவர்ணன் கோவையையும், 'வெறிவிலக்கு' என்னும் துறையில் கீழ்வேளூர்க் குருசாமி தேசிகர் பாடிய 'தியாகேசர் கோவை'யையும் ஒரு துறைக்கோவை இலக்கியங்களாக எடுத்துக்காட்டியுள்ளார். இவற்றின் பாடல் தொகை முதலிய பிறவிவரங்கள் எம்மால் தெரியக்கூடவில்லை.

நூறு பாடல்கள் அளவில் ஒருதுறைக்கோவை பாடிய புலவர்களும் உளர். 'நாணிப்புறங்காட்டல்' என்னும் துறையில் செண்டத்தூர் ஐயாத்துரை முதலியார் மீது துரைசாமிப் பாவலர் பாடிய ஒரு துறைக் கோவை 108 பாடல்களுடையது.

சோடசாவதானம் பொன்னுங்கூடக் கவிராயர் 'நாணிக்கண் புதைக்க வருந்தல்', 'வண்டோச்சி மருங்கணைதல்' என்னும் இருதுறைகளில் நூறு நூறு கவிகள் கொண்ட ஒருதுறைக்கோவைகள் பாடியுள்ளார். இந்த

இருநூல்களின் பாட்டுடைத் தலைவர் சாப்டூர் என்று பெயர் விளங்கிய மருதூர் ஜமீந்தார் நாயகசாமிகாமய நாயக்கர் அவர்களாவர். இக் கோவை நூல்கள் இக் கவிராயர் பாடிய 'பூதரவிலாச'த்துடன் சேர்த்து 1934 ஆம் ஆண்டு அச்சிற் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. மேலே சுட்டிய ஒருதுறைக் கோவைகளும் கட்டளைக்கலித்துறைப் பாக்களால் இயன்றனவே.

இரகுநாத சேதுபதி ஒருதுறைக் கோவை 400 பாடல்களைக் கொண்டதாயினும் இடையில் 89 பாடல்கள் கிட்டப்பெறவில்லை. இதன் அச்சு மூலநூல், உரை நூல்களில் 89 பாடல்களின்றியே காணப்படுகின்றன (311 — 399). இக்கோவையாசிரியர் பாடிய நாணிக்கண் புதைத்தல் துறையையே எடுத்துக்கொண்டு முத்துராமலிங்க இராசராசேசுவர சேதுபதிபேரில் மகாவித்துவான் ரா. இராகவையங்கார் பாடிய 400 பாடல்களைக் கொண்ட ஒருதுறைக் கோவை முழுமையாயுள்ளது.

இனி, இராசராசசேதுபதி ஒருதுறைக்கோவை உருவான வரலாற்றினை நோக்குவோம். மகாவித்துவான் ரா. இராகவையங்கார் இக் கோவையின் பாட்டுடைத்தலைவராகிய இராசராச சேதுபதியின் தந்தையார் பாஸ்கர சேதுபதியின் காலம் முதல் சமத்தான வித்துவானாக விளங்கியவர். இவர் மகனார் சண்முகராசேசுவர நாகநாத சேதுபதி காலத்தும் சமத்தானப் புலவராய் இலங்கியவர். பாஸ்கர சேதுபதி சிறந்த கல்வியாளர்; தமிழுக்கும் இந்து சமயத்துக்கும் அரணாக விளங்கியவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தைப் பாண்டித்துரைத் தேவருடன் சேர்ந்து நிறுவிய புரவலர்; பெருங் கல்வியாளர்; அறம்பல புரிந்தவர்; புலவர்களுக்கு வாரிவழங்கிய வள்ளல். கலைமகள் விழாவாகிய நவராத்திரித் திருவிழாவைச் சிறப்பாகக் கொண்டாடியவர்.

பாஸ்கர சேதுபதி மகாராசா புகழுடம்பு பெற்றபின் பட்டத்திற்கு வந்த முத்துராமலிங்க சேதுபதி என்னும் இராசராசேசுவர சேதுபதி இளவயதினராயிருந்தார். அவர் 1910ஆம் ஆண்டு உரிய வயது வரவே ஆட்சிப்பொறுப்பை நேரடியாகக் கவனிக்க முற்பட்டார். அந்த ஆண்டுக் கோடைக் காலத்தில் இராசராசசேதுபதியவர்கள் சிலகாலம் திருக்குற்றாலத்தில் தங்குவதற்காகப் புறப்பட்டார். சேதுபதியவர்கள் வெளியூர் செல்லும்போதும் சமத்தான மகாவித்துவானும் தம் ஆசிரியருமாகிய மகாவித்துவான் ரா. இராகவையங்கார் அவர்களையும் உடன் அழைத்துச் செல்வது வழக்கம். மன்னர் பரிவாரமும் மகாவித்துவான் அவர்களும் இரயிலில் இராமநாதபுரத்திலிருந்து திருக்குற்றாலத்திற்குப் புறப்படலாயினர். அச் சமயம் அங்கு வந்த வேம்பத்தூர்ப்புலவர் சிலேடைப்புலிப் பிச்சுவையரும் அவர்களுடன் சேர்ந்து பயணமாயினார்.

வழிப்பயணத்தின்போதும் புலவர்களுடன் அளவளாவித் தமிழ்ச் சுவையை நுகர்ந்து கொண்டிருந்தார் இராசராச சேதுபதி அவர்கள். புலவர் பிச்சுவையர் இரகுநாத சேதுபதி ஒருதுறைக்கோவையில் சில பாடல்களின் நயத்தைப் பாராட்டினார். வேறு சில பாடல்களின் பொருள் நயச்சிறப்பை மகாவித்துவானும் எடுத்து விளக்கினார். இதுபோன்ற நூல்செய்வது இந்நாளில் அரிது என்று புலவர் பிச்சுவையர் பேசியபோது மகாவித்துவான் இராகவையங்கார் மன்னர்மீது தாம் அவர் பாடிய அதே நாணிக்கண்புதைத்தல் துறையில் 400 பாடல்கள் பாடப்போவதாகத் தெரிவித்தார்; கோவை பாடவும் தொடங்கிவிட்டார். திருக்குற்றாலத்தில் சில காலம் தங்கி இராமநாதபுரம் வருவதற்குள் ஒருதுறைக்கோவை நூலும் உருவாயிற்று.

இராசராசசேதுபதி மகாராசா சமத்தான அரசுரிமை ஏற்ற 1910ஆம் ஆண்டிலே சிலகாலம் நடைபெறாதிருந்த நவராத்திரி விழா அரண்மனையில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. பல்வேறு இடங்களிலிருந்தும் தமிழ்ப் புலவர்களும் வடமொழி வாணர்களும் விழாவிற்கு வந்து குழுமினர். அவ்விழாவில் புலவர் பலரும் சேதுபதிகள் மீது பாடிய பாடல்கள் பல. அவற்றைத் தொகுத்துத் தனி நூலாக மதுரை வித்தியாபாநு பத்திராதிபர் மு. ரா. கந்தசாமிக் கவிராயர் வெளியிட்டுள்ளார். அந் நூலின் முகவுரையில் நவராத்திரி விழாவின் 11ஆம் நாள் நடைபெற்ற புலவர் பெருஞ்சபையில் மகாவித்துவான் ரா. இராகவையங்கார் இராசராச சேதுபதி மீது தாம் பாடிய ஒருதுறைக் கோவை நூலை அரங்கேற்றினார் என்னும் செய்தி தெரிவித்துள்ளார். இராசராச சேதுபதி ஒருதுறைக்கோவையின் அரங்கேற்றம் குறித்துக் கவிராயர் அவர்கள் எழுதியுள்ள செய்திகள் வருமாறு :

"மறுதினம் (விசயதசமி நாளுக்கு மறுதினம்) காலை மகாராஜா அவர்கள் திருமுன்னர் வித்வத்சபை கூடிற்று. சேது சமஸ்தான வித்வான் ரா. ராகவையங்காரவர்கள், சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான் மு. ரா. அருணாசலக் கவிராஜரவர்கள், சிவகங்கை பெரியசாமித் தேவரவர்கள், செந்தமிழ்ப்பத்திராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள், சதாவதானம் சுப்பிரமணிய அய்யரவர்கள், வேம்பத்தூர் பிச்சுபாரதிகள், மதுரை சுந்தரேசுவர ஐயரவர்கள், நாகை நீலலோசனிப் பத்திராதிபர் ஜி. சதாசிவப்பிள்ளை அவர்கள், நெடுவை திரு. ராமஸ்வாமி ஐயங்காரவர்கள், மன்னார்குடி காலேஜ் தமிழ்ப் பண்டிதர் மு. கோவிந்தசாமி ஐயரவர்கள், விவேகபாநுப் பத்திராதிபராயிருந்த எஸ். சாமிநாத ஐயரவர்கள் முதலான பல தமிழ் வித்துவான்களும் தேவகோட்டை ஸப்டிவிஷன் ஜமீந்தார்

அள. அரு. ராம. அருணாசலஞ் செட்டியாரவர்களும், மதுரை தேவஸ்தான கமிட்டி மெம்பரும் சிறந்த தமிழ் வித்துவானும் ஆகிய வயி. நாக. ராம. அ. இராமநாதஞ் செட்டியாரவர்களும், முதலான நாட்டுகோட்டை நகரத்தார் சிலரும், சமஸ்தான உத்தியோகஸ்தர்களும், சமஸ்கிருத பண்டிதர்கள் சிலரும் மற்றும் பல தமிழபிமானிகளும் கூடியிருந்தார்கள். இவ்வாறு பண்டிதமணிகளாகக் கூடிய இப் பெருஞ்சபையில் சேது சமஸ்தான வித்துவானாகிய ரா. ராகவையங்காரவர்கள் மகாராஜா அவர்கள் மீது பாடிய நாணிக்கண்புதைத்தல் என்னும் ஒருதுறைக் கோவையை அரங்கேற்றினார்கள். ஒவ்வொரு கவிகளும் சொற்சுவை, பொருட்சுவை நிரம்பப் பெற்றிருத்தலால் சபையிலிருந்த வித்துவான்கள் யாவரும் ஆநந்தபரவசமுற்றனர்.

தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி' (நாலடியார் 137)

என்ற பண்டைப்புலவர் திருவாக்கு இச் சமயம் சத்தியவாக்காகவே நினைக்கத்தக்கவண்ணம் இருந்தது. ஐயங்காரவர்கள் தமிழ்க் கல்வியாலும் பிரசங்கத்தாலும் சிறப்புற்றிருப்பது போலவே கவி பாடுவதிலும் சிறப்புற்றவர்களென்று எல்லா வித்துவான்களும் உண்மையாகப் பாராட்டினார்கள். இக் கோவையிலுள்ள நானூறு கவிகளும் புறம் அகம் என்னும் இருபொருட்களுடன் விளங்கின. இந்தச் சமஸ்தானாதிபதிகள் மீது அமுதகவிராயராற் பாடப்பெற்ற ஒருதுறைக்கோவை போன்றுளதாயினும் ஐயங்காரவர்கள் பாடிய இக் கோவையின் சிறப்பு அதிகமெனவே எல்லா வித்துவான்களும் மனமுவந்து கூறினார்கள். இக்கோவைநூல் விரைவில் அச்சியற்றப் பட்டு வெளிப்படுமாயின் தமிழ் வல்லார்கட்கு ஓர் நல்விருந்தாகு மென்பது திண்ணம். இவ்விருந்து என்று கிட்டுமென்று ஆவலுடன் எதிர்ப்பார்க்கின்றோம்.*

கோவை அரங்கேறியபோது இராசராச சேதுபதியவர்கள் மகாவித்துவான் ரா. இராகவையங்காரவர்களுக்குப் பொன்னாலான கடகத்தை அணிவித்துப் பெருஞ்சிறப்புச் செய்தார்கள். அப்போது மகாவித்துவான் அவர்கள்,

---

ஸ்ரீஸேது ஸம்ஸ்தானம் ஸாதாரண ஹு மஹாநவராத்திரி மஹோத்ஸவத்தில் வித்துவான்கள் பாடிய பாடல்கள் — முகவுரை — பக். 3-4.

''கன்னா முதமாக் கவியெழுது மென்கைக்குப்
பொன்னார் மணிக்கடகம் பூட்டினான் — மின்னார்
மடலெழுதும் வேளெங்கள் மாராச ராச
னடலெழுதும் வீர ரரசு''

என்னும் கவியால் தம் நன்றியைத் தெரிவித்துள்ளார்.

புலவர். மு. ரா. கந்தசாமிக் கவிராயர் ஒருதுறைக் கோவை நூலையும் நூலாசிரியரையும் குறித்து எழுதிய சிறப்புரைகள் இக்கோவை நூலுக்கு அமைந்த ஓர் அணிந்துரையாகும். மகாவித்துவான் அதன்பின் சேதுபதிகள் விருப்பப்படி வஞ்சிமாநகர் முதலிய நூல்கள் எழுதியும், வட நூல் மொழி பெயர்ப்பும், புதுக்கவி நூல்களும் ஆய்வுரைகளும் பலப்பல எழுதி வெளியிட்ட போதிலும் இராசராச சேதுபதி ஒருதுறைக்கோவை அச்சிடப்பெறாமலிருந்து விட்டது மன்னர் பெருமானும் மாண்புமிகு மகா வித்துவானும் மறைந்து பல ஆண்டுகளுக்குப்பின் இந் நூல் அச்சாகும் பேற்றினை இப்பொழுது பெற்றுள்ளது.

தமிழிலும் ஆங்கிலத்திலும் பெரும் புலமை பெற்றவரும், தில்லி மத்திய அரசின் செயலகத்தில் பணிபுரிந்து ஓய்வு பெற்றவரும், 'ஆனந்த மா நடம்', 'மாதவி அரங்கேறினாள்' முதலிய பல நூல்களின் ஆசிரியரும். வாசிப்பதையும் எழுதுவதையும் அருங்கலை விநோதமாகக் கொண் டவரும், இப்பொழுது சென்னையில் வாழ்ந்து வருபவருமாகிய கெழுதகை நண்பர் திரு. க. சி. கமலையா அவர்களின் தூண்டுதலே இந் நூல் அச்சில் வருவதற்கு முதற் காரணமாகும் நண்பர் கமலையா அவர்கள் தமிழ்ப் பண்பாட்டு மன்றத்தின் துணைத்தலைவராயிருந்த போது, 'ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள்' என்னும் நூலைப் பதிப் பித்தார்கள். இதில் தமிழுலகில் பெரும்புலமை பெற்று விளங்கிய அரசஞ் சண்முகனார் முதலிய பதின்மரின் வாழ்க்கையும் தொண்டும் இடம் பெற்றுள்ளன. இந் நூலுள் சேதுசமஸ்தான மகாவித்துவான் ரா. இராகவையங்கார் அவர்களைக் குறித்து என்னை எழுதுமாறு நண்பர் அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். மகாவித்துவான் அவர்களின் பெரும் புலமையை என் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன். ஆயினும் அவர்களுடன் பழகும் வாய்ப்பு எனக்கு வாய்க்காத சூழல். இந்த நிலையில் மகாவித்துவான் அவர்களின் நூல்கள், ஆய்வுரைகள் முதலியவற்றைத் தொகுத்து ஆராய்ந்து அவர்கள் வாழ்க்கை வரலாற்றையும் விரிவாகவே அமைத்தேன். அப்பொழுது மகாவித்துவான் அவர்களுடைய புதல்வர் இராமநாதபுரம் வித்துவான் ஆர். இராமாநுஜையங்கார் அவர்களுடன் தொடர்பு கொண்டேன்; அவர்கள் பற்பல குறிப்புகளைத் தந்துதவினார்கள். மகாவித்துவான்

அவர்கள் இயற்றிய நூல்களுள் இராசராசசேதுபதி ஒருதுறைக் கோவை, கீதைத் தாழிசை, ஆத்திசூடியுரை, பாரதநீதி வெண்பா முதலியன அச்சில் வராமை தெரியவந்தது. நண்பர் கமலையா அவர்களும் நானும் கோவை நூலை முதலிற் பெற்று அச்சிடலாம் எனக் கருதினோம். எங்கள் வேண்டுகோளுக்கு வித்துவான் இராமநுஜையங்கார் அவர்களும் மகிழ்வோடு இணங்கினார். அவர்களுக்கு எங்கள் நன்றியும் வணக்கமும் உரியனவாகுக.

'பாடலை மட்டும் அச்சிட்டால் அகப்பொருள்துறை பற்றிய இருபொருள்படப் பாடியுள்ள பகுதிகள் எல்லார்க்கும் எளிதில் விளங்கா. ஆதலால் பாடல்களுக்கு வேண்டும் அளவு குறிப்புரை எழுதவேண்டும்' என நண்பர் அவர்கள் எனக்குத் தெரிவித்தார்கள். மகாவித்துவான் அவர்களும் அங்கங்கே சிலசில பாடல்களுக்குப் பொருள்களைக் குறிப்பாகச் சுட்டியுமிருந்தார்கள். அதனால் ஆசிரியர் கருத்தோட்டம் எனக்குப் புலப்பட வாய்ப்பாகியது.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் நான் பணிபுரிந்த காலத்திலேயே குறிப்புரையை 400 பாடல்களுக்கும் எழுதி முற்றுவித்தேன். என்னுடன் பயின்ற ஒருசாலை நண்பரும் இப்பொழுது மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் தமிழியற் புலத்திலே ஆய்வாளராக இருப்பவரு மாகிய புலவர் திரு. ந. சேதுரகுநாதன் அவர்கள் நான் எழுதிய குறிப்புரையை முற்றும் நோக்கிச் சிற்சில திருத்தங்களையும் தெரிவித்துதவினார்கள். நண்பர் அவர்களுக்குப் பெரிதும் நன்றிக் கடப்பாடுடையேன்.

என் மேற்பார்வையிலேயே நூல் அச்சாக வேண்டும் என்று திரு. கமலையா அவர்கள் விரும்பியதால் தஞ்சாவூரில் அச்சுப்பணி நடந்துஇப்பொழுது நிறைவெய்துகிறது.

நாணிக்கண் புதைத்தல் என்னும் ஒருதுறையில் ஏனையோர் முன்பே பாடியிருப்பினும் மகாவித்துவான் இராகவையங்கார் அவர்களின் கற்பனைத்திறனும் கவியாற்றலும் நூலகத்து எங்கும் பரக்கக் காணலாம். தம்மை ஆதரித்து வந்த சேதுபதிகளிடம், குறிப்பாக இராச இராசேசுவர சேதுபதிகளிடம் எவ்வளவு அன்பும் நன்றியும் உடையவர்களாயுள்ளார்கள் என்பது பாடல்தோறும் பளிச்சிடக் காணலாம். பாடல்களின் பெரும்பகுதியும் இராசராச சேதுபதியவர்களின் மெய்க்கீர்த்தி மாலைதான். சேதுபதிகளின் வெற்றிச்சிறப்பு, கொடைச்சிறப்பு, அரசாட்சி மேன்மை, அவர்கள் செய்த பல்வேறு வகையான அறங்கள், தமிழையும் தமிழ்ப் புலவர்களையும் பேணிப்போற்றும் பெரும்பண்பு என்று இவையெல்லாம் தம் நன்றியுணர்வு வெளிப்படத் தமிழ் மரபுவழி எடுத்தியம்பியுள்ள திறம் கற்பாருள்ளத்தைப் பிணிக்க வல்லதாம்.

நூலினுள் பாடல்களில் பழைய எழுத்துவடிவங்களும் உரையில் நடைமுறை எழுத்துவடிவங்களும் இடம் பெற்றிருத்தல் காணலாம். இவ்வாறு அமைத்ததற்கு முக்கிய காரணம் நூலாசிரியரின் புதல்வர்தம் வேண்டுகோளேயாகும். கோவைப் பிரதியைத் தரும்பொழுது தம்முடைய தந்தையார் அவர்கள் எழுதியுள்ள பழைய வடிவத்திலேயே அச்சிடப்பட வேண்டும் என்னும் ஒரு வேண்டுகோளையும் முன்வைத்தார்கள். அதற்கு இணங்கவே பாடல்களை மட்டும் அவர் விரும்பியபடி அமைக்கலாயிற்று. இவ் எழுத்து வடிவ மாற்றங்களை வரலாற்று உண்மையாகக் கருதி ஏற்க வேண்டுகிறோம்.

நூலின் இறுதியில் பாடல் முதற்குறிப்பு அகராதியும் சிறப்புப்பெயர் முதலியவற்றின் அகராதியும் இணைக்கப்பட்டுள்ளன.

புலவர் புரவலர் படங்களை அரிதின்முயன்று பெற்று எங்களுக்கு அனுப்பித்தந்த இராமநாதபுரம் எஸ். எம். கமால் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகும்.

முகப்பில் ஆசிரியர் வரலாறு என்னால் எழுதப்பட்டுள்ளது. பாட்டுடைத் தலைவராகிய முத்துராமலிங்க இராசராச சேதுபதிகளின் வாழ்க்கையும் மதிப்பும் திரு. கமலையா அவர்கள் எழுதியுதவியுள்ளார்கள்.

இந்நூலைத் தக்க பதிப்பகத்தார்வழி வெளியிட வேண்டும் என்றும் அப்பொழுதுதான் நூல்கள் எளிதில் எல்லாருக்கும் கிட்ட வாய்ப்பாகும் என்றும் கருதினோம், இப்பொழுது தரமான தமிழ்நூல்களைப் பல்வேறு துறைகளிலும் அழகுற நல்லமுறையில் வெளியிட்டு வரும் சிதம்பரம் மணிவாசகர் பதிப்பகத்தாருடன் தொடர்பு கொள்ளத் தீர்மானித்தோம்; பதிப்பகத்தை இயக்கி வரும் பேராசிரியர் ச. மெய்யப்பன் அவர்களை அணுகிய போது அவர்கள் மனம் உவந்து இந்நூலை வெளியிட முன் வந்தார்கள். அவர்களுக்கும் நூலாசிரியரின் குமாரர் வித்துவான் ரா. இராமாநுஜையங்கார் அவர்களுக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தஞ்சை மாநகரில் உள்ள அச்சுக்கூடங்களைத் தேடி நான் அலைந்த போது இசைத்துறையிலும், மருத்துவத்துறையிலும் புகழ்பெற்று விளங்கிய ஆபிரகாம் பண்டிதர் நிறுவிய 'லாலி பிரஸ்' அறிமுகம் கிட்டியது. எனக்கு ஏற்கெனவே அறிமுகமாயுள்ள இசைப் பேராசிரியர் திரு. தனபாண்டியன் அவர்கள் இப்பொழுது அச்சக உரிமைபெற்று

நடத்திவரும் தம்முடைய மகளிடமும் மருகர் துரைபாண்டியன் அவர்களிடமும் அறிமுகம் செய்து வைத்தார்கள். அவர்களும் அச்சுக்கூடத்தில் பணிபுரியும் திரு. பாலகிருஷ்ணன் முதலிய நண்பர்களும் மிகுந்த ஆர்வத்துடன் நல்ல முறையில் அச்சியற்றப் பெரிதும் உதவியுள்ளார்கள். இவர்கள் எல்லோருக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

மறைந்த மாமேதை மகாவித்துவான் ரா. இராகவையங்கார் படைத்துள்ள பிறநூல்களும் அச்சில்வரத் துணைநிற்கும் வகையில் இக் கோவை நூலைத் தமிழுலகம் ஏற்று ஆதரிப்பதாக.

மு. சண்முகம் பிள்ளை.
க. சி. கமலையா

# தமிழன்னை போற்றி

தெண்ணெடு நல்வாடை முருகு மணக்கும்
    செவ்வியை குண்டலக் கேசிநற் றெய்வம்
சேரற் குவந்த திருமுகம் உள்ளாய்
    தேமிகு காவியங் கண்மகிழ் செய்வாய்
தண்டிரு வாய்மொழி வேத மொலிப்பாய்
    தந்தமென் முல்லை யிலக்கண மிக்காய்
சங்கக் களப்பரி பாட லிசைப்பாய்
    சார்வளை யாபதி யுங்கையின் மின்னும்! 1

மண்டிய தேவார மாரிபணி யாவை
    வான்மதி யிற்கலை சூழ வுடுப்பை
மன்னிய நூலிடை வைப்பைபல் காஞ்சி
    மீற்றநன் மேன்மணி மேகலை பூண்பை
பண்டைச்சிந் தாமணி யாலெழில் தோய்வை
    பல்சந்த மாலைகள் கோவைகள் கொள்வை
பாதஞ் சிலப்பதி காரந் தொடுப்பை
    பைந்தமிழ்ப் பாவை யினிப்பையிப் பண்பே! 2

தெள்ளிய சங்கக் கபிலர்நல் லோரா
    செய்யுள் வளஞ்செய்வித் தாய்தென் னிலத்தே
வள்ளுவ ராலுல கூட்டினை முப்பால்
    வண்கம்ப ராலிரு ளோட்டினை யப்பால்
ஒள்ளிய நெஞ்சிற் பெரும்புல வோரால்
    ஓரரு ளின்சுவை யுணவும் வைத்தாய்
எள்ளலில் தெய்வத நூலேணி யால்வா
    னேறவும் நேர்வழி கண்டனை எம்மோய்! 3

தத்துவ ராயரி னத்துவி தத்தின்
தத்துவ நாடெங்கு முய்த்துணர் வித்தாய்
பத்த மிலாத மகாவீரர் கொள்கை
பற்றுந லோரையும் வைத்துயர் வித்தாய்
சுத்தநல் லேசு தெளித்த மதத்திற்
றோயும் பலோரையும் மார்பி லணைத்தாய்
ஒத்தம கம்மது ரைத்த நெறிக்கே
உமறுப் புலவரை யுய்த்தளித் தாயே ! 4

வில்வித்தை வேல்வித்தை மேவிச் சிறந்தாய்
மேதினிக் கொத்த மரக்கல மூர்ந்தாய்
பல்வித்த கத்துந் தலைக்கொள நின்றாய்
பார்வளங் கண்டுநல் லேர்வளங் கண்டாய்
கல்விக்கண் மெல்லிய லாரை வளர்த்தாய்
கற்றவர் வீறக் கழகம் அமைத்தாய்
செல்வத்தி னாலிவண் வாழத் தெரித்தாய்
சீரரு ளாலுயர் வீடுந் திறந்தாய் ! 5

தேவினை நெஞ்சிற் றிகழவும் வைத்தாய்
சித்தியை ஞானியர் செப்பவும் வைத்தாய்
பாவினை நூலிற் சுவைக்கவும் வைத்தாய்
பத்தியைத் தொண்டர் புகழ்க்கிடை நட்டாய்
பூவினைக் காக்கென வேத்தியல் சொற்றாய்
புத்தியைக் காக்கப் புலவரை யுய்த்தாய்
யாவினைக் குங்குடி மக்களை வைத்தாய்
எத்தனை செய்தனை நற்றமி ழன்னே !

— மகாவித்துவான் ரா. இராகவையங்கார்

# சேது சமத்தான மகாவித்துவான் ரா. இராகவையங்கார்

## (1870 — 1946)

### மு. சண்முகம் பிள்ளை

தமிழுலகில் மகாவித்துவான் என்றால் திருவாவடுதுறை ஆதீன மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் திருப்பெயரே முன்னிற்கும். அதுபோலவே சேதுசமத்தான மகாவித்துவான் என்றால் ரா. இராகவையங்கார் நம் எண்ணத்தில் முற்படுவார். எத்தனையோ மகாவித்துவான்கள் சேது வேந்தர் அவையை அலங்கரித்தபோதிலும் ரா. இராகவையங்கார் அம் மகாவித்துவான்களுள்ளே முன்னணியில் வந்து நிற்கிறார்.

மகாவித்துவான் ரா. இராகவையங்கார் அவர்கள் 20–9–1870 - ல் தோன்றினார். இவர் பிறந்த ஊர் சிவகங்கைச் சீமையைச் சார்ந்த தென்னவராயன் புதுக்கோட்டை. இவருடைய தந்தையார் இராமானுஜையங்கார்; தாயார் பதுமாசனி அம்மையார். இவர் பிறந்த கோத்திரம் நைத்துருவகாசிப கோத்திரம் ஆகும்.

இளமையில் ஐந்தாம் வயதிலேயே தம் தந்தையாரை இழந்தார் இராகவையங்கார். இவருடைய தாய்மாமனார் சதாவதானம் முத்துசாமி ஐயங்கார் இராமநாதபுரம் சமத்தானத்தில் அரசவைப் புலவராய் அந்நாளில் சிறப்புடன் விளங்கினார். இவர் தமிழிலும், வடமொழியிலும், கன்னடம் முதலிய பிறமொழிகளிலும் வல்லவர். சதாவதானி என்பது இவர்தம் கல்வியின் மிகுசிறப்பால் பெற்ற விருதுப் பெயராகும். இத்தகு பெருமை பல கொண்ட தாய்மாமனாரின் ஆதரவில் இராகவையங்கார் இராமநாதபுரத்தில் கல்வி பயின்றார். மெட்ரிக்குலேசன் வரை பள்ளிக் கல்வி பெற்றதோடு தம் அம்மானிடமும் சமத்தானப் புலவர்களிடத்தும் தமிழும் வடமொழியும் பயின்றார். இளமையிலேயே கூரிய அறிவும் கவி பாடும் திறமையும் பெற்று இவர் விளங்கினார்.

இராகவையங்கார் தம் 18 ஆம் அகவையிலேயே மதுரைச் சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராய்ப் பணிபுரியத் தொடங்கினார். இச்சமயம் ஜானகி அம்மாளை வாழ்க்கைத் துணையாகப் பெற்றார். திருச்சியில் உள்ள சேஷையங்கார் பள்ளியிலும் சிலகாலம் இவர் தமிழாசிரியராக இருந்தார்.

மாண்புமிகு பாஸ்கர சேதுபதி மகாராசா அவர்கள் இராகவையங் காருடைய புலமைத் திறத்தை மெச்சித் தம் அவையில் தலைமை மகா வித்துவானாக்கினார். இவருக்குப் பல்லக்கு முதலிய வரிசைகளையும் நல்கினார். சமத்தான தர்ம மகமை நிதியிலிருந்து பசலிதோறும் ஆயுட் கால பரியந்தம் ரூபாய் 635 சம்மானமாகத் தரவும் உரிமைப் பத்திரம் பதிவுசெய்து தந்துள்ளார். அப் பத்திரத்தில் இராகவையங்கார் அவர் களுடைய பலதுறைப் புலமையையும் பாஸ்கர சேதுபதி அவர்கள் எடுத்துரைத்துப் பாராட்டியிருப்பது ஈண்டுக் காணத் தக்கதாம்.

> " நமது சமஸ்தானத்தில் பிறந்து வளர்ந்து நமது சமஸ் தானத்து அன்னப் பிரபாவத்திலேயே தமிழ்க் கல்வியில் பூரண பாண்டித்தியமுடையராய், ராவ்பதூர் பி. அரங்கநாத முதலியார் முதலிய பல கல்வியிற் பெரியோர்கள் மிகச் சிறப்பித்து எழுதிய மகாவித்துவானும் அநேக வருடங்களாக நமது சமஸ்தானத்துத் தலைமைத் தமிழ் வித்வானாயுள்ள தாங்கள் தமிழ் நூலுரைகள் முதலியன செய்கின்றதனாலும் தமிழிலுள்ள அரிய பெரிய விஷயங் களைப் பலர்க்கும் உபந்நியசித்தலாலும் அனேகர்க்குப் பூர்விகத் தமிழ்ப் பாஷையைப் போதித்துவருதலாலும் கிடைத்தற்கருமையா யுள்ள பழைய தமிழ் நூல்களைத் தேடிச் சேர்த்தலாலும் அவற்றைப் பரிசோதித்தலாலும் வெளியிடுதலாலும் இன்னும் பல நன்முயற்சி களாலும் தமிழ்ப் பாஷையை நன்ருய் வளர்ப்பவர்களாயும் நமது சமஸ்தானத்துச் செந்தமிழ்ப் பரீக்ஷாதிகாரத் தலைவராயும் நமது சமஸ்தானத்து வித்வத் அங்கத்தில் பரம முக்கியராயும் இருத்தலை ஆலோசித்து ............... திரமான சம்மானமாக இப்பத்திரத்தின் மூலம் நம்மால் கொடுக்கலாயிற்று " *

இப் பத்திரத்தில் பாஸ்கர சேதுபதி அவர்கள் இராகவையங்கார் அவர்கள் தமிழ்ப் புலமையிலும் தமிழ்ப் பணியிலும் சேது சமஸ்தானத்தில் எவ்வளவு சிறப்புடையராய் விளங்கினார் என்பதனை எடுத்துக்காட்டி யிருத்தல் காணலாம்.

சேதுவேந்தர் பேரவைக்கு வடமொழி, தமிழ், இசை முதலிய பல துறைகளிலும் வல்ல பெரும்புலவர்கள் அடிக்கடி வந்து தத்தம் கல்வித் திறத்தை வெளிப்படுத்திப் புகழொடும் சேதுபதிகளிடமிருந்து பெற்ற பெரும் பொருளொடும் திரும்பிச் செல்வது வழக்கமாயிருந்தது. அக் காலங்களில் இராகவையங்காரும் உடனிருந்து மகிழ்ந்து தம் கல்வி

* பத்திரத்தின் செய்திகளை முழுமையாக இக் கட்டுரையின் இணைப் பில் காணலாம்.

நலனைப் பலரும் வியக்கும் வண்ணம் வெளிப்படுத்தியும் வந்தார். இத்தகு கல்வியனுபவம் பிற்காலத்தில் அவருக்குப் பெரியதோர் துணையாய் அமைந்தது.

சேதுசமத்தான வித்துவானாக இவர்கள் விளங்கிய காலத்தில்தான் சுவாமி விவேகானந்தர் அங்கு வந்து சேதுபதிகளின் ஆதரவில் மேல்நாடுகளுக்குச் சென்று திரும்பினார். சுவாமி விவேகானந்தர் போன்ற பெரியார்களின் பழக்கம் இவருக்கு ஏற்பட ஒருவாய்ப்பாயிறறு. சேதுபதியை நாடிவந்து பொருளுதவி பெறற புலவர் பெருமக்கள் பலராவர். அப்புலவர்களுடனும் கலந்து பழகும் வாய்ப்பும் இவருக்கு நேர்ந்தது.

பாஸ்கர சேதுபதிகளின் ஆதரவில் பாண்டித்துரைத் தேவரவர்களின் முயற்சியால் மதுரை மாநகரில் தமிழ்ச் சங்கம் 1901 ஆம் ஆண்டு செப்டம்பர் 14 ஆம் நாள் நிறுவப் பெற்றது. இச் சங்கத்தை நிறுவும் பணியில் இராகவையங்கார் தேவர் அவர்களுக்குப் பெருந்துணையாயிருந்தார். நான்காம் தமிழ்ச் சங்கம் என இது போற்றப்பெற்றது. சங்கத்திலிருந்து தமிழ்ப்பணி புரியத் தம் அவைப் பெரும்புலவரான இராகவையங்காரைச் சேதுபதியவர்கள் அனுப்பி வைத்தார்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் நூற்பதிப்பு, ஆராய்ச்சித் துறைகளின் தலைவராய் இராகவையங்கார் அவர்கள் விளங்கினார்கள். மதுரைத் தமிழ்ச்சங்கமும் செந்தமிழ்ப் பத்திரிகையும் பெரும்புகழ் பெற்று விளங்குவதற்கு இவரே காரணமாயிருந்தார். இலக்கிய ஆராய்ச்சியும் சரித்திர ஆராய்ச்சியும் இவரால் பெரிதும் ஊக்குவிக்கப்பட்டன.

அந்நாளில் பல இடங்களுக்கும் சென்று பழஞ்சுவடிகள் தேடிச் சேர்த்துச் சங்கத்துப் பாண்டியன் புத்தகசாலையில் தொகுத்து வைத்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் 1902 ஆம் ஆண்டிலே செந்தமிழ் என்னும் திங்கள் இதழ் தொடங்கப்பெற்றபோது இப் பத்திரிகையின் முதல் இதழாசிரியராக இராகவையங்கார் பொறுப்பேற்றார். இப் பத்திரிகையில் 'ஆராய்ச்சி' என்னும் தலைப்பில் இவர்கள் தொடர்ந்து தமிழிலக்கிய இலக்கணம் முதலியன குறித்து ஆய்வுரைகள் எழுதி வந்தார். இவருடைய ஆழ்ந்த கல்வியும் நுண்ணிய ஆராய்ச்சித் திறனும் பொருள்களை முறைப்படப்பாகு படுத்திப் பார்த்து விளக்கும் பேராற்றலும் இவர் எழுதிய கட்டுரைகளில் புலனாகின்றன.

செந்தமிழ் வாயிலாகப் பழஞ்சுவடிகளிலிருந்து எடுத்து இவர் பதிப்பித்த நூல்களும் பலவாகும். அவையாவன: ஐந்திணையம்பது உரை, கனாநூல், வளையாபதிச் செய்யுட்கள், புலவராற்றுப்படை, இனியது நாற்பது உரை, நேமிநாதம் உரை, திருநூற்றந்தாதி

முத்தொள்ளாயிரச் செய்யுட்கள், பன்னிருபாட்டியல், தொல்காப்பியச் செய்யுளியல், நச்சினார்க்கினியர் உரை முதலியனவாகும். எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றாகிய அகநானூற்றைப் பதிப்பிக்கச் சங்கத்தின் வாயிலாக இவர் எடுத்த முயற்சி முற்றுப்பெறவில்லை. பின்னாளில் கம்பர் விலாசம் இராசகோபாலையங்கார் இந்நூலை வெளியிட முன்வந்த போது தாம் முன்பு தொகுத்து வைத்திருந்த குறிப்புகள் முதலியவற்றை அவருக்கு வழங்கி அந்நூல் சிறப்புற வெளிவர உதவினார். இவ்வாறு வேறு புலவர் சிலருக்கும் இவர் ஏடுகள் முதலியன தந்து உதவியுள்ளார்.

கைந்நிலைப் பிரதியை இ. வை. அனந்தராமையர் விரும்பியபோது இவர் மனமுவந்து அவருக்கு அதனை அளித்தார். இவ்வாறே தொல்காப்பிய இளம்பூரணம் செய்யுளியல் உரைப் பிரதியையும் நவநீதப் பாட்டியல் உரையையும் இவர் யாதொருவகைக் கைம்மாறும் கருதாது பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களுக்குத் தந்தனர். பிள்ளையவர்கள் அவற்றைத் தம் பதிப்பில் நன்கு பயன்படுத்திக் கொண்டுள்ளார். தாம் கற்ற கல்வியைத் தம்முடன் மாய்ந்து போக விடாதபடி அறிஞர் பிறருக்கும் உதவவேண்டும் என்னும் பேரவா உடையார் இராகவையங்கார் என்பது மேற்கூறியவற்றால் தெரிய வரும்.

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களைப் போலவே இவரும் நம் பண்டைநூற் கருவூலங்களைத் தேடித்தொகுத்து வைப்பதில் பேரூக்கம் கொண்டிருந்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு இவர் தேடியளித்த சுவடிகள் பலவாகும். பின்னாளில் தம்மிடமிருந்த ஏட்டுச்சுவடிகள் பல வற்றைப் பலர்க்கும் பயன்படும் வகையில் அண்ணாமலைப் பல்கலைக் கழக நூல் நிலையத்திற்கு இவர்கள் தந்துவிட்டமை குறிப்பிடத்தக்கது. அவர்தம் இல்லத்தில் எஞ்சியிருந்த சுவடிகளை (51) அவருடைய புதல்வர் வித்துவான் இராமானுஜ அய்யங்கார் சில திங்களுக்குமுன் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு அளித்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

பழைய சுவடிகளைக் காகிதத்தில் பிரதி செய்து இவர் படித்ததும் உண்டு. இராமநாதபுரத்தில் உள்ள அவர் மாளிகைக்கு நான் சென்றிருந்த போது மகாவித்துவான் அவர்களால் எழுதப்பெற்ற நீலகேசி உரையுடன் கூடிய கையெழுத்துப் பிரதியை அவர் மகனார் காட்டினார். சமணசமயம் சார்ந்த தத்துவக் கருத்துகள் மிகுந்த இந்நூலையும் உரையையும் பிரதிசெய்து படித்தமையை நோக்கினால் சமயக் காழ்ப் பின்றித் தமிழ்நலம் பேணுவதொன்றே இவர்தம் நோக்கமாயிருந்தது என்பது தெரியவரும்.

சோழமன்னர் விக்கிரமன், குலோத்துங்கன், இராசராசன் என்னும் மூவர் அவையிலும் கவிராட்சசன் என்னும் புகழுடைய ஒட்டக்கூத்தர் தலைமைப் புலவராய்ச் சிறந்து விளங்கினார். அதுபோலவே இராகவையங்கார் அவர்களும் பாஸ்கர சேதுபதி, முத்துராமலிங்க ராசராசேசுவர சேதுபதி, சண்முக ராசேசுவரநாகநாத சேதுபதி ஆகியோர் காலத்திலும் தொடர்ந்து சேதுசமத்தான மகாவித்துவானாயிருந்தார். தந்தை, மகன், பேரன் மூவரும் நம் மகா வித்துவானிடம் பெரும் மதிப்பு வைத்துப் போற்றிவந்தனர்.

'இன்பாற் கரனாிராசரா சேச்சுரச்சேய்
தென்னாக நாதவர சேதுபதி—மன்னரிவர்
வீறுமே வன்ன மிசையாதே லென்னாவே
கூறுமே பாரி கொடை'

எனத் தாம் செய்த பாரிகாதைக் காவியத்தில் தம்மைப் புரந்த சேதுபதிகள் மூவரையும் நன்றியுடன் போற்றியுள்ளமை காணலாம்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் 13 ஆம் ஆண்டு விழாவில் இவர் படித்த 'சேதுநாடும் தமிழும்' என்னும் ஆய்வுரை தனிநூலாகச் சங்கத்தின் வழி வெளியிடப்பட்டுள்ளது. இராசராச சேதுபதியவர்களின் தூண்டுதலால் 'வஞ்சிமா நகரம்' என்னும் ஆராய்ச்சி நூலை ஆக்கி வெளியிட்டார். செந்தமிழில் தாம் எழுதிவந்த சங்ககாலப் பெண்புலவர்களின் வரலாற்றைத் தொகுத்து 'நல்லிசைப் புலமை மெல்லியலார்' என்னும் பெயரில் வெளியிட்டார். பிற்குறித்த இரு நூல்களும் அந்நாளில் கல்லூரி மாணவர்களுக்குப் பாடப்புத்தகமாகவும் அமைக்கப்பெற்ற சிறப்புக்குரியனவாகும்.

அவ்வப்போது பாடல்நூல்கள் பலவும் இவர் ஆக்கி வெளியிட்டார். அவற்றுள் புவி எழுபது, தொழிற்சிறப்பு, திருவடிமாலை, சீராமநாமப் பாட்டு என்பவை குறிப்பிடத்தக்கன. இராசராசேசுவர சேதுபதி ஒரு துறைக் கோவை ஒரு சிறந்த படைப்பாகும். அவ்வப்போது இவர் பாடிய தனிப்பாடல்களும் பலவாகும்.

சென்னை, மதுரை, தஞ்சை முதலிய இடங்களில் நடைபெற்ற தமிழ் விழாக்களில் கலந்துகொண்டு தலைமை வகித்தும் சொற்பொழிவாற்றியும் அவையோரை மகிழ்வித்து வந்தார். வடமொழியிலும் வல்ல இவர் இருமொழி நூல்களிலும் இனிய பகுதிகளை எடுத்துகாட்டிச் சொற்பொழிவாற்றும் முறை கேட்போரைக் கவரவல்லதாயிருந்தது. இவருடைய அரிய பெரிய பொருள் நயம்மிக்க சொற்பொழிவுகளைக் கேட்பதன் பொருட்டுப் பெருந்திரளாகத் தமிழறிஞர் கூடுவது வழக்கமாயிருந்தது. சென்னைப் பல்கலைக்கழகத்தில் கம்பராமாயணம் பற்றியும் வேறு சில

பொருள்கள் பற்றியும் அரிய உரைகள் பலமுறை நிகழ்த்தியுள்ளார். சென்னை நகரிலுள்ள அறிஞர் பெருமக்கள் பலரும் இவருடைய சொற் பொழிவுக்கு வந்திருந்து கேட்டு இன்புற்றனர். இவர்களுள் மகாகனம் சீநிவாச சாத்திரியார், சர். எஸ். வரதாச்சாரியர், டாக்டர் உ. வே, சாமிநாதையர் முதலிய சிறந்த பேரறிஞர்களும் வந்து கலந்துகொண்டது குறிப்பிடத் தக்கது. இவருடைய வாக்குவன்மை அறிஞர் பெருமக் களையும் பிறரையும் எவ்வாறு கவர்ந்து இழுத்தது என்பதற்கு இந் நிகழ்ச்சி தக்க எடுத்துக்காட்டாகும்.

வடமொழிநூல்கள் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்தும் உள்ளார். பகவத்கீதை முழுமையும் தாழிசைப் பாக்களில் மூலநூலின் சொற்பொருளமைதி பிறழாவண்ணம் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இந்நூல் இன்னும் அச்சாகவில்லை. இக்கீதைத்தாழிசை குறித்து விரிவு ரைகளும் சென்னை முதலிய இடங்களில் ஆற்றினார். மகாகனம் வி. எஸ் சீநிவாச சாத்திரியார் அவர்களின் வேண்டுதலால் காளிதாச மகாகவியின் சாகுந்தலத்தைப் பாட்டும் உரையும் கலந்த நடையில் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். வடமொழிச் சுலோகத்திற்குச் சந்தப் பாடலும் வட மொழியிலும் பாகத்திலும் உள்ள உரைநடைக்குத் தமிழுரை நடையு மாக அமைத்துள்ளார். இம் மொழிபெயர்ப்பு நூல் வி. எஸ், சீநிவாச சாத்திரியார் அவர்களுடைய பொருளுதவியால் 1938-ல் பதிப்பிக்கப் பெற்றது. வால்மீகி இராமாயணத்தில் சில பகுதிகளையும் இரகுவமி சத்தில் சில சருக்கங்களையும் இவர் தமிழாக்கம் செய்துள்ளார், வியாச பாரதத்திலுள்ள நீதிப் பகுதிகளை வெண்பாவில் அமைத்து 203 பாடல் களில் 'பாரத நீதிவெண்பா' என்னும் ஓர் அறநூலையும் ஆக்கியுள்ளார். வடமொழிநூல்களின் மொழிபெயர்ப்புத் தொண்டினைச் சிறப்பிக்கு முகத்தான் இவருக்கு 'பாஷா கவிசேகரர்' என்னும் விருதை அறிஞர் பேரவை சூட்டி மகிழ்ந்தது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1935 ஆம் ஆண்டு தமிழ் ஆராய்ச்சித்துறை என ஒரு தனிப்பகுதி தோற்றுவிக்கப்பட்டது. இத் துறையில் முதன்மை ஆராய்ச்சியாளராக மகாவித்துவான் ஐயங்கார் அவர்களை அழைத்தனர். தம்முடைய 65 ஆம் வயதில் இப் பதவியை ஏற்று 1941 வரை ஆறு ஆண்டுகள் இங்கே பெருந்தொண்டாற்றினர். ஆராய்ச்சித்துறைப் பணிகளோடு முதுகலை மாணவர்களுக்குக் கற்பித்தும் வந்தார். ஐயங்கார் அவர்களின் பெரும்புலமையும் வாக்குவன்மையும் போதனாமுறையும் மாணவர்களைப் பெரிதும் ஈர்த்தன. மாணவர்கள் இவரிடம் பாடம் கேட்டலைப் பெரும் பேறாகக் கருதினர்.

'பாரிகாதை' என்பது இவர் ஆக்கிய தமிழ்க் காவியம். இக்காவியம் அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில் இராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் அரங்கேற்றம் செய்விக்கப் பெற்றது. இதுவே அப்பல்கலைக் கழகத்தின் முதல் தமிழ் வெளியீடாக 1937-ல் வெளியிடப் பெற்றது. அடுத்து இவர் எழுதிய 'தமிழ் வரலாறு' இரண்டாவது வெளியீடாக 1941 - ல் வெளிவந்தது. அண்ணாமலைப்பல்கலைக்கழக முதுகலை மாணவர்க்குக் குறுந்தொகையைப் பாடம் சொன்னபோது நல்லபல பாடங்களும் புதிய பொருள்களும் இவர்கள் கண்டார்கள். தாம் கண்ட புதுவிளக்கங்கள் அமைய குறுந்தொகை உரை நூலை இவர் ஆக்கினார். இதில் 112 பாடல்களை உரையுடன் பின்னாளில் அப்பல் கலைக்கழகம் வெளியிட்டது. எஞ்சிய பகுதிகள் வெளிவராமல் போனது தமிழுக்கு ஒரு பேரிழப்பேயாகும். பத்துப்பாட்டுள் பெரும்பாணாற்றுப் படை, பட்டினப்பாலை என்னும் இருபெரும் பாடல்களுக்கு ஆராய்ச் சியுரை எழுதியுள்ளார். தித்தன், கோசர் பற்றி இவர் எழுதிய ஆய்வுரை களும் தனி நூலாக வந்துள்ளன. இவையெல்லாம் அண்ணாமலைப்பல் கலைக்கழகத்தில் பணியாற்றியபோது படைக்கப்பட்டனவாகும்.

1941-ல் அண்ணாமலைப்பல்கலைக்கழகத்திலிருந்து ஓய்வு பெற்ற பின் மகாவித்துவான் அவர்கள் இராமநாதபுரத்தில் உள்ள தம் இல்லத்தில் வாழ்ந்து வந்தார்கள். இவர்தம் அருமைப் புதல்வராகிய வித்துவான் ரா. இராமாநுஜ அய்யங்கார் தந்தையாரின் பெருமைகளை நன்கு அறிந்தவராதலின் தந்தைக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் சரிவரச் செய்துவரலானார். கண்பார்வைக் குறைவாலும் உடல் தளர்வாலும் அதன்பின் மகாவித்துவான் அவர்கள் வெளியூர்களுக்குச் செல்வதை நிறுத்திவிட்டார். தம்மை அடுத்துவந்து கேட்டவர்களின் ஐயங்களைப் போக்கித் தமிழ் விருந்தினை அளித்துக் கொண்டிருந்தார். இடை யிடையே சேதுபதிகளைக் கண்டு அளவளாவியும் வரலாயினர்.

இவ்வாறாகத் தம் ஆயுட்காலம் முழுமையும் தமிழைக் கற்றும் கற்பித்தும் பெருந்தொண்டாற்றியவர் இவர். என்றும் நிலைத்து வாழும் பாடல் நூல்களையும் உரைநடை நூல்களையும் ஆக்கியளித்துப் பெரும் புகழை நிலைநாட்டியவர். இத்தகு பெருமை படைத்த மகாவித்துவான் அவர்களின் மறைவு விய ஆண்டு ஆனி மாதம் 2 ஆம் நாள் வியாழக் கிழமையன்று ( 11–7–1946 ) நிகழ்ந்தது. அப்பொழுது அவர்களுடன் பழகிய பேராசிரியர்களும் கவிஞர்களும் பிறரும் அவர்களுடைய மறைவு குறித்து இரங்கி எழுதிய உரைகளும் பாடல்களும் பலவாகும். மகா வித்துவான் அவர்கள் முதல் ஆசிரியராய் விளங்கி வெளியிட்ட செந்தமிழ்ப் பத்திரிகையின் அந்த ஆண்டு ஆனிமாத இதழை மகாவித்துவான் அவர் களின் நினைவு இதழாக வெளியிட்டது குறிப்பிடத்தக்கது.

சிறந்த நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர், பத்திராசிரியர், பதிப்பாசிரியர், ஆராய்ச்சியாளர், சொற்பொழிவாளர், கவிஞர், மொழி பெயர்ப்பாளர், சமயநூலறிஞர், மொழிநூலறிஞர் என்று இத்திறத்தாருள் எல்லாம் முன் எண்ணத்தக்கவராய் விளங்கியவர் மகாவித்துவான் அவர்களாவர். தமிழ் உலகில் பெரும்பணி புரிந்த பேராசிரியர்களுள் இவர் தனியிடம் பெற்றுத் திகழ்பவராவர். 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்னும் வள்ளுவர் வாக்கிற்கு இலக்கியமாக இலங்குபவர் மகாவித்துவான் இராகவையங்கார் அவர்கள். இவர்கள் புகழ் தமிழுள்ள வரை நிலைத்து நிற்கும். இவர்தம் மெய்ப்புகழைக் குறித்து நாவலர் சோமசுந்தரபாரதியார் பின்வருமாறு புகழ்மாலை சூட்டியுள்ளார்:

'அறம்கூறும் வள்ளுவனாம் அருங்கவிசொற்
கபிலனுமாம் அஞ்சா நெஞ்சத்
திறங்கூறும் கீரனவன் திட்பமதி
யொட்பமிகத் திகழும் செஞ்சொல்
மறங்கூறும் பாவரசன் வன்புகழா
ரிராகவப்பேர் வம்பக் கம்பன்
புறங்கூறும் பழியஞ்சும் புலவனைநம்
தமிழிழக்கும் புதுமை என்னே!

'அம்புவியாள் செம்பியர்மூ வரசர்தொழத்
தமிழாண்ட கூத்தர் போல
செம்பியர்சீர்ச் சேதரசர் மூவர்முறை
முதல்வரிசைச் சிறப்புச் செய்யத்
தம்புலமை வீறுபுதுச் சங்கச்செந்
தமிழ்த்தலைமை தாங்கி ஓங்கிப்
பம்பிசையார் பாவலர் இராகவனார்
பெருமையெவர் பகர வல்லார்'

—:0:—

# மகாவித்துவான் படைப்புகள்

## பதிப்பு நூல்கள் ( 15 )

### (அ) சங்க நூல்கள் ( 4 )

| | |
|---|---|
| அகநானூறு | 1901, 1921 |
| குறுந்தொகை விளக்கம் | 1946 |
| பெரும்பாணாற்றுப்படை | 1949 |
| பட்டினப்பாலை | 1951 |

### (ஆ) பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் (4)

| | |
|---|---|
| இனியவை நாற்பது | பழையவுரையுடன் |
| ஐந்திணை ஐம்பது | ,, |
| திணைமாலை நூற்றைம்பது | ,, |
| நான்மணிக்கடிகை | ,, |

### (இ) இலக்கண நூல்கள் (3)

| | |
|---|---|
| நேமிநாதம் - மூலமும் உரையும் | 1903 |
| பன்னிரு பாட்டியல் | |
| தொல்காப்பியம் : செய்யுளியல் நச்சினார்க்கினியருரை | 1917 |

### (ஈ) பிற நூல்கள் (4)

கனா நூல்

திருநூற்றந்தாதி

புலவராற்றுப்படை

முத்தொள்ளாயிரச் செய்யுட்கள்

## ஆசிரியர் இயற்றிய நூல்கள் (22)

### (அ) செய்யுள் நூல்கள் ( 6 )

| | |
|---|---|
| புலி எழுபது | 1927 |
| தொழிற் சிறப்பு | 1932 |
| திருவடிமாலை | 1933 |

நன்றியில் திரு

| | | |
|---|---|---|
| பாரி காதை | | 1937 |
| இராசராச சேதுபதி ஒருதுறைக் கோவை | | 1983 |

(ஆ) உரைநடை நூல்கள் (7)

| | | |
|---|---|---|
| சேதுநாடும் தமிழும் | | 1924 |
| வஞ்சி மாநகர் | (1918) | 1932 |
| நல்லிசைப் புலமை மெல்லியலார்கள் | | |
| அண்டகோள மெய்ப்பொருள் | | |
| தமிழ் வரலாறு | | 1941 |
| தித்தன் | | 1949 |
| கோசர் | | 1951 |

(இ) மொழி பெயர்ப்பு (1)

| | |
|---|---|
| அபிஜ்ஞான சாகுந்தலம் | 1938 |

(ஈ) அச்சிடப்படாத நூல்கள் (8)

பகவத்கீதைத் தாழிசை

பாரத நீதி வெண்பா

காவல் தலைமை

கடவுள் மாலை

திருப்புல்லையமகவந்தாதி - உரையுடன்

திருவேங்கட மாயோன் மாலை

ஆத்திசூடி உரை

பல்லட சதகம்

— :0: —

## இராமநாதபுரம் சமஸ்தானம் மகாராஜா

## பாஸ்கர சேதுபதி அவர்கள்

## சமஸ்தான மகாவித்துவான் ரா. இராகவையங்கார்

## அவர்களுக்கு அளித்த உரிமைப் பத்திரம்

1901 ஹூ நவம்பர் மீ 4உ மதுரை ஜில்லா இராமநாதபுரம் சமஸ்தானம் லேட் ராஜா முத்துராமலிங்க சேதுபதி மகாராஜா அவர்கள் புத்திரர் மறவ ஜாதி சிவமதம் ராஜா அந்தஸ்துள்ள ஸ்ரீமத் ஹிரண்ய கர்ப்பயாஜி ரவிகுல முத்து விஜய ரகுநாத ராஜாயம் பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் இராமநாதபுரத்தில் இருக்கும் லேட் ராமானுஜ அய்யங்கார் புத்திரர் பிராமண ஜாதி வைஷ்ணவ மதம் வித்வத் ஜீவனம் சேது சமஸ்தானம் தமிழ் வித்வான் ஆர். இராகவ அய்யங்காருக்கு எழுதிக் கொடுத்த செட்டில் மெண்டு தஸ்தாவேஜு. ஒருவன் இவ்வுலகிற் செய்ய வேண்டிய தர்மங்கள் பலவற்றிலும் தனது தாய்ப்பாஷையின் பொருட்டுச் செய்யும் தருமம் அதிகம் சிறந்ததாகும். நமது சமஸ்தானம் தமிழையே தனக்குத் தாய் பாஷையாகவுடைத்தாதலால் எமது முந்திய ராஜாக்களெல்லாம் பரம்பரையாகத் தமிழ் வித்துவான்களுக்கு ஏராளமான உபகாரங்கள் செய்துள்ளது பிரசித்தமானது. சேர சோழ பாண்டியர்கட்குப் பின் சுத்த தமிழ் அரசர்களான சேதுபதிகளே தமிழ் பாஷாபிவிருத்தி செய்பவர்களும் தமிழ் வித்துவான்களை ஆதரிப்பவர்களும் ஆகின்றார்கள். தமிழ் வித்துவான்களுக்குப் பரம்பரையாகப் பெற்றுவரக்கூடிய சாசுவத தர்மங்கள் செய்து வருவது இந்த சமஸ்தானத்தில் தொன்றுதொட்டு வரும் வழக்கமே. இக்காலத்துக்குத் தக்க தமிழ் வித்துவான்கள் மிகச் சிலரானமையாலும் அச்சிலருக்கும் கவர்மெண்டார் தக்க உதவியொன்றும் செய்யாமையாலும் நமது, புராதன தமிழ் பாஷையானது விருத்தியடையாது குறைகின்றது. இவ்வாறு நமது அருமைத் தாய் பாஷை குறைந்து கெடாதபடி பாதுகாக்குமிடத்து அப்பாஷையை நன்றாய்க் கற்றுத் தேர்ந்த வித்துவான்களே முதலில் பாதுகாக்கத் தக்கவர்களாகின்றார்கள். அவர்களாலேதான் அப்பாஷையின் உயர்வும் அருமையும் பெருமையும் இனிமையும் புலப்படுவதோடு அப்பாஷை வளர்ந்து நிலைபெறுதலும் உண்டாவது. ஆதலால் நமது சமஸ்தானத்தில் பிறந்து வளர்ந்து நமது சமஸ்தானத்து அன்ன பிரபாவத்தினாலேயே தமிழ்க் கல்வியில் பூரண பாண்டித்தியமுடையவராய் ராவ்பகதூர் பி. அரங்கநாத முதலியார் முதலிய பல கல்வியில் பெரியோர்கள் மிகச் சிறப்பித்து எழுதிய

மகாவித்துவானாய் அனேக வருடங்களாக நமது சேது சமஸ்தானத்துத் தலைமைத் தமிழ் வித்துவானாய் உள்ள தாங்கள் தமிழ்நூலுரைகள் முதலியன செய்கின்றதனாலும் தமிழிலுள்ள அரிய பெரிய விஷயங்களைப்பலர்க்கும் உபந்யசித்தலாலும் அனேகர்க்குப் பூர்வீகத் தமிழ் பாஷையைப் போதித்து வருதலானும் கிடைத்தற் கருமையாயுள்ள பழைய தமிழ் நூல்களைத் தேடிச் சேர்த்தலானும் அவற்றைப் பரிசோதித்தலானும் வெளியிடுதலாலும் இன்னும் பல நன்முயற்சிகளாலும் தமிழ்ப் பாஷையை நன்றாய் வளர்ப்பவர்களாயும் நமது சமஸ்தானத்துச் செந்தமிழ் பரீக்ஷாதிகாரத் தலைவராயும், நமது சமஸ்தானத்து வித்வத் அங்கத்தில் பரம முக்கியராயும், இருத்தலையாலோசித்து தங்கள் போன்ற பண்டிதர்களையும் ஐவேஜி இல்லாத கோவில் சத்திரம் பாடசாலை ஏழைகள் முதலியவர்களையும் பாதுகாப்பதற்கென்று தொன்றுதொட்டு எற்பட்டுள்ள நமது சமஸ்தானத்துத் தர்மமகமை ஐவேஜியினின்று தக்க தமிழ்வித்வானான தங்களுக்கு காலக்ஷேபாதிகளுக்குச் சௌகரியமாகத் திரவிய சகாயம் செய்து கொடுக்க வேண்டுவது இச் சமஸ்தானத்தின் முக்கிய தர்மமும், அதுவே நமது முந்திய சேதுபதிகள் வழக்கமுமாதலால் தங்களுக்கு மாதம் 1-க்கு ரூ. 50க்குக் குறையாமல் கிராண்ட் ஏற்படுத்தி ஷை தர்ம மகமை ஐவேஜியில் தங்கள் ஆயுட்காலப் பரியந்தம் மாற்றப்படாத முக்கிய ஸ்திரமான ஐட்டமாக வைத்துத் தங்களுக்குச் செல்லாக்கி வரும்படி 1900 ஹூ பிப்ரவரி மாதம் 21உ யில் நம்மால் ஷை தர்ம மகமைக்குப் ப்ரொஸீடிங்ஸ் எழுதப்பெற்று தாங்களும் மாசம் 1-க்கு 50ஆக மேற்படி மகமை ஐவேஜியில் பெற்று வருகின்றீர்கள். இப்போது நாம் நமது சமஸ்தான தர்ம மகமை சம்பந்தமாக ஸ்திரமான ஏற்பாடுகள் செய்து வருவதில் தாங்கள் ஷை மகமை ஐவேஜியின் தர்மத்தில் முக்கிய ஸ்திரமான ஐட்டத்தில் சேர்ந்தவர்கள் ஆதலாலும் தாங்கள் நமது சேது சமஸ்தான வித்வானாக இருத்தலைத் தவிர வேறு எந்த சமஸ்தானத்திலும் கல்விச் சாலையிலும் தங்கள் ஆயுள் கால பரியந்தம் சர்வீஸுக்குப் போகப்படாதென்ற நம்முடைய உத்தரவுக்குத் தாங்கள் கட்டுப்பட்டு ஒப்புக் கொண்டிருப்பதினாலும் ஷை ப்ரொஸிடிங்ஸை அனுசரித்து மேல்கண்ட மாசமொன்றுக்கு ரூ. 50ஆக உள்ள கிராண்டினை பசலி ஒன்றுக்கு ரூ 600ஆக வைத்து நம் மூன்னோர் முறைமையை அனுசரித்து நம்மால் தங்கள் வித்தியா கௌரவத்தைப் பாராட்டித் தங்களுக்குச் சம்மானிக்கப்பட்ட பல்லக்கின் செலவுக்காக ஷை தர்மமகமை ஐவேஜியினின்று தங்களுக்குக் கொடுத்துவர ஏற்பட்டபடி ஹூ 1க்கு ரூ35-ம் சேர்த்து ஆக பசலி ஒன்றுக்கு ரூ 635. அறுநூற்று முப்பத்தைந்து வீதம் ஹூ 1311ம் பசலி முதல் தங்கள் ஆயுள் காலம் வரை தங்களுக்குச் செல்லாக்கி வரவேண்டிய ஸ்திரமான சம்மானமாக ஷை தர்மமகமை ஐவேஜியில் இதன் மூலம் ஏற்படுத்தியிருப்பதனாலே அதை ஹூ 1311ம் பசலி முதல் பசலி தோறும் தங்கள் ஆயுள் காலம் வரை

மதுரை டிஸ்டிரிக்ட் ராமநாதபுரம் சமஸ்தானம் ராமநாதபுரம், பரம்பக்குடி பாம்பன் இந்த டிஸ்டிரிக்ட்களுக்குச் சேர்ந்த கஸ்பா ராமநாதபுரம் தாலுகா தர்ம மகமை ஐவேஜியினின்று சமஸ்தானம் திவான் டிரஸ்டி அவர்களிடமும், சமஸ்தானத்தை அனுபவிக்கிற வர்களிடமும் சமஸ்தானம் லெஸ்ஸீகளிடமும் தாங்கள் நேரில் வசூலித்து உபயோகித்துக் கொள்ளத் தங்களுக்குச் சர்வவித அதிகாரமும் இப்பத்திரத்தின் மூலம் நம்மால் கொடுக்கலாயிற்று. ஷை தாலுகா ஐவேஜியினின்று தங்கள் தர்மமகமை ஆயுள் காலம் வரை பசலி தோறும் தங்களுக்குக் கிடைக்க வேண்டிய இந்த ரூ 635ம் தாங்கள் வசூலித்துக் கொள்ளுகிற விஷயத்தில் சட்டப்படிக்குள்ள சகல நடவடிக்கைகளையும் தாங்களே நடத்திக்கொள்ள சர்வவித அதிகாரமும் தங்களுக்கு இதன் மூலம் கொடுத்திருக்கின்றோம். ஷை பசலி முதல் பசலி தோறும் ஷை தாலுகா தர்ம மகமை ஐவேஜியில் ரூ 635 தங்கள் ஆயுள்கால பரியந்தம் தங்களுக்கு முந்தின ஸ்திரபாத்தியமாய் இருக்க வேண்டியது. இந்த சம்மானம் யாராலும் தங்கள் ஆயுள்காலம் வரை மாற்றப்படாது. ஸ்திரமாக ஷை தாலுகா தர்ம மகமை ஐவேஜியில் ஏற்படுத்தப்பெற்றிருக்கிறது. ஷை பசலிக்கு சூலை ஆகஸ்டு இந்த இரண்டு மாசங்களுக்கும் மாசம் 1க்கு ரூ. 50 வீதம் நமது சமஸ்தானம் ராஜசிங்க மங்கலம் தாலுகா தர்ம மகமை ஐவேஜியினின்று ஷை 1311-ம் பசலிக்கு ரூ. 535ம் இனி வரும் பசலிகளுக்கு பசலி 1க்கு 635ம் ஆகத் தாங்கள் சமஸ்தானம் திவான், டிரஸ்டி ஆகியவர்களிடமும் சமஸ்தானத்தை அனுபவிக்கிறவர்களிடமும் சமஸ்தானம் லெஸ்ஸிகளிடமும் பெற்று வருகிறது. தங்கள் ஆயுள்காலம் வரை நமது சேது சமஸ்தான வித்துவானாக இருத்தலுடன் நமது முதன்மையான சகாயத்தினால் ஏற்படுத்தப் பெற்றிருக்கிற மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தங்களுக்கு இஷ்ட காலம் வரை நம்முடைய அனுமதியின் பேரில் எடிட்டராக இருப்பதில் அவ்வேலைகளையும் தங்கள் வித்தையின் பிரகாசத்திற்கும் தமிழ் அபிவிர்த்திக்கும் ஏதுவாகிய இதர வேலைகளையும் பார்த்து அவைகளுக்குரிய பிரதிபிரயோஜனங்களையும் சம்மானங்களையும் ஷை சங்கத்திலும் பிறரிடத்திலும் தாங்கள் அடைவதில் இதனால் யாதொரு தடையுமில்லை நமது சமஸ்தானம் திவான் டிரஸ்டி அவர்கட்கும் மேற்குறித்த விவரங்களைக் கண்டு தங்களுக்குப் பத்திரம் எழுதிக் கொடுத்து விட்டதைத் தெரிவித்து ஷை யார்களை இனிமேல் நேரே ஷை பசலி முதல் பசலி தோறும் ஷை தொகையைத் தாலுகா தர்ம மகமையினின்று முதன்மையாகத் தங்கள் ஆயுள்காலம் வரை தங்களுக்குச் செல்லாக்கி வரும்படிக்கு யாதாஸ்துகளும் எழுதி அனுப்பியிருக்கிறோம். இந்தப்படிக்கு நாம் நமது மனோராஜியில் எழுதிக் கொடுத்த செட்டில்மெண்டு தஸ்தாவேஜு.

—:0:—

# இராசராசேசுவர சேதுபதி

## (1889—1928)

க. சி. கமலையா

**தோற்றம்**

முத்துராமலிங்க சேதுபதி என்ற இராசராசேசுவர சேதுபதி 3-6-1889 ஆம் நாளன்று பிறந்தார். தந்தை புகழ்பெற்ற பாஸ்கர சேதுபதி; தாயார் சிவபாக்கியம் நாச்சியார். இவர் முத்துராமலிங்க சேதுபதி என்னும் பெயரைக் கொண்ட மூன்றாம் சேதுபதியாவார்.

**முத்துராமலிங்கர் மூவர்**

முதலாம் முத்துராமலிங்க சேதுபதி சுதந்திர மன்னராய் மறவர் நாட்டையாண்டவர். 1763 முதல் 1772 வரையிலும் 1782 முதல் 1795 வரையிலும் அரசாண்டவர். முகம்மதியர்கள் மதுரையையும் தஞ்சாவூரையும் கைக்கொண்டபோதிலும் சந்தாசாகிப்பால் மறவர் நாட்டை அடக்க முடியவில்லை. ஆங்கிலேயர் - சந்தாசாகிப் சூழ்ச்சியால் சிறைப்படுத்தப் பட்டுச் சென்னையில் இறந்தார். இரண்டாம் முத்துராமலிங்க சேதுபதி காலத்தில் ஆங்கில ஆட்சிக்குட்பட்ட ஜமீனாக இராமநாதபுரம் இருந்தது. முத்தமிழிலும் வல்லவராய் விளங்கிய இவர் 1873 ஆம் ஆண்டு காலமானார்.

**கல்வியும் கடமையும்**

மூன்றாம் முத்துராமலிங்க சேதுபதி என்ற இராசராசேசுவர சேதுபதி மதுரைச்சேதுபதி உயர்நிலைப்பள்ளியிலும் மதுரைக் கல்லூரியிலும் கல்வி பயின்றார் 1903 ஆம் ஆண்டில் இவருடைய தந்தை பாஸ்கர சேதுபதி காலமானதன் பிறகு முதலில் மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவிய பாண்டித் துரைத் தேவர் கண்காணிப்பிலும், பிறகு மாவட்ட ஆட்சியாளர் பராமரிப் பிலும் இருந்தார். கடன்காரர்களுக்கு நிலங்கள் ஒற்றிவைக்கப்பட்டும் நீண்டகாலக் குத்தகைக்கு விடப்பட்டும் இருந்த இராமநாதபுரம் ஜமீனை மீட்டு நல்ல நிலைக்குக் கொண்டுவந்தார். பாஸ்கர சேதுபதியின் வள் ளன்மையாலும் பல்வேறு உதவிகளினாலும் கடனுக்குள்ளாயிருந்த சமஸ்தானம் இவருடைய காலத்தில் சீரடைந்து செழித்தது.

இவர் 1908 ஆம் ஆண்டில் திருமணம் புரிந்து கொண்டு 1909 ஆம் ஆண்டு முதலாவது ஆண்பிள்ளைக்குத் தந்தையானார். வேல்ஸ் இளவரசர் (பின்னர் அரசரானவர்) வந்தபொழுது அப்பொழுது கவர்

னராயிருந்த ஆம்ப்ட்ஹில் பிரபுவால் வரவேற்பில் கலந்துகொள்ள அழைக்கப்பட்டார். 1911 ஆம் ஆண்டு தில்லியில் நடைபெற்ற அரசர்–அரசி முடிசூட்டு விழாவிலும் சென்னை அரசின் அழைக்கப்பட்ட விருந்தினர் இவர்.

### பொதுவாழ்வில் பெற்ற பெருமை

1913 ஆம் ஆண்டு மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வாழ்நாள் தலைவராக இவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். சென்னைச் சட்டமன்ற உறுப்பினராக எதிர்ப்பின்றி 1915 ஆம் ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டார். தொடர்ந்து அப்பதவியில் இருந்தார். அறநிலையப் பாதுகாப்புச் சட்ட மசோதாவைப் பரிசீலிக்கும் குழுவுக்குத் தலைவராயிருந்து மசோதாவை விவாதிக்கும் பொழுது, சட்டமன்ற நடவடிக்கைகளில் பங்கேற்றார். 1920 ஆம் ஆண்டு இராமநாதபுரம் மாவட்டக் கழகத்தலைவராக நியமிக்கப்பட்டார். 1923 ஆம் ஆண்டு மீண்டும் தலைவராக நியமிக்கப்பட்டார். இராமேஸ்வரம், கும்பகோணம் ஆகிய தேவஸ்தானக் கமிட்டிகளின் உறுப்பினராயிருந்தார். மதுரையில் நடைபெற்ற சென்னைமாகாண அரசியல் மாநாட்டுக்கு வரவேற்புக் கமிட்டியின் தலைவராயிருந்தும், 1919 ஆம் ஆண்டு திருச்சிராப்பள்ளியில் நடைபெற்ற அரசியல் மாநாட்டுக்குத் தலைவராயிருந்தும் நிகழ்ச்சிகளைத் திறம்பட நடத்தினார். இவர் வகித்த பதவிகள் பலவாகும். முதலாவது உலகப் போரின் குழுக்களில் உறுப்பினராயிருந்தும் ஐம்பதினாயிரம் ரூபாய் செலவில் 'இராமநாதபுரம்' என்ற ஆகாயவிமானத்தை வழங்கியும் அரசுக்கு உதவிபுரிந்தார். இராசராசேசுவர சேதுபதி தம்முடைய முன்னோர்களின் வாழ்க்கையைப் பின்பற்றிச் சமயத்துக்கும் தமிழுக்கும் அரிய தொண்டாற்றினார். முப்பத்தொன்பது வயது நிரம்பிய இரண்டு மாதங்களுக்குள் 4-8-1928 ஆம் நாள் இவர் மறைந்தார்.

### உ. வே. சாமிநாதையர் பாராட்டு

இராசராசேசுவர சேதுபதி தாம் வாழ்ந்த காலத்துப் புலவர் பெருமக்களுடன் அளவளாவித் தமிழ்ச்சுவையை நுகர்ந்தவர். மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் நூல்களில் தமிழின் வளர்ச்சியில் சேதுபதி கொண்டிருந்த அன்பு வெளிப்படுகிறது. 'சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற தலைப்பில் ஐயர் அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுகளில் இராசராசேசுவர சேதுபதி பற்றிக் குறிப்பிட்ட பகுதி பின்வருமாறு :

> ''செந்நெற்குடி சுப்பராயரென்ற ஒருமாத்துவப் பண்டிதர் இருந்தார். அவர் விஷ்ணு புராணத்தைச் செய்யுள் வடிவமாக இயற்றினார். வெண்பாப்புலி என்ற பட்டம் பெற்ற கவி ஒருவர் இருந்தார். இவர்களும் வேறுபல புலவர்களும் சேதுபதி மன்னர்களாலும் அவர்

களுடைய நாட்டிலுள்ள பிரபுக்களாலும் ஆதரிக்கப்பெற்றவர்கள். இப்பொழுது இங்கே வந்து வீற்றிருக்கும் சேதுபதி அரசரவர்களும் பல வருடங்களாகத் தமிழின் அபிவிருத்திக்குச் செய்து வரும் உதவி மிகப் பாராட்டற்பாலது. ... நான் அறிந்து கொண்ட விஷயங்களை இங்கு எடுத்துச்சொல்லும்படி அவகாசம் கொடுத்த ஸர்வகலாசங்கத்தாருக்கும் தமிழாராய்ச்சி விஷயத்தில் வெகுகாலமாகச் சகாயம் செய்துவரும் சேதுமன்னர்களாகிய மாட்சிமைபொருந்திய மஹாராஜாஸ்ரீ பா. இராசராசேசுவர சேதுபதி மஹாராஜா அவர்களுக்கும் வேண்டியபொழுது எனக்கு ஏட்டுச்சுவடிகளைக் கொடுத்துப் பேருதவி புரிந்து வந்திருக்கும் திருவாவடுதுறை ஆதீனம் முதலிய ஆதீனங்களின் தலைவர்களுக்கும் பின்னும் உள்ள பற்பல உபகாரிகளுக்கும் என் மனப்பூர்வமான நன்றியைச் செலுத்துகின்றேன்.''*

## நூல் வேண்டும் சேதுபதி

மீதூண் விரும்புவர் சிலர். உண்பதொன்றே மனிதன் கண்ட இன்பம் என்று வாழ்பவர் சிலர். பணம் சேர்ப்பதே வாழ்க்கையின் கோட்பாடு என்றுளர் சிலர். மாடமாளிகை வேண்டும் என்று துடிப்பர் சிலர். விரைந்து செல்லும் உந்துவண்டி வேண்டி உருகுவர் சிலர். நூல் வேண்டும் என்று கேட்பாருளரோ ? என்று வினவுகிறார் சாமிநாதையர். ' ஆம் என்று சொல்லி விடைகொடுக்கிறார் அப்பெருந்தகை.

பால்வேண்டும் பழம்வேண்டும்
பணம்வேண்டும் பலவுடுப்பு
மேல்வேண்டும் கோல்வேண்டும்
விரைசகடம் மிகவேண்டும்
ஆல்வேண்டும் எனலன்றி
அரசேநின் போல்தமிழ்த்தொன்
நூல்வேண்டும் என அன்பின்
நுவல்பவரைக் கண்டிலமே ''

என்று மறைந்த சேதுநாட்டின் அரசாட்சியன், சீர்ப்பாற்கரவேள் அருந்தவத்தால் உதித்த பெருமாட்சியுறு புவிராசராச மகிபாலனை விளித்துப் பாடுகின்றார் தமிழ்த் தாயின் ஒப்பிலா மணிகளுள் ஒருவரான சாமிநாதச் சான்றோர்.

## ஐயரவர்களுக்கு அளித்த உதவி

தினைத்துணை உதவி எவரிடமிருந்து பெற்றாலும் பனைத் துணையாக் கொண்டு நன்றி தெரிவிக்கும் உள்ளம் படைத்தவர் சாமிநாதையர். தாம் எழுதிய-பதிப்பித்த நூல்களில் தமக்குதவியவரை மறவாது வாழ்த்

* 1. உ. வே. சாமிநாதையர் தமிழ்ப்பாமஞ்சரி (இரண்டாம்பாகம்) சென்னை. 1962.

தும் பாங்கு சாமிநாதையர்க்கே உரியது எனலாம். சிலப்பதிகாரப் பதிப்பின் முன்னுரையில் இராசராசேசுவர சேதுபதி பற்றிய பகுதி பின்வருமாறு :

'' நூற்பரிசோதனைக்கு உடனிருந்து உதவி புரிபவர்கள் விஷயத்தில் நான் கவலையுறாவண்ணம் பல வருடங்களாக மாத வேதனமளித்து ஆதரித்துவரும் ஸ்ரீ சேது ஸமஸ்தானாதிபதிகளும், மதுரைத் தமிழ்ச் சங்கத்தலைவர்களும், சென்னை சட்ட நிரூபண சபை அங்கத்தினர்களுமான கௌரவம் பொருந்திய மகாராஜா ராஜஸ்ரீ பா. இராஜராஜேசுவர சேதுபதி மகாராஜா அவர்களுடைய வள்ளன்மையை ஒருபொழுதும் மறவேன். ''

**சமஸ்தானம் தந்தவர்**

இராசராசேசுவர சேதுபதிக்கும் உ. வே. சாமிநாதையருக்கும் இடையே இனிய நட்பு நிலவியது. அரசரும் புலவரும் உரையாடி மகிழ்வது பண்டைத் தமிழர் மரபன்றோ !

மகா மகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள், சென்னையில் 'உட்லண்ட்ஸில்' சேதுமன்னராகிய இராசராச சேதுபதியவர்கள் வந்து தங்கும் காலங்களில் அவரைச் சென்று பார்த்து வருவது வழக்கம். இருவரும் நெடுநேரம் உரையாடி இன்புறுவார்கள். ஒருமுறை ஐயரவர்கள் அந்த மாளிகைக்குச் சென்ற போது அரசர் வெளியில் போயிருந்தார். ஐயரவர்கள் அங்கே அமர்ந்து மன்னரின் வரவுக்காகக் காத்திருந்தார்.

நடுவே வட்ட மேஜையும் மெத்தை தைத்த நாற்காலியும் மற்றொரு பக்கத்தில் சோபாவும் போட்டிருந்தார்கள். அரசர் நாற்காலியில் அமர்ந்து பேசுவார். மற்றவர்கள் சோபாவில் உட்கார்ந்து பேசுவார்கள்.

ஐயரவர்கள் சோபாவில் அமர்ந்து கொண்டிருந்தார். நெடுநேரம் கழித்து மன்னர் வந்தார். அப்போது அங்கிருந்த பணியாளர்கள் ஐயரவர்கள் வந்து காத்திருப்பதைச் சொன்னார்கள். இராசராசேசுவர சேதுபதி அரசர் அதைக்கேட்டவுடன் ஐயரவர்கள் இருக்குமிடத்துக்கு வேகமாகச் சென்றார். அவர் அமர்ந்திருந்த சோபாவில் அவருக்கு அருகில் அமர்ந்து விட்டார். இது ஐயரவர்களுக்கு வியப்பையும் களிப்பையும் உண்டாக்கியது. அவர் மன்னரைப் பார்த்துப் பேசலானார்.

---

* உ. வே. சாமிநாதையர் : சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், சென்னை 1927.

'மகாராஜா அவர்கள் புலவர்களுக்கு எத்தனையோ வகையான சம்மானங்களை அளித்து வருவதை உணர்ந்திருக்கிறேன். பொன்னாடை வழங்கியிருக்கிறீர்கள்; தோடா அணிவித்திருக்கிறீர்கள்; நிலம் கொடுத்திருக்கிறீர்கள். ஆனால் இன்று எனக்குச் சமஸ்தானத்தையே வழங்கி விட்டீர்கள்'' என்றார்.

மன்னர் நிமிர்ந்து பார்த்தார், ''ஆம்; என் அருகில் அமர்ந்து சமமான ஸ்தானத்தையே வழங்கிவிட்டீர்களே!'' என்று ஐயரவர்கள் விளக்கிய போது மன்னருக்கு உண்டான உவகைக்கு எல்லையே இல்லை. ''அரசரோடு என்னைச் சரியாசனம் வைத்ததாய் என்று காளமேகம் சொன்னது பொய்யாகுமா?'' என்று மறுபடியும் கூறி, அந்த உவகையைப் பின்னும் மிகுதியாகச் செய்தார் ஐயரவர்கள்.

சிறிது நேரம் இருவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். முதிர்ந்த பிராயத்திலும் தம் மீதுள்ள அன்பினால் இத்தனை நேரம் காத்திருந்தாரே என்ற பரிவு மன்னருக்கு ஏற்பட்டது. கடிகாரத்தைப் பார்த்தார். அந்தக் குறிப்பை அறிந்த ஐயரவர்கள், ''போதும் ஆனது; பேசினது போதுமானது'' என்று சொல்லி எழுந்தார்.'' *

**அரசர் அமைச்சர் ஆவதா ?**

மற்றுமொரு நிகழ்ச்சி. பனகல் ராஜா மந்திரி சபை அமைத்தபொழுது இராசராசேசுவர சேதுபதி மந்திரியாவதற்கு வாய்ப்பிருந்தாலும் மந்திரியாகவில்லை. சேதுபதி மன்னருக்கு அது வருத்தத்தை உண்டாக்கியது. அச்சமயம் சேதுபதியைப் பார்க்க உ. வே. சாமிநாதையர் சென்ற பொழுது அரசரைப் பார்க்கத் தாம் விரும்புவதாகச் சொன்னார்.

ஐயரவர்கள் உள்ளே சென்றார். அரசர் முன் அமர்ந்தார். அரசர் வரவேற்றாலும் இயல்பான முகமலர்ச்சி இல்லை. ஐயரவர்கள் அமர்ந்தவுடனே, ''ஒரு சந்தோஷ சமாசாரம் கேள்விப்பட்டேன்'' என்றார். அரசர் அவர் பேசியது விளங்காமல் தலையை நிமிர்ந்து பார்த்தார். ''ராஜாவுக்கு 'டி-ப்ரமோஷன்' ஆகவில்லையாம். அதுபெரிய சந்தோஷ சமாசாரம் அல்லவா! மந்திரி ராஜா ஆனால் முறை. ராஜா மந்திரியாவது பதவிக்குறைவு அல்லவா? அந்தக் குறைவு தங்களுக்கு ஏற்படவில்லையாம். தாங்கள் எப்போதுமே ராஜா அல்லவா'' என்றார். இதைக் கேட்டவுடனே துயரத்தில் ஆழ்ந்திருந்த அரசர் முகத்தில் விளக்கேற்றினாற் போலச் சிரிப்புப் படர்ந்தது.

---

* கி. வா. ஜகந்நாதன் : சேதுபதிகளும் தமிழ்ப்புலவர்களும் சில துணுக்குகள்.
(இராமேஸ்வரம் மகாகும்பாபிஷேகச் சிறப்பு மலர். 1975)

## மகாவித்துவான் இராகவையங்கார் புகழுரை

'சேதுநாடுந் தமிழும்' என்ற நூலில் மகாவித்துவான் ரா. இராகவையங்கார், இராசராசசேதுபதியின் திருப்பாட்டனாரான முத்துராமலிங்க சேதுபதி முதலாக மூன்று தலைமுறைச் சேதுபதிகள் இனிய தமிழ்க் கவிவலராயிருந்தார்கள் எனக் கூறியுள்ளார். இராசராசேசுவர சேதுபதியைப் பற்றி அந்நூலில் அவர் பின்வருமாறு எழுதுகிறார்.

''நம் மாட்சி பொருந்திய மஹாராஜரவர்கட்குத் திருத் தந்தையாரும் பெருங்கொடை வள்ளலுமாகிய பாஸ்கரசேதுபதி மஹாராஜர் இத்தமிழின்பால் வைத்த அன்பு அவர்கள் இச்சங்கத்துக்களித்த பெருங்கொடையானும், பிற நாட்டரசரை இத்தருமத்தில் தூண்டிப் புரிவித்த நல்லுதவிகளாலும், தமிழ்ப்புலவர்க்களித்த பெருங்கொடையானும் யாவரும் அறிந்ததே யாதலின், பெயர்த்துங்கூற வேண்டியதொன்றன்று. இவர்களது தமிழபிமானத்தையும், தமிழ் வண்மையையும் யான் பலகாலும் அனுபவித்துள்ளேன். பாஸ்கர சேதுபதி பண்ணிய புண்ணிய மெல்லாந் திரண்டு ஒருருவெடுத்தனைய நம் சேதுபதி மஹாராஜர் அவர்கள் இச்சேது ராஜ்யாபிஷேகஞ் செய்தருளிய காலந்தொட்டு இத்தமிழ்மாட்டுத் தம் பெருங்குலத்தோரொப்ப ஆராவன்புகாட்டி ஒவ்வொரு சரஸ்வதி பூஜையிலும் பெருந்தமிழ்ப் புலவரையழைத் தளிக்கும் பெருங்கொடை யாமெல்லாங் கண்கூடாகக் கண்டதொன்றே. இதனை.

''புலவரைப் போற்று வதேகலை வாணிக்குப் பூசையென்று
நிலவரைப் பாள்கின்ற வேந்த ரினின்போ னினைந்தவர்யார்
சலவரைப் போற்றுதல் செய்யாம லென்றுந் தலைசிறந்த
நலவரைப் போற்றிய சீராஜ ராஜ நரேந்திரனே.''

என்றியான் அன்பாற் பாடியுள்ளேன். இக்காலத்துள்ள சிறந்த தமிழ்ப் புலவரில் இச்சேதுபதி மன்னரை உள்ளவாறு புகழாதார் ஒருவருமிலரென்று சொல்லத் துணியலாம். இதனால் இத்தமிழ் வளர்க்கும் தருமம் இம்மன்னர் குலதருமமென்பது தெளிவாம். இத்தகைய தமிழ் வேந்தரைத் தலைவராகப் பெற்றது இத்தமிழ்ச் சங்கத்துக்குப் பெருஞ்சிறப்பேயாம்.'' †

---

† டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் சதாபிஷேக வரலாறு, சென்னை — 1936.

**பணிவும் பண்பும்**

உயர்ந்தோர்க்கு அணிகலன் பண்பு. பணிவும் சேர்ந்து விட்டாலோ ஒருமாற்று உயர்ந்துவிடுகிறது அவர்தம் சீர்மை,

''எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து''

என்பது வள்ளுவர் வாக்கன்றோ? ''சேதுபதி, தரிசனமே இராமலிங்க தெரிசனமாச் செப்பலாமே'' என்று தனிப்பாடல் வரி ஒன்று கூறுகிறது. எனினும் பண்பும் பணிவும் குணமும் நிறைந்து விளங்கியவர் இராச ராசேசுவர சேதுபதி என்பதை, அவர் தமிழ் நன்மணியாம் – தமிழர் கண் மணியாம் சாமிநாதையர்க்கு எழுதிய கடிதம் பகரும்.

''அரண்மனை, இராமநாதபுரம்,
17–8–21.

மஹாமஹோபாத்தியாய அய்யரவர்கள்
சமூகத்துக்கு, நமஸ்காரம்.

அன்புடனனுப்பிய கடிதமும் கல்யாண சுந்தரமய்யரவர்கள் மூல மனுப்பிய மணிமேகலைப் புத்தகங்களும் கிடைத்தன. என்னை இப் புத்தகங்கள் மூலமாயும் கௌரவித்ததற்கு என்றும் நன்றிபாராட்டும் கடமையுடையேன். தாங்கள் இத்தமிழகத்துக்குச் செய்யும் மஹோ பகாரத்திற்கு என்னால் அடையும் சொற்ப உதவி ஒரு பொருட் டாமோ? நிற்க, ஆவுடையார் கோவில் தம்பிரானவர்களின் வியோ கம் நியூஸ் பேப்பர் வாயிலாகத் தெரிய மிக்க விசனமடைந்தேன். மிகவும் சமர்த்தர். லௌகிகம் நன்கறிந்தவர். மிக்க அனுபவமும் மடத்தின் சம்ப்ரதாயமும் அறிந்தவர். அவர்கள்போல் பின்னொருவர் இக்காலத்தில் இல்லையென்றே சொல்லலாம். அவர்களை இழந்தது ஆதீனத்திற்கு ஒரு குறைவே. இவ்வருஷம் சங்கத்தின் விழா செப்டம்பர் மீ' 17 வ மதுரையில் நடைபெறும். கனம் கே. ஸ்ரீனிவாச யங்காரவர்கள் அக்கிராசனம் வகிக்க ஒப்புக்கொண்டுள்ளார்கள். தாங்களில்லாது எப்படி அச்சபை நடக்க முடியும்? நான் அந்தக் கூட்டத்தில் அன்வயிப்பது எப்படி? ஆகவே தாங்கள் அவசியம் வந்து என்னையும் சபையையும் கௌரவிக்க வேண்டுகிறேன். ஆதீன விஷயங்கள் கடவுள் கிருபையால் சீக்கிரம் ஒரு அனுகூலமான முற்று தலடையும். தாங்கள் அங்கிருந்து வருவது எல்லோருக்கும் பெருத்த ஆறுதலாயிருக்கிறது. தாங்கள் அது சம்பந்தமான விஷயாதிகளோடு தமிழ்ப் பாஷைக்கு உழைப்பதையும் விட்டுவிடாதது உலகோர் செய்த

பெரும் பாக்கியம். என்ன கைம்மாறு செய்யப் போகிறார்கள் உலகோர். நன்றிமறவாது இருப்பார்களேயாயின் அதுவே சிறந்த தாகும்.

தங்கள் அன்புள்ள,

பி. இராஜராஜேசுவர சேதுபதி.

தாமதத்திற்கு மன்னிக்க.''

பாவலர் இராசராச சேதுபதி

சேதுகாவலர் தமிழ்க் காவலருமன்றோ! தமிழைப் புரப்பது மட்டு மன்றித் தமிழில் பாடவும் வல்லவர் இராசராச சேதுபதி என்று அவ்வப் பொழுது பாடிய பாடல்களினின்று தெரிந்து கொள்ளலாம்.

மதுரையில் என். வி. சுந்தரராசன் என்பவர் வழக்கறிஞர். கண்ணில் வந்த நோய்க்குக் குணம்பெற இராசராசேசுவர சேதுபதியிடம் உதவி நாடினார். உதவியும் கிடைத்தது. நன்றி தெரிவித்த சுந்தரராசனுக்கு சேதுபதி ஒரு வெண்பா மூலம் பதிலனுப்பினார்.

கண்ணில் வருநோயைக் கடியப் பொருளுதவி
பண்ணியதன் நன்றிதனைப் பாராட்டி — உண்ணும்
அமிழ்தின் இனிய அறவுரைகள் சொன்னான்
தமிழ் தழையும் சுந்தரரா சன்.*

''காலஞ்சென்ற இராமநாதபுரம் ராஜா, இராஜராஜேசுவர முத்துராமலிங்க சேதுபதியின் தூண்டுதலால்-வேண்டுகோளால்-ஆணையால் என்று சொல்லவே விரும்புகிறேன், இராமநாதபுரம் மாவட்டம் பற்றிய சிறிய நூல் என்னால் எழுதப்பட்டது.''+

என்று இராமநாதபுரம் மாவட்டக் கல்வி மேலாளராக இருந்த டி. பி. கிருஷ்ணசாமி தம்முடைய நூலில் எழுதுகிறார். இராமேசுவரம், திருப் புல்லணை போன்ற திருப்பதிகளுக்கெல்லாம் சென்றுவிட்டு இராமநாத புரம் சேர்ந்து விடைபெறுமுகத்தான் கிருஷ்ணசாமி இராஜராஜேசுவர சேதுபதிக்கு ஒரு வெண்பா எழுதியனுப்பினார்,

இரும்பிடரி நாகத் தெழில்தலைமேல் தோன்றும்
அரும்புகழ்சேர் அண்ணல்! அணிதோய் — திருமார்ப
ஆர்க்குந் திரைசூழ்ந் தலைக்குந் துறையனைத்தும்
பேர்க்குந் துளியுன் புகழ்.

---

* செந்தமிழ்ச் சிறப்பு.

அணிகள் பூண்டு யானையின் மேல் அமர்ந்து வரும் அரசே! எங்கெல்லாம் அலைகள் கரையில் மோதி நீர்த்துளிகளை வாரி இறைக்கின்றனவோ அங்கு அலை நின் புகழோதும்.

இக்கருத்தமைந்த பாடலைக் கொண்டு சென்றவர் காத்திருந்த பொழுதே சேதுபதி ஒரு பாடலெழுதிக் கிருஷ்ணசாமியிடம் சேர்க்குமாறு கொடுத்தார்.

> உடல்வளர்க்குங் கல்வி உயிர்வளர்க்கு மாறு
> திடமாய்ப் பயின்றிட்ட தேர்ச்சி — கடல்சூழித்
> தாரணியி லேகிருஷ்ண சாமி தனைவியக்குங்
> காரணமாம் நேரினிலுங் காண்.

மற்றையோர்க்குக் கல்வி பிழைப்பு.கிருஷ்ணசாமிக்குக் கல்வி ஊன்றுகோல். கிருஷ்ணசாமியை வியப்பதற்கு அது ஒரு காரணம். நேரிலும் அதைக் காணலாம். இதுவே பொருள். †

> உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
> அனைத்தே புலவர் தொழில்

என்ற திருக்குறளை நினைவுகூரத் தோன்றுகின்றதல்லவா ?

**வஞ்சிமாநகர் ஆய்வுக்கு ஊக்கம் தந்தவர்**

மகாவித்துவான் இராகவையங்காரின் ஆராய்ச்சி நூல்களுள் 'வஞ்சிமாநகர்' என்பதொன்றாகும். அந்நூலை ஆசிரியர், இராசராசேசுவர சேதுபதிக்கு உரிமையாக்கினார். மகாவித்துவானின் ஆராய்ச்சித்திறன் சேதுபதியைப் பெரிதும் ஈர்த்தது. திருக்குற்றாலத்திலிருந்து 19 - 7 - 1917ல் அன்று கோவிந்தசாமி என்பவருக்கு இராசராசேசுவர சேதுபதி எழுதிய ஆங்கிலக் கடிதத்தின் தமிழாக்கம் பின்வருமாறு :

> ''இந்த மூன்று நூல்களும் வஞ்சியைப் பற்றிச் சோமசுந்தர பாரதியின் கட்டுரையையும் (முடிவுகள் ஒருபுறமிருக்க) நம்முடைய வித்துவான் ரா. ரா. அவர்களின் புலமைமிக்க கட்டுரையையும் படித்தேன். அவர்கள் கையாண்ட முறை உவகையூட்டுவதாகும் (remarkable). அவர்களுடைய தருக்கத்துக்கும் வாதத்துக்கும் அதனுடைய சிறப்பே எதிர்நிற்கமுடியும். என்னுடைய நெஞ்சம் அவர்களைப் பாராட்டுவதில் மூழ்கியுள்ளது. அவர் ஆங்கில அறிவை வளர்த்திருந்தால் மேத்தா, கோகலே, தாதாபாய் என்ற தேசபக்தர்களைப் போன்று இந்நாட்டுக்குத் தொண்டு செய்திருக்க முடியும்.

---

† T. B. Krishnaswami : A pictorial Tour Through Ramnad.

எனக்கு இது தேவையில்லை. ஆங்கிலத்துக்கு மற்றையோர் உளர். ஆனால் தமிழுக்கு யாரிருக்கிறார்? செந்தமிழில் ரா. ரா. வின் கட்டுரையின் ஒரு பகுதிதான் வெளியாகியிருக்கிறது. எனவே நான் இதைப் பாதிபடித்திருக்கிறேன். தமிழ்ச்சங்கத்தின் உதவிச் செயலாளருக்கு எஞ்சியுள்ள பகுதியும் அனுப்புமாறு எழுதியிருக்கிறேன்.''

'வஞ்சிமாநாகர்' என்ற நூலைச் சேதுபதிக்கு உரிமையாக்கிய மகா வித்துவானுடைய பாடல் வருமாறு :

''என்போற் புலவ ரிறுமாந் திவண்வாழத்
தன்போற் புரக்குந் தமிழ்வள்ளல்—அன்போவாத்
தேனுரிமை செய்முல்லைச் சீராச ராசமுகிற்கு
யானுரிமை செய்வஞ்சி யீது.''

அந் நூலுக்கு மகாவித்துவான் எழுதிய முதற்பதிப்பு முன்னுரை பின்வருமாறு :

''அமிழ்தினுமினிய தமிழ்மொழியுணர்ந்த புத்திமான்களுக்குள் சிலகாலமாகச் சங்ககாலத்துச் சேரர் தலைநகராகிய வஞ்சிமாநகர் கொங்குநாட்டுக்கருவூர் தானோ அன்றி, மேல் கடற்கரைக்கணுள்ள கொடுங்கோளூர்தானோ என்று ஐயமுண்டாகி அதனடியாகச் சில பல ஆக்ஷேப சமாதான ரூபமான வாதங்கள் புஸ்தகவாயிலாகவும், பத்திரிகை வாயிலாகவும், நிகழ்தலைக் கண்டு செந்தமிழ் செல்வவேந்தரும், மதுரைத்தமிழ்ச் சங்கத் தலைவரும், என் அன்னதாதாவுமாகிய மகா-ரா. ரா. ஸ்ரீ மாட்சிமை தங்கிய ஸ்ரீமான் இராஜராஜேச்வர சேதுபதி மஹாராஜரவர்கள் யாம் இவ்விஷயமாக நிச்சயித்ததை எழுதியுதவும்படி பல்காலுந்தூண்ட அதனானே இந்நூலெம்மாலெழுதப் பெற்றுஅவர்கள் பெருநல்லுதவியானே அச்சிட்டு நிறைவேறியதாதலின் அம்மஹாராஜரவட்கியாம் என்றும் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையோம். செந்தமிழ்ச் செல்வச் சேதுவேந்தரும் அவர்களாதரிக்கு நறுந்தமிழும் எஞ்ஞான்றுமினிதோங்கி நிலவ இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.''

நூலின் இறுதியிலும் சேதுபதி வேண்டிக்கொண்டதற்கிணங்க எழுதியதாக இராகவையங்கார் ஒரு வெண்பாவில் பாடுகின்றார் :

கொங்கு குடபுலமாங் கோச்சேரன் வஞ்சிநக
ரங்கு வியன்கருவூ ராமென்ன — விங்குணரா
மாந்த ருளத்து மயக்கறுத்தேன் சேதுபதி
வேந்தன் பணிக்க விழைந்து.

**செந்தமிழ்ப் புலவர்க்குச் சேதுப்பதி கடிதங்கள்**

இராகவையங்கார் இராசராசேசுவர சேதுபதியின் ஆசிரியரும் அவைக்களப் புலவரும்கூட. சேதுபதி வித்துவானுக்கெழுதிய கடிதங்களில் 'அடியேன் ராஜேசுவரன்' என்றும் 'தங்கள் மாணாக்கன் ராஜராஜேசுவரன்' என்றும் எழுதியிருத்தலைக் கொண்டு ஆசிரியர்பால் இவர் வைத்திருந்த பெருமதிப்பை அறிந்து கொள்ளலாம். இராகவையங்கார் தாயார் மறைவுகுறித்துச் சேதுவேந்தர் எழுதிய கடிதம் பின்வருமாறு:

அரண்மனை,
இராமநாதபுரம்,
24--10—21.

பிர்மஶ்ரீ உ. வே. வித்வான் ஸ்வாமி அவர்கட்கு,
நமஸ்கார விஞ்ஞாபனம்.

தங்களின் மிக்கவன்புள்ள அன்னையவர்கள் நேற்றிரவு உயிர் நீங்கினார் என்பதை இப்போதுதான் கேள்வியுற்று அவர்களின் உயர்ந்த குணாதிசயங்களை எண்ணி விசனமுற்றேன். நீண்ட அனுபவமும் சமஸ்தானத்தின் கவுரவமுமறிந்தார் அவர்கள் போன்று பிறர் இல்லையென்றே சொல்லலாம். எனது வண்டியின் ஓசை மாத்திரத்தால் எழுந்து நிற்கும் பெருமை என் மனக் கண்ணினின்றும் மாறாது. எனது சரீர அசௌக்கியத்தால் நேரில் வந்து எனது ஆறுதல் மொழிகளைக் கூறுதற்கு இயலாதவனாயுள்ளேன். தாயை இழக்கும் துக்கத்திலும் பிறிது ஒரு துன்பம் உண்டோ? ஆயினும் ஏற்பட்ட காரியங்கள் குறிப்பிடப்பட்ட காலத்தே நடைபெறவேண்டுமென்பது தங்களினும் அறிந்தவர் யாரோ? எனது மனப்பூர்வமான ஆறுதல் மொழிகளை அங்கீகரிக்கப் பிரார்த்திக்கிறேன்.

தங்கள்பால் வணக்கமுள்ள,
பி. ராஜராஜேஸ்வரன்.

**வெண்பா வேந்தர்**

வெண்பாப்பாடுவதில் இராசராசேசுவர சேதுபதிக்கு மிக்க விருப்பமிருந்தது. 1916 ஆம் ஆண்டு நாட்குறிப்பு (டைரி) ஒன்றை இவர் மகாவித்துவானுக்கு வழங்கி முன்பக்கத்தில் கீழ்க்கண்டுள்ள வெண்பாவையும் எழுதினார்.

''வரும்வருடம் சென்ற வருட மதினும்
அரிய நலன்கள் அளிக்க — உரிமையுடன்
மந்தமிலாச் செந்தமிழ்தேர் மகாவித்து வானுக்குத்
தந்ததிந் தப்புத்த கம்.''

மகாவித்துவான் தம் அரசரின் ஆசுகவித்திறமையைப் புலப்படுத்த விரும்பினார். நவராத்திரி விழாவிற்கு வந்த புலவர் பெருமக்கள்கூடிய பேரவையில் 'நடந்த அடிகள் நமக்கு' என்ற ஈற்றடியைக் கொடுத்துப் பாடி முடிக்குமாறு சேதுவேந்தரை வேண்டினார். சில நிமிடங்கள் சிந்தித்த பிறகு பலரும் வியந்து பாராட்ட அரிய வெண்பாவைச் சேதுபதி பாடினார்.

வந்தவினை தீர்க்கும் வருவினைகள் தாம்அகற்றும்
சந்ததமும் இன்பம் தனைநல்கும் — முந்தை
மடந்தை தனக்காக மானின்பின் கானில்
நடந்த அடிகள் நமக்கு.

### கரந்தைத் தமிழ்ச் சங்க விழாத்தலைமை

இராசராசேசுவர சேதுபதி கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவுக்குத் தலைமை தாங்கித் தமிழ் மொழியின் இனிமையினையும் பெருமையினையும் எடுத்தியம்பினார். அவரை வரவேற்ற அச்சங்கத்தார்,

''உலகம் வியப்ப வுணர்வுமிக் கோங்கிய
வித்தகன் சுவாமி விவேகா னந்தன்
வேந்துமுனி யென்ன யேத்திப் புகழ்ந்த
படைமடம் படாத பண்புடை மரபிற்
கொடைமடம் பட்ட குணத்தவ னாய
பாற்கரச் சேது பதிதவத் தளித்த
ராஜ ராஜேஸ்வரப் பெயர்பெறு மகிப!''
என்றும்,

''மன்னிய மேன்மைச் சென்னை மாகாணச்
சட்ட நிர்மாணத் தனிச்சபை யிடத்துப்
பட்டவர்த் தனர்தம் பகுதிகட் குரியையா
யமர்ந்துல கின்ப மடைதர முயல்வோய்''
என்றும்,

''கடைச்சங் கம்மெனக் கரையுரை பொய்த்துப்
போதச் செய்து புதுவது தோன்றிய
மதுரைச் சங்க மாண்புறத் தலைமைபூண்டு
இனிதி னளிக்கும் இறைவ! நீயன்பால்
தலைமை வீற்றிருக்கச் சார்ந்தனை!''
என்றும்

பாராட்டினர்.

## இராசராசேசுவர சேதுபதி காலத்தில் நவராத்திரி விழா

பாஸ்கர சேதுபதி காலத்தில் விமரிசையாக நடைபெற்று வந்த நவராத்திரி விழா, அவருக்குப் பிறகு அவருடைய பிள்ளை இளவரசராயிருந்த பொழுது சிறப்பாகக் கொண்டாடப்படவில்லை. இராசராசேசுவர சேதுபதி சமஸ்தானப் பொறுப்பை ஏற்றுக் கொண்டபிறகு பழைய பொலிவுடன் கொண்டாடப்படலாயிற்று. விரோதிகிருது ஸூத்து நவராத்திரி விழா பற்றி மு. இராகவையங்கார் எழுதியதின் ஒரு பகுதி வருமாறு:

''மாட்சிமை தங்கிய இம்மன்னரவர்கள் (ஸ்ரீ ராஜராஜேச்வர சேதுபதி வேந்தரவர்கள்), அம்பிகையின் பேரருளைநாடி நடத்திய இவ்வருஷத்து நவராத்திரி மஹோத்ஸவம், மிக விமரிசையாயிருந்தது மட்டுமன்றி, சேது சமஸ்தானத்தின் புரோவிர்த்திக்குச் சிறந்த முன்னறிகுறியாகவும் அமைந்ததென்றே சொல்லத்தக்கது. இவ்வுத்ஸவ தினங்களெல்லாம் மஹாராஜா அவர்கள் திருமுன்பு நடந்த வித்வத் ஸதஸுகளும், சங்கீத கோஷ்டிகளும் பரதநாட்டியங்களும், பற்பல வாத்திய கீதங்களும் அனைவரையும் மிகவும் ரஞ்சிக்க செய்தன. தென்னாட்டிற் கீர்த்திபெற்ற சங்கீத வித்வான்களெல்லாம் இம்மஹோத்ஸவத்திற்கு வந்திருந்து ராஜசபையில் தங்கள் அரிய ஸாமர்த்தியங்களைக்காட்டி, மஹாராஜா அவர்களால் கொண்டாடப் பெற்றுத் தக்கபடி சம்மானிக்கப் பெற்றார்கள்.

இவ்வாறே ஸம்ஸ்கிருத வித்வான்களிற் பலரும், தமிழ்வித்வான்களிற் பலரும், ராஜசபையை நாளும் மகிழ்வித்து வந்ததோடு, நம் வேந்தரவர்கள் அம்பிகையின் தரிசனத்தின் பொருட்டு விஜயமாகும் ஒவ்வொரு நாளிரவும் பகலும், அவர்கள் மேற் பற்பல பாக்கள் சூடி வாழ்த்தியும் வந்தார்கள். இவ்வாறாக, ஒன்பதாம் நாளாகிய சரஸ்வதி பூஜையன்று, ஸ்ரீமத்சேதுபதி மஹாராஜா அவர்கள், ஸகல ராஜ வைபவங்களுடனும், பேரத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்து, நவராத்திரி விஷேசத்தின் பொருட்டு வந்திருந்த வித்வான்கட்கெல்லாம் ஏற்றவாறு தோடாக்கள் தங்கப் பதக்கங்கள் முதலிய பரிசுகள் அளித்து மகிழ்வித்தார்கள். அன்று நடந்த வித்வத் சபையானது காண்டற்கரியதோர் அற்புதக் காட்சியாகவே விளங்கியது.

மறுநாள் மஹாவிஜயதசமி தினமாதலால், அன்றுமாலை, மாட்சிமை தங்கிய நம் மன்னரவர்கள், ஐராவதம்போல அலங்கரிக்கப்பெற்று விளங்கிய யானையின்மேல், அம்பாரியில் ஆரோகணித்து ஸகல ராஜாங்க கோலாகலத்துடனும், ஸ்வர்ண ஸிம்மவாகனத்தில்

அம்பிகையும், மற்றத் தேவதைகளும் முன்னெழுந்தருள, கண்டோர் மனம் பரவசமாம்படியான வைபவங்களுடன், மஹாநோன்பு ஸ்தலத்துக்கு விஜயம் செய்து அம்பிட்டுத் திரும்பிக் கோரதத்தில் ஆரோகணித்து அரண்மனைக்குள் விஜயமான காட்சிப் பெருமையும், அக்காட்சியைக் கண்டு களித்தற்குக் கூடிய பிரஜைகளின் ஆரவாரமும் இங்கே அளவிட்டுச் சொல்லமுடியா. இவ்வாறு அரண்மனைக்குள் விஜயம் செய்ததும் மஹாராஜா அவர்கள் ஸ்ரீ ராமலிங்க விலாசத்தில் ஸ்ரீ சேது பீடத்தே வீற்றிருந்து, ஆங்குக் குழுமியிருந்த பற்பல கோவில் ஸ்தானீகர்கள், வைதீகர்கள், வித்வான்கள், உத்தியோகஸ்தர்கள், பிரஜைகள் முதலிய எல்லாருக்கும் முறையே காட்சியளித்து அன்னோர்களால் மஹதாசீர்வாதங்களையும், வணக்கங்களையும் பெற்றனர்கள். இவ்வாறாக, விரோதிகிருது நாமஸம்வத்ஸர மஹாநவராத்திரி வைபவம் பரிபூர்த்தி பெற்றது.

மாட்சிதங்கிய நம் வேந்தரவர்கள் இம்மஹோத்ஸவ தினங்களில் அம்பிகையின் தரிசனைக்கு விஜயம் செய்த ஒவ்வொரு நாளிலும், ஸரஸ்வதி பூஜையன்று நடந்த வித்வத்ஸபையிலும், பிற சமயங்களிலும் ஸம்ஸ்கிருத வித்வான்களும் தமிழ்வித்வான்களும் மஹாராஜா அவர்களைச் சிறப்பித்து வாழ்த்திப் பற்பல செய்யுட்களியற்றினார்கள். அவற்றுள், தமிழ் வித்வான்கள் இயற்றிய பாடல்களெல்லாம் ஒருங்கு தொகுக்கப்பட்டு, சென்றவாண்டுபோலவே இம்முறையும் தனிப்புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளன. இவர்கள் பாடல்களால், ஸ்ரீ சேது ஸம்ஸ்தானத்தின் பழமை பெருமைகளும், அதனை ஆளும் அரசர் சிறப்புகளும், பிற விஷயங்களும் நன்கு விளங்கக்கூடியன. ஸம்ஸ்கிருத வித்வான்கள் இயற்றிய சுலோகங்களும் இவ்வாறே தொகுக்கப்பெற்றுத் தனியாக இனி வெளியிடப்பெறும். மாட்சிமை தங்கிய நம் சேதுபதி வேந்தரவர்கள் நீடு வாழ்க. சுபம்''

## புல்லாணிப் பெருமானுக்குத் தேர் தந்தவர்

'பஞ்சினைச் சிவக்கும் மென்கால் தேவி' என்பான் கம்பன் சீதையை. வீரனாயினும் இராமன் அரசகுமாரனன்றோ? தாமரை இதழ்கள் பட்டாலே சிவந்துவிடும் சீறடிகள் இராகவனுக்கு. எனினும் தந்தையின் ஆணையைத் தலைமேல் தாங்கிக் கான்வழி சென்று கல்லிலும் முள்ளிலும் நடந்தான். பொன்மானைக் காட்டிப் பெண்மானை இராவணன் தூக்கிச் சென்றபிறகு தென்கோடிக்கு வந்து சீதையை மீட்கும்போரில் ஈடுபட்டான். சேதுகரையை யொட்டிய பாலைமண்ணில் பகலவன் சூடேற்றிய மணற்பரப்பில் நடந்த பாதங்கள் என்பட்டனவோ! கடற்கரையில் புல்லணையில்

படுத்துத் துயின்றான். ஓய்வுஎடுத்துக்கொண்டான். முத்துராமலிங்கன் இதையெல்லாம் கண்டு அரசிளங்குமாரன் இராமன் அமர்ந்து நடாத்த அவனுக்கொரு தேர் சமைத்துத் தந்தான். செந்தமிழ்ச் சுவை நிரம்பிய பாடலொன்றில் இராகவையங்கார் இலக்கிய விருந்தை நமக்களிக்கிறார்.

> சீர்தந்த தாமரைப் பூப்பட்ட போதும் சிவந்துபடும்
> பார்தந்த பாதம் பரலுறைப் புண்ணவெம் பாலையெல்லாம்
> பேர்தந்து புல்லைப் பரப்பிக் கிடந்த பெருந்தகைக்குத்
> தேர்தந்த வேள் முத்து ராமலிங் கேந்தர செயதுங்கனே.

**இராகவையங்கார் பாடிய இரங்கற்பாடல்கள்**

இராசராசேசுவர சேதுபதி காலஞ்சென்றது பற்றிய இரங்கற் பாடல்கள் இலக்கியநயத்துடன் இதயங்கனிந்து பாடப்பட்டவையாகும்.

> மண்ணியனா டனைத்திலும் வந்தவர்பா வங்கழுவும்
> புண்ணியநா டெனுஞ்சேதுப் பொருவில தமிழ்த்திருநாடு
> நண்ணியநீள் தவமனைய ராஜரா சேச்வரனே
> விண்ணியனா டாளவுநீ விரும்பினையோ சென்றனையால்.

நீ சென்ற உலகில்,

அமிழ்தலது நீமாந்து மருந்தமிழு மாங்குளதோ ?' என்று வினவுகின்றார் மகாவித்துவான். சேதுபதியின் குணநலனை உலகறியத் தம்பாடல்களில் உரைக்கின்றார். இராசராசேசுவர சேதுபதி இசைச் சுவைஞர் மட்டுமன்றி இசையுடன் பாடவும் வல்லவர்.

> பாட்டருமை கண்டுவந்து பாராட்டும் பெருமதிப்பும்
> கேட்டருமைப் படவிசைக்குங் கிளரினிய குரல்மிழ்தும்
> வேட்டருமைப் படமொழியும் விறல்வாத வென்றியுமிந்
> நாட்டருமை யாயினவே ராசரா சேச்வரனே.

இராசராசேசுவர சேதுபதி இராமநாதபுரம் மாவட்டக்கழகத் தலைவரா யிருந்தார். அப்பொழுது,

'புல்லாணிவழிதிருத்திப் புனல் வையை' க்குப் பாலமிட்டார். அவர் அரசருள் அறிவர் என்பது சிறப்பன்று. 'பரசிய நல்லறிவருளே அறிவனு நீ' என்று இராகவையங்கார் புகழ்கின்றார். கற்பகம் எவருக்கும் தன் கொடையைச் சோதித்து வழங்குவதில்லை. வாரி வழங்கும் மாரியும் பாலையிலும் சோலையிலும் பொழிகின்றது. தகுதியைப் பார்ப்பதில்லை புலவர் என்ற பெயர் கொண்டு புல்லரும் திரிவரன்றோ! அவர்தம் திறம் தெரிந்து வழங்கும் சிறப்புடையவர் சேதுபதி. மகாவித்துவன் பாடுகிறார்:

மரந்தெரிந்த கற்பகமும் மதிதெரிந்து வழங்கலிலை
திரந்தெரிந்த கருமுகிலுஞ் சிறப்பறிந்து பெய்வதிலை
உரந்தெரிந்த புகழுடைய வொருராச ராசநின்போற்
றரந்தெரிந்து புலவரையே தலையளிக்க வல்லார்யார்.

பாரோர் உளமுவப்பச் சீராமநாதர் பணியிலும் திருக்குடந்தைக்கோயிற் பணியிலும் தமிழ்ச்சங்கப்பெரிய பணியிலும் இராசராசேச்வரன் ஈடு பட்டிருந்ததை மறக்கப்போமோ? தமிழ்த்தேசத்துக்கு ஒரு சர்வகலா சாலை. அதுவே மதுரைத் தமிழ்ச்சங்கம். அச்சங்கத்துக்கு ஒரு தலைவர். அவர்தான் இராசராசேசுவர சேதுபதி.

தமிழ்த்தேயச் சருவகலா சாலையவைத் தலைமைநினக்
கமைத்தேயு மிருந்தபடி யகிலவுல கறிந்ததைச்
சமைத்தாய்ந்து பாராயற் றணப்பதுதான் முறையாமோ
எமைத்தேர்ந்த பெருந்துணையே யிராசராசேச்வரனே.

'கற்றார்கள் குழுவோடு கலந்தமர்ந்து களிக்காமல்' 'விண்ணகம் சென்ற வரை' 'எற்றாலு மெமக்கினிய இராசராசேச்சுரனே, என்றும் மகா வித்துவான் பாடுகின்றார்.

தாயலறத் தம்பியழத் தங்கையழச் சிற்றப்பன்
கூயலறக் குலமகளிர் குழைந்தலறச் சிறுவருடன்
சேயலற நீவானிற் சிறப்பயர்தல் வழக்கன்றால்
ஞாயிறலர் குலமுதலே ராசரா சேச்வரனே.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் பாடலை இப்பாடல் நினைவூட்டுகின் றதன்றோ! சேதுபதிகளைச் சூரியவமிசத்தினர் என்று சொல்வது மரபு.

இருபத்துநான்கு இரங்கற்பாடல்களில் மகாவித்துவான் தம்மை யாதரித்த புரவலரைப் பொன்றாவண்ணம் பாடல்களில் நிலைநிறுத்தி யுள்ளார்.

பொய்கொண்டு புகுவார்தம் புலை நெஞ்சை யடியகழ்ந்து
கைகண்ட நெல்லியினிற் கருத்தெல்லாம் வெளிப்படுத்து
மெய்கொண்டு வெல்கின்ற விளையாட்டு மெங்கேயோ
செய்கொண்ட வளச்செம்பிச் திருராச ராச மன்னே.

இராசராசேசுவர சேதுபதி மறைவு குறித்து இராகவையங்கார் பாடிய விருத்தமெனும் ஒன்பாக்கள் இருபத்தைந்து. வெண்பா ஒன்று அவர் மறைந்த தினம் பற்றியதாகும்.

## இராசராசசேதுபதியின் இயற்பா

இராசராசேசுவர முத்துராமலிங்க சேதுபதி இசைச்சுவைஞர் மட்டுமன்று; கலைஞரும் கூட. தாமே இயற்பாக்கள் எழுதவும் வல்லவர்.

ஐந்துகையன் ஏகதந்தன் அந்தமில் விநாயகன்
சந்திரனை முந்திவென்ற தந்திமுக வாழியே.

பன்னரிய நன்னயம்செய் பன்னிருகை வேலன்
வன்னமயில் மீதில்வரும் மன்னுகுகன் வாழியே.

திங்களொடு கங்கைசூடும் செங்கதிராம் வேனியிற்
றங்குமீசர் மங்கைபாகர் சங்கரன்றாள் வாழியே.

சங்கரன்றன் பங்கினிலே தங்கியுல காண்மலை
மங்கைமாயன் றங்கை யென்றும் மங்களமாய் வாழியே.

ஜோதிருபன் வேதகீதன் சூதின்மது சூதனன்
தீதிலாத தேவ தேவன் சீதபாதம் வாழியே

இந்த இயற்பாவில் சிறப்பொன்றுண்டு. சிவன் கோயிலில் வழிபடும்முறை சொல்லப்படுகிறது. மூத்தபிள்ளையாரை வணங்கிப் பிறகு முருகனை வழிபட்டுத் திங்களோடு கங்கைசூடும் வேணியனை வணங்குவர் அடியார். சங்கரன் பங்கிலுறை மலைமகளை அடுத்துவழிபடுவது முறை. சிறப்பு மிக்க சிவன் கோயில்களில் திருமாலுக்கும் சந்நிதியுண்டு. திருமாலவதாரமான மதுசூதனனையும் சேதுபதி பாடிப் பரவுகின்றார்.

இந்த இயற்பாவின் இறுதியடிகள் இரண்டும் சேதுசமஸ்தான மகா வித்துவான் இராகவையங்கார் இணைத்ததாகும். அவற்றில் சேது பாலனஞ்செய் இராசராசமுத்து ராமலிங்க சேதுபதியை அவர் வாழ்த்துகிறார்.

இறுதியடிகள் பின்வருமாறு :

ராமசேது பாலனஞ்செய் ராமநாத சேவையன்
நாமமெங்கும் ஓங்கு முத்து ராமலிங்கன் வாழியே
ராஜவீரியன் சேதவுதாரியன் ராஜபர மேஸ்வரன்
ராஜசூரியன் தேவகார்யன் ராஜராஜன் வாழியே.

# இராசராச சேதுபதி

# ஒருதுறைக்கோவை

சேதுசமத்தான மகாவித்துவான்

ரா. இராகவையங்கார்

## தற்சிறப்புப் பாயிரம்

மதனு கமத்து வழுவா வகப்பொருள் வாய்த்தலைவி
நுதஞுணிக் கண்புதைத் தற்றுறை யொன்றிஞு ஹாறுகவி
முதுநாளிற் சூடிய கோன்ரகு நாத முதல்வனைப்போல்
இதுநாளிற் சூடினன் சீராச ராசநரேந்திரனே.

மதனாகமம் - காமநூல்; அகப்பொருள் - உள்ளத்தால் உணர்ந்து துய்க்கும் காதலர் வாழ்வுபற்றிய இன்பப்பொருள்: முதுநாள்-முன்னாள்; ரகுநாத முதல்வன்-இரகுநாதசேதுபதி; அமிர்தகவிராயரைப் போலவே இந் நூலாசிரியரும் நாணிக் கண்புதைத்தல் துறை ஒன்றில் நானூறு பாடல் பாடியுள்ளார். இதுநாள் - இந்நாள்; சீராசராச நரேந்திரன் - சீராசராச சேதுபதி; முத்துராமலிங்க சேதுபதி என்றும் இவருக்கு ஒரு பெயருண்டு. நரேந்திரன்-மக்களின் தலைவன், அரசன்.

அமிர்தகவிராயர், 'பூமேவு தெய்வத் தளிர்' என்று தொடங்கியுள்ளது போலவே இவ்வாசிரியரும், 'பூவுடன் வாழ்புகழ்ச் சீராச ராசன்' என்று நூலைத் தொடங்குதலும் நோக்கத் தகும். 'பூவுடன்' என்று தொடங்கிய புலவர் பெருமான், 'பெரும்பாக்கியமே' என்று நூலை முற்றுவித்தலும் மகிழ்வுக்குரியதாம். சீராசராசன் அரசாள்வது நன்றாக விருத்தலால் பெரும் பாக்கியம் கிடைப்பது இயல்புதானே.

சீரா ரொருதுறைக் கோவையி னானூறு செய்யுளையும்
கோராச ராச முகில்சேது பூபன் கொளவணிந்தான்
தீராத வன்பினவ் வேந்தன்செய் நன்றி தினநினைவான்
மாராக வன்றிரு மால்வே தியன்றமிழ் வாரிதியே.

முகில் - மேகம்; மேகம்போல் பெருங்கொடையாளன் என்பார் சீராச ராசனை முகிலாக உருவகித்தார். பூபன் - அரசன். ஒருதுறைக் கோர்வைப் பாமாலையைச் சீராசராச சேதுபதிக்கு அணிந்தவர் மாராகவன் திருமால் வேதியன். மாராகவன் - மகாவித்துவான் ரா. இராகவையங்கார். திருமால் வேதியன் - திருமாலை வணங்கும் அந்தணர், ஸ்ரீவைஷ்ணவ அந்தணர்; தமிழ்வாரிதி - தமிழ்க்கடல்.



# இராசராச சேதுபதி ஒருதுறைக் கோவை

## காப்பு

புவிவீற் றிருக்கும் புயன்ராச ராசன் புகழ்விளக்குங்
கவிவீற் றிருக்கு மொருதுறைக் கோவையைக்காப்பதற்கென்
சவிவீற் றிருக்கு முளத்தறி வோங்கத் தழைத்திருக்குந்
திவிவீற் றிருக்கும் புலமா மகளார் திருப்பதமே.

புவி வீற்றிருக்கும் - உலகத்தைத் தாங்கும்; உலகினை அரசாளும். புயன் - தோள்களையுடையவன். கவி வீற்றிருக்கும் - கவிதை மகள் திருவோலக்கங் கொண்டிருக்கும்; கவிதைப் பண்புகள் நிறைந்து விளங்கும் என்றபடி. சவி - ஒளி. சவி வீற்றிருக்கும் உள்ம் - ஒளி தங்கியிருக்கும் மனம்; அறிவோங்க - அறிவு நாள்நாளும் பெருக. திவி - சுவர்க்கம் பிரமயோகம்; இனிமை என்றும் கொள்ளலாம். புலமா மகளார் - அறிவின் செல்வியாகிய நாமகள். புலமா மகளார் திருப்பதம் என் உளத்துத் தழைத்திருக்கும் என்க.

## துறை

**தலைவி நாணிக் கண்புதைத்தலைக் கண்டு தலைவன் கூறியது.**

**1**

பூவுடன் வாழ்புகழ்ச் சீராச ராசன் பொருப்பினும்பாற்
கோவுட னேபுண்ட ரீகங் குலாவலுங் கோட்டுமத
மாவுட னேதணிந் தேறிடை மேவலும் வந்துகண்டார்
நாவுட னேசொலு மிவ்வர சாள்வது நன்றெனவே.

பூவுடன் - பூமிப் பரப்பெங்கும்; பொருப்பு - மலை; கோ - பசு, கண்; புண்டரீகம்-புலி, தாமரை; கோவுடனே புண்டரீகம் குலாவல் - பசுவோடு புலி விளையாடல்; கண்ணோடு கையாகிய தாமரை மேவுதல். கோட்டு மதமா - யானை; தணிந்து - கோபம் ஆறி, தாழ்ந்து; கோட்டு மதமா

வுடனே தணிந்து ஏறு இடை மேவல் - யானையொடு கொலைச்சிங்கம் இடையே பொருந்துதல்; முலையாகிய யானையோடு தாழ்ந்து சிங்க இடைக்கொப்பாம் இடையின்கண் பொருந்தல். அரசு - அரசாட்சி; அரச மரம், அரசிலை வடிவுடைய அல்குல். அரசு ஆள்வது - அரசாட்சியினை நிகழ்த்துவது; அரசிலை போன்று காணப்படும் அல்குலைக் கைப் பற்றுவது.

**2**

கலைக்கிணை யில்லாப் புலவர் குழாத்துக் கதிர்மதிபோ
னிலைத்தொளிர் நீள்புகழ்ச் சீராச ராச னெடுங்கிரியீர்
விலைக்கள வில்லாத் தனக்குடங் கைப்படும் வேளையிலே
தலைப்பொறி கையாற் றடுப்பது மாங்கொ றரணியிலே.

இணை - ஒப்பு; கதிர்மதி - தண்ணிய கிரணங்களை வீசும் பூரணச் சந்திரன்; ஒளி நீள் புகழ்-விளங்குகின்ற பெரும் புகழ்; விலைக்களவில்லா - விலை மதிப்பிட இயலாத; தனக்குடம்-நிதிக்குடம், முலையாகிய குடம், தலைப்பொறி-தலையெழுத்து; தலைமை பெற்ற பொறி, அதாவது கண். தரணி-பூமி.

**3**

காலையி லாய கதிரவ னும்பாற் கரமுகிற்கு
வாலை குலாவரு ளாற்சிவ பாக்கிய மாதுதந்த
மாலை நிலாவு மதிராச ராசன் மணிவரைவாய்
வேலை யிலாத வரையார் மதிப்பர் விளங்கிழையே.

காலையி லாய கதிரவன் - காலையில் உதிக்கும் இளவள ஞாயிறு, உதயசூரியன்; பாற்கரன்-பாற்கர சேதுபதி; இராசராச சேதுபதியின் தந்தை. முகில்-மேகம்; கொடையிற் சிறந்தவராதலின் பாற்கரரை மேகத் திற்கு ஒப்பிட்டு உருவகிக்கிறார். வாலை - சத்தி, இராசராசேசுவரி; குலாவருள் - நிலைபெற்ற திருவருள்; சிவபாக்கியம் - இராசராசசேது பதியின் தாயார் பெயர். மாலை நிலாவுமதி - மாலையிலே உதிக்கும் முழுமதி; மணி-அழகு; வரை-மலை; வேலையிலாதவரை யார் மதிப்பர்- ஒருதொழிலும் இல்லாதவரை எவர் மதிப்பர்; ஒருவரும் மதியார் என்பதாம். வேலை - தொழில், கடலாகியகண் ; வரை - மலைக்கொப்பாம் முலை. கண்ணில்லாது முலையைமட்டும் யார் மதிப்பார் என்றவாறு. எனவே, தலைவி கண்களை மறைத்து முலையை வெளிப்படுத்தியமை குறிப்பித்தவாறாம்.

## 4

கணிவளர் சோலையிற் கார்வளர் தேவையன் காசினியோர்
பணிகுல சேகரன் சீராச ராசன் பரம்பையன்று
யணிவட நாடு வரைகண்டு மாசை யடங்கலின்றுன்
மணியொளிர் நீண்ட தென் னாட்டின்கண் மேவ மனங்கொள்வதே.

கணி - வேங்கைமரம்; கார் - மேகம்; மேகம் சோலைகளில் உயர்ந்து விளங்கும் மரங்களின்மேல் வந்து உறங்கும், அதாவது படியும்; வளர்தல் - கண்வளர்தல், படிதல்; பரம்பை - பரம்பை என்னும் ஊர். அணிவட நாடு வரை கண்டும் - அழகிய வடநாடு வரை பார்த்தும்; அணியும் வடமும் நாடுகின்ற மலையாகிய முலைகண்டும். ஆசை அடங்கலின்றால் - விருப்பம் தணியவில்லை. மணியொளிர் நீண்ட தென்னாட்டின்கண் மேவ - மணி விளங்குகின்ற புகழால் சிறந்த தென்னாட்டினிடத்துப் பொருந்த; மணி ஒளிர் நீண்ட தென் நாட்டு இன்கண் என்க. நீல மணிபோல ஒளி விடுகின்ற நீண்ட அழகு நிலைத்த இனிய கண்களைப் பொருந்த என்றாம்.

## 5

எரியில்லை கூற்றென்று சொல்லக் களம்புக் கெதிர்ந்தவரைக்
கரியில்லை தேரில்லை யாக்கி யவர்புறங் கண்டுதரு
சரியில்லை யென்னத் தருராச ராசன் றடவரையி
ரரியில்லை யென்னிற் பொங்கும் முலையிட்டிவ ணாதலென்னே.

எரி - தீ; கூற்று - யமன்; களம்-போர்க்களம்; கரி - யானை; புறங் கண்டு - தோற்றோடச்செய்து; எதிர்ந்தவர் தோற்றோடுவதனால் அவர்தம் முதுகினைக் காணலாயிற்று; தரு - கற்பகமரம்; தேவலோகத் துள்ள ஐந்து மரங்களுள் ஒன்று; தன்னை அடுத்துக் கேட்பவர்களுக்கு அவர்கள் விரும்பியவற்றையெல்லாம் தரும் தன்மையது. எனவே, இக் கற்பகமரத்தைக் கொடைக்கு ஒப்பாகப் புலவர் எடுத்துக் கூறுவர். சரியில்லை-ஒப்பு இல்லை. தடவரை-அகன்ற பெருமலை; அரி-திருமால், அரிசி, வண்டு. அரியில்லையென்னின் - அரிசி இல்லையென்னுமிடத்து; பொங்கும் உலையிட்டு - பொங்குகின்ற உலையினை வைத்து; இவண்-இங்கு. ஆதல் என்னே-ஆகின்ற பயன் என்ன; அரிசியில்லாமல் வெறும் உலையினால் பயனில்லை என்றபடி. அரியில்லை என்னின்-வண்டாகிய கண் இல்லை என்னுமிடத்து; பொங்கும் முலையிட்டு - பொங்குகின்ற முலையினைத் தந்து என்ன பயனாம் என்க. அரியில்லை என்னின்-திருமால் இல்லையானால், பொங்கும் முலையிட்டு - பெருகிய முல்லை

நிலத்தையிட்டு, என்னே - என்ன பயனாவது என வேறொரு பொருளும் தோன்றும். முலை-முல்லை மாலை, முல்லை மாலை அணிந்து காக்கும் திருமாலின்றேல் முல்லை பூத்தலால் பயன் இல்லை; மணத்தை நுகரும் தலைவன் இல்லை என்பது.

6

திருமலை யத்து மிமயத்தும் வான்கவி சேரவைத்துப்
பெருமலை யொத்த புயத்துப் புவிமான் பிறங்கவைத்த
தருமலை யீகையன் சீராச ராசன் றமிழ்வரையார்
பொருமலை யீந்தன ரீந்தில ரீதிறும் பூதுடைத்தே.

திரு மலையத்தும் - அழகிய பொதிய மலையிடத்தும்; இமயத்தும்- இமயமலையிலும்; கவி - குரங்கு, இங்கே அனுமன். வான்கவி - சிறந்த அனுமக்கொடி; சேதுபதிகளுக்குரிய கொடி. புயம் - தோள்; புவிமான்- நிலமகள்; சேரவைத்து - ஒருசேர நாட்டி; புயத்துப் புவிமான் பிறங்க வைத்தல் - நிலமகளைத் தம் தோள்களில் தாங்கி அரசாளுதல்; தரு- கற்பகமரம்; தரு மலை ஈகையன் - இவர்தம் கொடைத்திறம் கண்டு கற்பகதருவும் மலைக்கும்படியான பெருங்கொடையுடையான்; தமிழ் வரை-தமிழ்மலை. பொருமலையீந்தனர் - ஒன்றை ஒன்று ஒத்த மலை யாகிய முலைகளைத் தந்தனர். ஒன்றை ஒன்று தாக்கிப் போரிடுகின்ற முலைகளை என்றும் ஆம். பொரும் அலை ஈந்திலர் - போர்புரிகின்ற அலையாகிய கண்களைத் தந்திலர். ஒன்று ஈந்தனர், அந்நிலையே ஒன்று ஈந்திலருமாதலால் இஃது ஆச்சரியமுடைத்து என்பதாம். பொருமலை ஈந்தனர் ஈந்திலர் - என்பதற்கு பொருமுதலை ஈநதனர், அந்நிலையே அதனை ஈந்திலருமாயினார் என்று வேறு ஒருபொருளும் கொண்டுநிற்றல் காணத்தகும்.

7

மல்லமை யாகப் பெரும்படை வேந்தன் வறுமைவெப்பஞ்
செல்லமை யாகப் பொழிராச ராசன் சிகரியன்னீர்
வல்லமை யாகமுன் காட்டியென் னுமச்ச மன்னுகையாற்
சொல்லமை யாத மதன்போரி னீர்வென்றி சூடரிதே.

மல் அமை ஆகப் பெரும்படை - மல்யுத்தம் செய்வதற்குத் தகுதியான வலிமை படைத்த பெரும்படை; மல் - மல்யுத்தம்; வலிமை. வறுமை வெப்பம் - வறுமையாகிய கோடை; செல்ல மையாகப் பொழி - வறுமை

வெப்பம் தீர மேகமாகப் பொருள் வழங்குகிற. மை-மேகம். சிகரி-மலை. வல்லமையாக முன் காட்டி என்னாம் - வல்லமையுண்டாகப் (போர்க்கு) முன்காட்டி என்ன பயனாம்; அச்சம் மன்னுகையால் - அச்சம் நிலை பெற்றிருத்தலால்; சொல் அமையாத மதன் போரில் நீர் வென்றி சூடரிது - சொல்லால் அமையாத மன்மதயுத்தத்தில் நீர் வெற்றிமாலை சூடுதல் இல்லை என்க. வல் அமை ஆகம் - வல்லாகிய சூது கருவி அமைந்த மார்பு. மச்சம் மன்னு கையால் - மச்சமாகிய (மீன்) கண் களிலே நிலைக்க வைத்த கையுடைமையால். அதாவது கண்களை விட்டுக் கையெடாமையால் என்பதாம்.

## 8

சேட்கும் வழங்கும் புகழ்ச்சேது காவலன் செந்தமிழ்க்கு
நாட்கும் வழங்கும் பெருங்கொடை யானின்ப நண்ணுமிசை
கேட்கும் வழுதிமன் சீராச ராசன் கிரியனையீர்
வேட்கும் வழுவை வெளியிட் டொளித்தனிர் வேள்குணமே.

சேட்கும் - தூரமான இடங்களிலும், வேறு தேசங்களிலும்; சேது காவலன் - சேதுநாட்டு மன்னன்; நாட்கும் - நாள்தோறும், எந்நாளும்; நண்ணும் இசை - பொருந்தும் இசையொலிகளை, இசைப்பாடல்களை; வழுதிமன் - பாண்டியன்; கிரி - மலை. வேட்கும் வழுவை வெளியிட்டு- மன்மதனுக்கும் குற்றத்தை வெளிப்படுத்து; வேள் குணமே ஒளித்தனிர்- மன்மதனின் குணத்தையே மறைத்தீர். ஒருவருடைய குற்றத்தை வெளிப் படுத்து அவர் குணத்தையே மறைத்தல் நெறியில்லை என்பதாம். வேட்கும் என்றது நீர் மன்மதன் படையாதலால் அப்படைத் தலைவ னாகியவனுக்கும் என்றவாறு. வேட்கும் வழுவை வெளியிட்டு- விரும்பும் யானையாகிய முலையை வெளிப்படுத்தி; வழுவை - யானை; வேள் குணமே ஒளித்தனிர் - மன்மதனுடைய நாணாகிய வண்டை; அஃதாவது கண்ணை மறைத்தனிர்.

## 9

சீர்தந்த தாமரைத் தேவியும் வாணியுஞ் சேர்முன்றிலான்
கார்தந்த செங்கைக் கொடைத்திறம் பாடும் கவிப்புலவோர்க்
கூர்தந்த சேது பதிராச ராச னுயர்கிரியீர்
நீர்தந்த வந்தன நன்றுங்கைப் பூவையு நேர்தரினே.

சீர் - சிறப்பு, செல்வம்; தாமரைத் தேவி - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; வாணி - கலைமகள்; முன்றிலான் - முற்றத்தை உடையவன்; கார் - மேகம்; கார் தந்த - மேகம்போலக் கொடுத்த. செங்கை - கொடுத்துச் சிவந்த கை; கவிப்புலவோர் - கவிபாடும் புலவர்; ஊர் தந்த - ஊரையே மானியமாக வழங்கிய; நீர் தந்த வந்தனம் நன்றாம் - நீர் தந்த அஞ்சலி நன்றாகும்; கைப் பூவையும் நேர்தரின் - கையிலுள்ள புட்பத்தையும் நேரே தந்தால். புட்பாஞ்சலி செய்யு மிடத்துப் புட்பத்தை இடாமல் அஞ்சலியிடுதல் வழக்கில்லை என்பதாம். நீர் தந்த அம் தனம் நன்றாம் - நீர் தந்த அழகிய முலை நன்மை யுடையதாகும். கைப்பூவையும் நேர்தரின் - கையிலுள்ள பூவாகிய கண்ணையும் எதிரே தந்தால் என்க.

## 10

இயம்பட்ட திக்கும் விசய மியற்றி யிசைவென் றிமான்
குயம்பட்ட தோளினன் சீராச ராசன் குளிர்வரையீர்
கயம்பட் டினிதணி யாமையைக் காணுங் கருத்துமிலை
நயம்பட்ட நற்கரும் புள்ளது கைக்கொண்டு நல்கலிரே.

இயம்பு அட்ட திக்கும் - பேசப்படுகிற எட்டுத் திசையும்; எட்டுத் திசை - கிழக்கு முதலிய நான்கு பெருந்திசையும் தென்கிழக்கு முதலிய நான்கு கோணத்திசையும் ஆக எட்டு. விசயம் இயற்றி - திக்குவிசயம் செய்து வெற்றிகொண்டு. திக்குவிசயம் - எல்லாத்திசைகளிலும் சென்று பகைவரை அடக்கி வெற்றி பெறுதல். இசை வென்றிமான்-பொருந்தும் வெற்றிமகள்; குயம் - முலை; வென்றிமான் குயம்பட்ட தோளினன்- வெற்றி மகளால் தழுவப்பட்டமையால் அவள் முலை பதிந்த தோள் என்றார். தோள் - மார்பு எனினும் ஆம்; கயம் பட்டினி தணியாமை யைக் காணும் கருத்தும் இலை-யானை பசி தணியாமையைப் பார்க்கும் கருத்தும் நுமக்கு இல்லை. நயம்பட்ட நற்கரும்பு உள்ளது கைக் கொண்டு நல்கலிர் - நயமுண்டாகிய நல்ல கரும்பு நும்பால் உள்ளது; அதனை நும் கைக்கொண்டு கொடுத்தீர் இல்லை; இஃது என் அருளி யவாறு என்பதாம். கயம் பட்டு இனிது அணியாமையைக் காணும் கருத்தும் இலை-யானையாகிய முலை பட்டினை இனிதாக அணியாமை யைப் பார்க்கவும் நுமக்குக் கருத்து இல்லை; கண்மூடுதலால் என்றபடி. நயம்பட்ட நற் கரும் புள்ளது கைக்கொண்டு - நல்கலிர். புள்ளது - புள் - வண்டு; கரும்புள்ளாகிய அது என்றது வண்டுக்கொப்பாம் கண்ணை; வண்டினைக் கைக்கொண்டு நல்காதாராயினீர் என்க.

## 11

எருக்குடன் கொன்றை புனைராம நாதனை யேத்திச் செல்வப்
பெருக்குடன் வாழ்கின்ற சீராச ராசன் பிறங்கலைப்போற்
செருக்குட னின்றநங் காய்கோ வலையே தெரியுமெற்குத்
திருக்குடந் தைக்கு நெறிவழங் கிற்பயன் றேர்கிலனே.

எருக்கு-வெள்ளெருக்கம்பூமாலை; கொன்றை-கொன்றைப்பூமாலை; ஏத்தி-துதித்து, புகழ்ந்து, வாழ்த்தி; ராமநாதன்-திரு இராமேச்சுவரத்தில் இராமன் வழிபட்ட பெருமான் இராமநாதன் என்னும் திருப்பெயர் பெற்றார். பிறங்கல் - மலை; செருக்கு - பெருமிதநிலை; நங்காய்-பெண்ணே, விளி. கோவலையே தெரியும் எற்கு - திருக்கோவல் என்னும் திருப்பதியையே தெரியவிரும்பும் எனக்கு; திருக்குடந்தைக்கு நெறி வழங்கின் பயன் தேர்கிலன்-திருக்குடந்தைக்கு வழியைக்கூறின் அதனால் ஆம் பயனைத் தெளிந்திலேன். ஓர் ஊருக்குச் செல்ல விரும்பிய ஒருவனுக்குப் பிறிதோர் ஊருக்கு வழி காட்டியதனால் பயனில்லை என்பதாம். கோ அலையே - கண்ணாகிய அலையினையே; தெரியும் எற்கு - தெரிய விரும்பும் எனக்கு; திருக்குடம் தைக்கும் நெறி வழங்கின்-அழகினையுடைய முலையாகிய குடங்கள் என் மார்பில் தைக்கும் நெறியாக நீர் தந்தால். பயன்தேர்கிலன் - அதனால் முழுப்பயனையும் தெளிந்திலேன்.

## 12

மொய்யலை நீர்வையைச் செம்பிநன் னாடன் முளரிமலர்த்
தையலைப் புண்ணியத் தாற்பெற்ற வேந்தன் றமிழ்க்குநிதி
பெய்யலைச் செய்கின்ற சீராச ராசன் பிறங்கலன்னாய்
மையலை மாற்றி வருந்தனங் கைக்கே வழங்கலென்னே.

மொய் அலை-நெருக்கமான அலை, திரளான அலை; செம்பிநாடு-சேதுநாடு. முளரி மலர்த்தையல் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; நிதி பெய்யல் - நிதிவழங்குதல்; பிறங்கல் - மலை; மையலை மாற்றி - மயக்கத்தைப் போக்கி; மை அலை மாற்றி - கரிய அலையாகிய கண்களை மறைத்து; வருந்தல் நம் கைக்கே வழங்கல் என்னே - வருந்துதலை எம் கைக்கு வழங்குதல் யாது காரணம்; வரும் தனம் கைக்கே வழங்கல் என்னே-வருகின்ற முலைகளை எம்முடைய கைக்கு வழங்குதல் யாது காரணம். வாராமுலை, வருமுலை, வந்தமுலை எனப் பருவ வேறுபாடு குறித்து வழங்கும் மரபில் இத்தலைவி வருமுலையுடைய கன்னிப்பருவத்தளாயினள் என்பது குறித்தவாறாம்.

## 13

விண்மலர் கற்பக மொப்பப் புவியின் விளங்குகொடைத்
தண்மல ரங்கைத் தயாநிதி பாற்கரன் தந்தமுல்லை
யொண்மலர் மாலையன் சீராச ராச னுயர்கிரிவாய்க்
கண்மலர் காட்டிலை கொங்கைமுன் காட்டினை காரிகையே.

விண் மலர் கற்பகம்-வானுலகில் விளங்கும் கற்பகமரம்; புவி-உலகம்; தயாநிதி-கருணைக்கடல். பாற்கரன்-பாற்கரசேதுபதி; சீராசராச சேதுபதியின் தந்தையார்; மதுரைத்தமிழ்ச்சங்கம் தோற்றுவித்த புரவலர். தந்த-பெற்ற; ஒண்மலர் - ஒளி படைத்த பூ; முல்லைமாலை சேதுபதிகளுக்குரிய தனி அடையாள மாலையாகும். கள்மலர் காட்டிலை-தேனையுடைய மலரைக் காண்பித்தாயல்லை; கொங்கை முன் காட்டினை-அம் மலரின் மணத்தை முன்னே காட்டினை. கொங்கு-மணம், பூந்தாது; கொங்கை - முலை. கண்மலர் காட்டிலை - கண்ணாகிய மலரினை வெளிப்படுத்தாது மறைத்துள்ளாய். கொங்கை முன் காட்டினை - தனத்தை முற்படக் காணச்செய்தாய். ''முல்லைத் தார் மற மன்னர்'' என்பராகலின் மறவருக்கு முல்லைமாலை உரியது என்பது அறியலாம்.

## 14

அடன்மண்டு வெம்போர் மறவர்க் கதிபதி யஞ்சொன்மினார்
மடன்மண்டு மன்மதன் சீராச ராசன் வரையகத்தீர்
இடன்மண்டு மட்டில் பெருந்தன பார மிவண்சுமந்துங்
கடன்மண்டு கையுடன் றோன்றற்குக் காரணங் கண்டிலமே.

அடல்மண்டு-கொலை மிகுந்த; வெம்போர் - கொடிய யுத்தம்; மறவர்க்கு அதிபதி-வீரர் தலைவன்; அம்சொல் மினார்-அழகிய பேச்சினையுடைய மின்னார், மின்னல் போல் ஒளிபடைத்த பெண்டிர். மடல்மண்டு-மடல் ஏறுவதற்காக நெருங்கி வரும்; மன்மதன் - மன்மதனைப் போன்ற பேரழகன்; இடன்மண்டு மட்டு இல் பெருந்தனபாரம் இவண் சுமந்தும்-இடம் நிரம்பிய அளவில்லாத பெரிய நிதிப் பொறை ஈங்குச் சுமந்து நின்றும்; கடன் மண்டுகையுடன் தோன்றற்குக் காரணம் கண்டிலம்-கடன் நிரம்புதலுடன் தோன்றுவதற்குரிய காரணம் தெரிந்திலேம். இடன் மண்டு பெருந்தனபாரம் சுமந்தும் - மார்பிடம் நிரம்பிய அளவுபடுதலில்லாத பெரிய முலைப்பொறையை ஈங்குச் சுமந்து நின்றும்; கடல்மண்டு கையுடன் தோன்றற்குக் காரணம் கண்டிலம்-கடலாகிய கண்கள் நிரம்பிய கையோடு தோன்றுவதற்கான ஏது தெரியோமாயினேம். பெருந்தனமிருந்தும் கடன் மண்டும் கையுடன் தோன்றல் முரண் என்றவாறு.

15

ஒருமான் மருவுகைச் சீராம நாத ருகந்தகுல
மருமான் மருமுல்லைச் சீராச ராசன் வரையனையாய்
திருமான் மருவுகை கண்டு வடமலை சேவித்தவர்
பெருமான் மருவிய நெஞ்சகத் தோடு பிறங்குவரே.

மான் மருவு கை - மான்பொருந்திய திருக்கை. சீராமநாதர் உகந்த குலம் - சீராமநாதரின் திருவருளுக்குப் பாத்திரமான மறவர்குலம். சீராமனால் சேதுவைக் காப்பதற்காக நிலைக்கவைத்த மறவர்குல வழிவந்தவர் சேதுகாவலராம் சேதுபதிகள், மருமான்-வழித்தோன்றல் சந்ததி. திருமால் மருவுகை கண்டு வடமலை சேவித்தவர் - திருமால் எழுந்தருளியிருத்தலைத் தரிசித்துத் திருவேங்கடமலையை வணங்கியவர்; பெருமான் மருவிய நெஞ்சகத்தோடு பிறங்குவர் - அப்பெருமான், பொருந்திய ; மனத்தோடு விளங்குவார். திரு மான் மருவு கை கண்டு- அழகிய மானாகிய கண் பொருந்திய கையினைக் கண்டு; வடமலை சேவித்தவர் - வடங்கள் பொருந்திய மலையாகிய முலையினைக் கண்டவரெல்லாம்; பெருமால் மருவிய நெஞ்சகத்தோடு பிறங்குவர் - பெரிய ஆசை தோய்ந்த மனத்தோடு விளங்குவார்.

16

சங்கை யிலாத புகழ்த்தனுக் கோடித் தடங்கடலான்
கங்கையி லாய கொடைராச ராசன் கனவரையீ
ருங்கையி லாயமைக் கண்டனைக் காட்ட வொருப்பட்டிலீர்
எங்கையி லாய மலையாற் பயனென்கொ லெண்ணுவதே.

சங்கை - எண்; சங்கை இலாத - எண்ணிடமுடியாத, அளவில்லாத; தனுக்கோடி - இராமேசுவரத்தீவில் உள்ள நீண்ட தீபகற்பப்பகுதி; இது தீர்த்தக்கட்டமாகவும், கப்பல் துறையாகவும் முன்னர் விளங்கியது. 1965 - ஆம் ஆண்டு நிகழ்ந்த கடல் கொந்தளிப்பால் இப்பகுதி கடலுள் ஆழ்ந்துவிட்டது. தடங்கடல் - பெரிய கடற்பரப்பு; கம் கையில் ஆய கொடை - கம் - மேகம் ; மேகத்தைக் கையில் கொண்டிருப்பதான கொடை; என்றது மேகம் போல் உதவும் கொடையாளன் என்றபடியாம். கனவரை - மேகம் சூழ்ந்த மலை; பெருமைபடைத்த மலை; உம் கையில் ஆய மைக்கண்டனைக் காட்ட ஒருபட்டிலீர் - உம்முடைய கையிடத்ததாகவுள்ள மைக்கண்டனாகிய சிவபெருமானைக் காட்டுவதற்கு இணங்கினீரில்லை. கைலாயமலையாற் பயன் என்கொல் எண்ணுவது - அந்நிலையில் எமக்குரிய கயிலாய மலையால் யாது பயன் நினைப்பது. சிவபெருமான் இல்லாத கயிலாய மலையால் பயன் இல்லை என்பதாகும்.

உம் கையில் ஆய மைக்கண்தனைக் காட்ட ஒருப்பட்டிலீர் - உம்முடைய கையிடத்ததாகிய மைதீட்டிய கண்ணைக் காட்டச் சம்மதியீர்; எம் கையில் ஆய மலையால் பயன் என்கொல் எண்ணுவது - எம்முடைய கையிடத்த தாகிய மலையாகிய முலையால் என்ன பயனை நினைப்பது.

**17**

சிரமலே நீர்க்கங்கை சூடிய தேவன் றிருவருளால்
வரமலே போனின்று வண்டமிழ் வாணர் வழுத்தியற்குத்
தரமலே யாதவன் சீராச ராசன் றடவரைவாய்க்
கரமலே காட்டிக் கரமலே பற்றினள் காரிகையே.

சிரம் - தலை; அலைநீர்க்கங்கை - அலைகளோடு கூடிய கங்காநதி; கங்கைசூடிய தேவன் - சிவபெருமான்; வரமலை - கேட்டவரம் அளிக்கும் மலை. வண்டமிழ் - வளப்பம் மிக்க தமிழ்; வழுத்தியல் - புகழ்ப்பாமாலை; வாழ்த்துப்பா. தர மலையாதவன் - தருவதற்குப் பின்னிடாதவன்; தடவரை - பெரியமலை; கரமலை - கையோடுகூடிய மலை என்றது யானையை. மலையிடத்து ஒரு பெண் கரமலையாகிய யானையைக் காட்டி; கரமலை பற்றினள் - யானையைப் பிடித்தாள். கரமலை காட்டி- யானையாகிய முலையைக் காட்டி; கரம் அலை பற்றினள் - கையால் அலையாகிய கண்ணைப் பற்றினள். மான் காட்டி மானைப்பிடித்தாற் போலக் கரமலே காட்டிக் கரமலே பிடித்தனர் என்க.

**18**

*சில்லக்கை யார்த்த விராமேசர்க் கன்பிற் றிருந்துசெங்கோல்*
வெல்லக்கை வைத்தவன் செந்தமிழ் வாணர் வியந்துகவி
சொல்லக்கை மிக்க கொடைராச ராசன் சுரும்பினுள்ளீர்
பல்லக்கை நீர்கொண்டு கொல்யானை தந்தீர் பயப்படவே.

அக்கு - எலும்பு, உருத்திராக்கமணி; செங்கோல் - அரசாட்சிச் சின்னமாகிய நேர்கோல்; செந்தமிழ்வாணர் - செந்தமிழைக் கற்றுவல்ல புலவர்; சுரும்பு - மலை; பல்லக்கை நீர்கொண்டு - சிவிகையை நீர் வைத்துக்கொண்டு; கொல்யானை தந்தீர் பயப்படவே - கொல்லுகின்ற இயல்புடைய யானையை நான் அஞ்சும்படியாகத் தந்தீர். பல்லம் கை நீர்கொண்டு - பல்லம் - பாணம்; அம்பாகிய கண்களையுடைய கையை நீர்கொண்டு. கொல்யானை தந்தீர் பயப்படவே - யான் பயனடையும்படி யானையாகிய முலையினைத் தந்தீர். பயம் - அச்சம், பயன். பல் அக்கை என்றும் பிரிக்கலாம். அக்கு - கண்; பல் - பல; அதாவது இரண்டு கண்களையும் மறைத்துக்கொண்டுள்ளாய் என்பதாம்.

**19**

சங்கத் தடங்கடற் சேர்ப்பன் செருவென்றி தந்துயர்ந்த
சிங்கத் துவசத்தன் சீராச ராசன் சிகரியைப்போ
லிங்குப் பொலிபவர் கண்ணு மயில்பெற வெண்ணுமெனக்
கங்குக் குடமளித் திட்டா ரிதென்கொ லதிசயமே.

சங்கம் - சங்கு; கடற்சேர்ப்பன் - கடல்சார்ந்த நாட்டுத் தலைவன்; செரு வென்றி - போரில் வெற்றி; சிங்கத்துவசத்தன் - சிங்கக் கொடியை யுடையவன்; சீராசராசன் சிகரியைப்போல் இங்குப் பொலிபவர்- சீராசராசன் மலையைப்போல் ஈண்டு விளங்குபவர்; தலைவி. பொலிபவர் கண்ணா மயில்பெற எண்ணும் எனக்கு - விளங்குபவரிடத்துள்ளதாகிய மயிலைப் பெறுவதற்கு நினைக்கும் எனக்கு; அம் குக்குடம் அளித்திட்டார் - அழகிய கோழியைத் தந்திட்டார்;கண் ஆம் அயில் பெற எண்ணும் எனக்கு - கண்ணாகிய வேலைப் பெறுவதற்கு நினைக்கும் எனக்கு; அங்குக் குடம் அளித்திட்டார் - அவ்விடத்துக் குடமாகிய முலையினைத் தந்தார். ஒன்று விரும்ப ஒன்று தரலால் இஃது என்ன வியப்பு என்றபடி.

**20**

விம்மத லாதி பதினு லுலகும் விரைந்துதொழச்
சம்மத மாகிய சீராம சேது தராபதிபோர்
மும்மத மாப்படைச் சீராச ராசன் முகில்வரைவாய்
அம்ம தனம்படைத் தாயென் றறைவ னணிமயிலே.

விம்மதலம் - பரந்தபூமி; பூவுலகம் முதலான மேலேழுலகும் கீழே ழுலகுமாகிய பதினான்கு உலகங்கள்; சம்மதமாகிய - ஒருப்பட்ட, உடன் பட்ட; சீராம சேது - சீராமனால் கட்டப்பட்ட திருவணை; சேதுதராபதி- சேதுநாட்டு மன்னன்; மும்மத மாப்படை மூன்று மதங்களையுடைய யானைப்படை. முகில் - மேகம். அம்ம தனம் படைத்தாய் என்று அறைவன் - ஆச்சரியப்படும்படியாகப் பொருளை உண்டாக்கினாய் என்று சொல்லுவேன். அம் மதன் அம்பு அடைத்தாய் - அழகிய மதனனுடைய அம்பாகிய குவளைமலர் போன்ற கண்களை மூடினாய்; அம்ம தனம் படைத்தாய் - முலைபடைத்தாய். அணிமயிலே - அழகிய மயில் போன்ற சாயலையுடைய பெண்ணே.

## 21

மும்மலை நாடுந் தொழும்ராச ராசன் முகில்வரைவா
யெம்மலை கின்ற மனவண் டினிதுண வெய்துகையிற்
கைம்மலர் வைத்த பெருங்கண் மறுத்தபின் காரிகையார்
செம்மலை யீந்தென்ன நன்முகை யீந்தென்ன செய்வனவே.

மும்மலை நாடு - மூன்று மலைகளையுடைய நாடு. எம் அலைகின்ற மனவண்டு இனிது உண எய்துகையில் - எம்முடைய திரியும் மனமாகிய வண்டு நன்கு உண்ணும்பொருட்டு வரும் காலத்தில் ; கைம்மலர் வைத்த பெருங் கள் மறுத்தபின் - கையிடத்துள்ள மலரின்கண் வைக்கப்பட்ட பெரிய கள்ளை ஈயாமல் மறுத்தபின்; செம்மலை ஈந்தென்ன நன்முகை ஈந்தென்ன செய்வனவே; செம்மல் - பழம்பூ; நன்முகை - நல்ல அரும்பு; பழம் பூவை ஈந்தும் நல்ல மொட்டினை ஈந்தும் செய்வன யாவை என்றவாறு. பழம் பூவும் முகையும் வண்டுண்ணும் கள்ளுடையன வன்மையால் பயனில்லை என்பதாம். கைம்மலர் வைத்த பெருங்கண் மறுத்தபின் - கையாகிய மலரில் வைத்த பெரிய கண்களை ஈயாமல் மறுத்தபின். செம்மலை ஈந்தென்ன நன்முகை ஈந்தென்ன செய்வனவே - செவ்விய மலையும் நன்முகையுமாகிய முலைகளை ஈந்து செய்வன யாவை என்றபடி.

## 22

அல்லன சொல்லித் திரியுங் குறும்பை யறவெறிய
வல்லனெஞ் சேது பதிராச ராசன் மலயத்திலே
நல்லநு மான்கணை யாழி யளித்து நலம்புரியா
தெல்லணி சூடா மணிக்குடம் பட்ட திரும்வியப்பே.

அல்லன - தீதானவை; குறும்பு - பகைவர், குறுநில மன்னர் ; அற எறிய வல்லன் - முற்றிலும் அழிக்க வல்லன்; மலயம் - மலை; நல் அநுமான் கணையாழி அளித்து நலம்புரியாது - நல்ல அநுமான் கணையாழியாகிய மோதிரத்தைத் தந்து நலம் செய்யாமல் ; எல் அணி சூடாமணிக்கு உடம்பட்டது இரும் வியப்பே - தேவியணிந்த ஒளி பொருந்தப்பெற்ற சூடாமணி தருவதற்கு உடம்பட்டது பெரு வியப்பு. நல் அநுமான் கணை ஆழி அளித்து நலம்புரியாது - நல்ல அநுவாகிய கன்னத்தோடு கூடிய மானும் கணையும் ஆழியுமாகிய கண்களைத் தந்து நலம் செய்யாமலிருக்க. எல் அணி சூடா மணிக் குடம்பட்டது இரும் வியப்பே - ஒளியையுடைய அணிகளைச் சூடாத நீலமணி பதித்த குடமாகிய முலை கிடைத்தது பெரு வியப்பு.

**23**

தென்காலுஞ் செந்தமி ழுஞ்சந்த நாறுந் திருமலையான்
கொன்கால வேல்வல்ல சீராச ராசன் குளிர்வரைவாய்
நன்கால மென்கைக்கு வந்து பயனில்லை நாட்செருந்தி
பொன்கால் பொழிலிடை யின்பந் தினையே பொருந்தினனே.

தென்கால் - தென்றல்; சந்தம் - சந்தனம்; நாறும் - மணக்கும், தோன்றும். கொன் கால வேல் - அச்சம் விளைக்கும் கூற்றுவனுக் கொப்பாம் வேலை; நன் காலம் என் கைக்கு வந்து பயன் இல்லை - நல்லகாலம் என் கையிடத்துக் கிடைத்தும் பயன் இல்லை; நாட் செருந்தி பொன்காலும் பொழிலிடை - நாள்தோறும் செருந்தி பொன் போலும் மலர்களை வெளிபடுத்தும் சோலையிலே. இன்பம் தினையே பொருந்தினன் - தினையளவு இன்பமே அடைந்தேன். ஆதலால் பயனில்லை என்றபடி. நன்கு ஆலம் மென்கைக்கு உவந்து பயன் இல்லை - நன்கு ஆலமாகிய கண்ணை மெல்லிய கையிடத்து உவந்து பற்றியதனால் பயன் இல்லை. இன் பந்தினையே பொருந்தினனே - இனிய பந்தாகிய முலையை யான் அடைந்தேன். முலையை யான் கைப்பற்றியபின் கண்ணைக் கையால் மூடுதலால் பயனில்லை என்பதாம். உன் பந்தினை யான் பொருந்தினுல் நீ என் பந்தினைப் (உறவினை) பொருந்தல் பொருத்தம். நீ அதனை விடுத்து ஆலம் பொருந்துவது தகுமோ என்க.

**24**

பொன்பம் பரமங்கை யாருடன் வாழப் பொருதவர்க்கு
முன்பம் பரநல்குஞ் சீராச ராசன் முதுவரைவாய்
இன்பம் பரமென்கை யேற்பதல் லாலிவ் விருநிலத்திற்
துன்பம் பரமென்கை யேற்பதுண் டோநற் சுடர்த்தொடியே.

பொன் பம்பு - அழகு நிறைந்த ; அரமங்கையார் - தேவமகளிர் ; பொருதவர்க்கு - போர்செய்தவர்களுக்கு ; அம்பரம் நல்கும் - வானுலகத்தைக் கொடுக்கும். போர் செய்வோர்க்கு முன்னின்று அவர் பொன் பம்பு அரமகளிரோடு வாழ அம்பரமாகிய மேலுலகு நல்குவன் என்பதாம். முதுவரை - பழமையான மலை ; இன்பம் பரம் என்கை ஏற்பதல்லால் - ஆனந்தம் பரம் என்று சொல்லுதலை ஏற்பதல்லாமல் ; பரம் - மேலானது ; துன்பம் பரம் என்கை ஏற்பது உண்டோ - துன்பம் பரம் என்று - சொல்லுதலை இவ்வுலகத்தில் ஏற்பதில்லை ; பரம் - பாரம்

பொருள், பரம்பொருள் ஆனந்தமயம் என்பதே ஏற்பது என்றவாறு. இன் பம்பரம் என்கை ஏற்பதல்லால் - இனிய பம்பரமாகிய முலையினை எனது கையால் ஏற்பதல்லது ; துன்பு அம்பு அரம் மென்கை ஏற்ப துண்டோ - துன்பினையுடைய அம்பும் அரவாளும்ஆகிய கண்ணை மெல்லிய கையால் ஏற்பது இல்லை. எனவே, கண்ணைக் கையால் மறைத்தல் தகாது என்றபடி.

## 25

**ஆசினி சூழ்பொழிற் றேவைக் கதிப னடையலரா**
**மாசினி ராவைவெல் சீராச ராசன் வளரிசைபோற்**
**காசினி யாடிரு வேமா சிலீமுகங் காண்டலுறிற்**
**றேசினி தார்கின்ற கண்ணடி வேண்ட றெரிந்ததுவே.**

ஆசினி - ஆசினிமரம் ; தேவை - இராமேச்சுரம் ; அடையலராம் மாசின் இராவை - பகைவராகிய குற்றமுடைய இருட்டை ; வளர் இசை - வளரும் புகழ் ; காசினி - உலகம் ; சீராச ராசன் வளர்க்கின்ற கீர்த்தியைப் போல உலகத்தை ஆள்கின்ற திருவோடு ஒப்பாய் ; மாசிலீ - மாசில்லாதவளே ; விளி. முகம் காண்டலுறின் தேசு இனிது ஆர்கின்ற கண்ணாடி வேண்டல் தெரிந்ததுவே - முகம் காணுதலைப் பொருந்தின் இனிதாக ஒளி நிறைகின்ற கண்ணாடியை வேண்டல் யாரும் தெரிந்ததொன்று; திருவே மா சிலீமுகம் காண்டலுறின் தேசு இனிது ஆர்கின்ற கண் நாடி வேண்டல் தெரிந்ததுவே - திருவே பெருமைபொருந்திய முலைக்கண்களைக் காணுதலைப் பொருந்தின், இனிது ஒளி நிறைகின்ற கண்களைத் தேடி விரும்புதல் நீயே தெரிந்தது. சிலீமுகம் - முலைக்கண்..

## 26

**அந்தி யளித்த திருநிறத் தண்ண லடிமலர்க்குப்**
**புந்தி யளித்தவன் சீராச ராசன் புயல்வரைவாய்த்**
**தந்தி யளித்துக் கராம்பக மேவிய தன்மையினற்**
**பந்தி யளித்த முறுவனல் லாய்நீ பரம்பொருளே.**

அந்தி அளித்த திருநிறத்து அண்ணல் - அந்திவண்ணனாகிய சிவபெருமான் ; அடிமலர் - திருவடித்தாமரை ; புந்தி - புத்தி ; புந்தி அளித்தவன் - சிந்தையை வைத்தவன்; புயல் - மேகம்; தந்தி அளித்து - யானையைக் காப்பாற்றி ; யானையாகிய முலையைக் கொடுத்து ; கராம்

பக மேவிய தன்மையினால் - சராமாகிய முதலையை இருகூறாகப் பொருந்திய தன்மையினால் ; நீ பரம்பொருள்- நீ பரமான்மா, திருமால்; இங்கே கஜேந்திரனுக்காகத் திருமால் அதனைப் பற்றிய முதலையைச் சக்கரத்தால் பிளந்த வரலாறு பேசப்படுகிறது. தந்தி அளித்து - யானையாகிய முலையைத் தந்து ; கர அம்பகம் மேவிய தன்மையினால் - கையில் கண்ணைப் பொருந்திய தன்மையினால் ; அம்பகம் - கண். நீ பரம்பொருள் - நீ மேலானபொருள். பந்தி - வரிசை ; முறுவல் - பல்.

**27**

மடைத்தா ழியவிளை வாளை கமுக வளமடலி
னிடைத்தாழ் பொழிற்புல்லைச் சீராச ராச னிருங்கிரிவாய்க்
கிடைத்தா ருயிரை யிருவரை யேவிக் கெடுப்பதென்கொல்
படைத்தாரை யில்லா தயன்மால் கொளநிற்கும் பாவையரே.

மடை - நீர்பாயும் தூம்பு ; வாளை - வாளைமீன் ; கமுக வளமடல் - கமுக மரத்தின் செழிப்பான மடல் ; புல்லை - புல்லாணி என்பதன் சுருக்கப்பெயர் ; இருங்கிரி - பெரிய மலை ; கிடைத்தார் உயிரை - எதிர்ந்தவர் உயிரை ; இருவரை ஏவிக் கெடுப்பது என்னே - இருவரை அனுப்பிக் கெடுத்தற்கு என்ன காரணம். படைத்தாரையாகிய கூரிய கருவியாகிய படைக்கலமின்றி இருவரை (இரண்டு போர்வீரரை) ஏவி ஒருவரைக் கொல்லச் சொல்லலாமோ ? படைவழங்காமற் போர் வீரரை ஏவினீர். படைத்தாரை இல்லாது அயனும் மால்கொள நிற்கும் பாவையரே - படைத்தவர் ஒருவர் இல்லாமையால் அயனும் ஆசைகொள நிற்கும் பாவையரே; அயன் - பிரமன் ; பாவையர் - பதுமைபோன்ற பெண்டிர். கிடைத்தார் உயிரை இருவரை ஏவிக் கெடுப்பது என்னே - எதிர்ந்தார் உயிரை இரண்டு மலைகளாகிய முலைகளை ஏவி விடுத்துக் கெடுத்தல் என்னை. படைத்தாரை இல்லாது அயல் மால்கொள நிற்கும் பாவையரே - தாரை - கண் ; மால் - ஆசை. படையாகிய கண் இல்லாது என் அயலில் ஆசைகொள நிற்கும் பாவையரே என்க.

**28**

தருவெள் ளியகொடைப் பாற்கர பூபன் றவத்துதித்துப்
பெருவள்ள லாயவன் சீராச ராசன் பிறங்கலன்னீர்
திருவள் ளுவரைப் பொருந்தாரை நீர்கொண்டு தேர்ந்ததென்னே
மருவொள் ளியகலை யெல்லாங் கடந்த வரைவிடுத்தே.

தரு - கற்பகமரம் ; எள்ளிய - இகழ்ந்த ; எள்ளிய கொடையாவது கற்பகமரம் தருவதினும் மிகக் கொடுப்பவன் என்பதாம். பூபன் - அரசன் ; வள்ளல் கொடை யாளி ; பிறங்கல் - மலை ; ஒருவர் கலையெல்லாம் கடந்தவரேனும் திருவள்ளுவரையேனும் கொள்ளல் வேண்டுவது. கலையெல்லாம் கடந்தவரைக் கொண்டு எய்தும் பயன் திருவள்ளுவரைக் கோடலானே யாகும். 'போயொருத்தர் - வாய்கேட்க நூலுளவோ மன்னுதமிழ்ப்புலவராய்க் கேட்க வீற்றிருக்கலாம்' என்பது திருவள்ளுவமாலை (16). அங்ஙனமாகவும் மருவு ஒள்ளிய கலையெல்லாம் கடந்தவரை விடுத்து - சாத்திரங்கள் எல்லாம் ஓர் உருவானவரை விட்டு ; திருவள்ளுவரைப் பொருந்தாரை நீர்கொண்டு தேர்ந்தது என்னோ - திருவள்ளுவரைச் சேராரை நீர் கைப்பற்றித் தெளிந்தது யாதோ. திரு வள்ளுவரைப் பொரும் நாரை - அழகு பொருந்திய காது வரையில் சென்று பொருகின்ற கண். வள் - காது ; மருவு ஒள்ளிய கலை எல்லாம் கடந்த வரை விடுத்து - பொருந்திய அழகிய சேலைகள் எல்லாம் நீத்த மலையாகிய முலையை வெளிப்படுத்தி.

## 29

கொக்கங்கை வேலா லிருபிள வாண்ட குமரனையே
மிக்கங்கை யாற்றொழுஞ் சீராச ராசன் வெற்பினல்லா
யக்கங்கை வைத்தது தந்திலை தாபத்தை யாற்றலுண்டோ
துக்கங்கை வைக்க வெறிதே யளித்தாய் துணைக்குடமே.

கொக்கு - மாமரம். அங்கை - அழகிய திருக்கை ; மாமர உருவில் வந்த சூரனை முருகன் தன் வேலால் இருபிளவாகச் செய்தார். குமரன்- முருகன் ; மிக்கு - அன்பு மிகுந்து ; வெற்பின் நல்லாய் - மலையிலுள்ள பெண்ணே ; அக் கங்கை வைத்தது தந்திலை - அந்தக் கங்கை நீரை வைத்ததைக் தந்தாயில்லை. தாபம் - வெப்பம், தாகம்; ஆற்றலுண்டோ- தணிக்கும் வகையுண்டோ. துக்கம் கைவைக்க - துயரம் அடையும் வண்ணம் ; துணைக்குடம் வெறிதே அளித்தாய் - இரண்டு குடங்களை ஒன்றும் இன்றி வெறுமனே தந்தாய் ; அக்கம் கைவைத்தது தந்திலை - கைவைத்து மறைத்ததாகிய கண்ணைத் தந்தாயில்லை ; தாபம் - விரக தாபம், காமவேட்கை; துணைக்குடம் வெறிதே அளித்தாய் - ஒன்றையொன்று துணைகொண்ட முலையினை வீணே தந்தாய். நீருள்ளதைத் தராமல் வெறுங்குடம் தந்தாய் என்பதாம்.

30

சொன்னய முற்ற பொருணயம் பெற்ற தொடைக்களிக்கு
நன்னயங் கற்றவன் சீராச ராச னளிர்வரைவாய்
மன்னய னத்தையே யானுந் தரிசிப்பன் மண்ணுலகிற்
பன்னய முற்றுமென் றான வரையெதிர் பார்ப்பதின்றே.

தொடை - பாட்டு; நன்னயம் - நாகரிகம், நன்மை; நளிர் - குளிர்ச்சி; மன் அயன் அத்தையே - நிலைத்த அயனுடைய அத்தையாகிய பார்வதியை; யானும் தரிசிப்பல் - நானும் கண்டு வணங்குவேன்; பல் நயம் உற்றும் என் — பல நன்மைகளை முழுதும் அடைந்தும் என்ன பயன்; தானவரை எதிர்பார்ப்பது இன்றே - அசுரரை எதிர்பார்ப்பதில்லை; மன் நயனத்தையே தரிசிப்பல் - நிலைபெற்ற கண்ணையே நான் காண்பேன்; தான வரை எதிர்ப்பார்ப்பது இன்றே - மதமலையாகிய முலையை எதிர் பார்ப்பதில்லை; தானம் - மதம்; மதமலை - யானை.

31

தருக்க ணுளகொடை தன்கரங் காட்டித் தரைபரவத்
தெருக்க ணுலாவருஞ் சீராச ராசன் சிகரிமின்னே
குருக்கண் முகத்தைத் தரிசிக்கப் புக்கெதிர் கொள்பொழுது
திருக்கண் வையா தடைப்பா ரெவர்காணிச் செகதலத்தே.

தருக்கண் உள கொடை - கற்பக மரத்தில் உளதாகிய கொடை; கரம் - கை; தரைபரவ - உலகத்தார் புகழ. உலாவரும் - பவனிவரும்; சிகரி - மலை; குருக்கள் - குருமார்; எதிர்கொள்பொழுது - எதிர்கொண்டு வரவேற்கும் சமயம்; திருக்கண்வைத்தல் - அழகிய இடம் அமைத்தல்; குருக்கண் - முலை; திருக்கண்வையாது அடைப்பார் - அழகுடைய கண்ணை வெளிப்படுத்தாது மறைப்பார்; செகதலம் - பூமியிடம்.

32

போற்றுரு மேற்றுப் பொருதாரும் பொன்னடி போற்றமிளிர்
கூற்றுரும் வாள்வல்ல சீராச ராசன் குளிர்வரைவாய்
மாற்றுரு மேத்துற் றவரை யிடையே மயங்கவிட்டு
வேற்றுரை யுங்கைவைத் தீரிது சால வியப்புடைத்தே.

போற்றார் - புகழாதார்; இகழும் இயல்பினர். ஏற்று - ஏற்றுக் கொண்டு; பொருதார் - போரிட்டவராகிய பகைவர்; போற்ற - துதிக்க; கூற்று ஆரும் வாள் - யமன் தங்கிய வாள்; மிளிர் - ஒளிவிடும்; மிளிர் வாள், கூற்று ஆரும் வாள் என்க. மாற்றாரும் ஏத்துற்றவரை இடையே மயங்கவிட்டு - பகைவரும் புகழுற்றவரை நடுவில் மயங்கும்படி நீத்து; வேற்றாரையும் கைவைத்தீர்-அன்னியரையும் கொண்டீர். உற்றாரைக் கைவிட்டு வேற்றூரைக் கொண்டது ஒழுக்கமதோ என்க. மாற்றாரும் ஏத்துற்ற வரை இடையே மயங்கவிட்டு வேல்தாரையும் கைவைத்தீர்- பகைவரும் புகழுற்ற மலையாகிய முலையை மருங்கில் மயங்க வெளி யிட்டு, வேலன்ன தாரையாகிய கண்ணையும் கைவைத்தீர் என்க. சால வியப்புடைத்து - மிகவும் ஆச்சரியமாயுள்ளது.

33

தருவைகும் வண்மையெல் லாங்கரந் தாங்குந் தயாவுடையோன்
கருவைகு மின்குழ விக்கொரு தாயெனக் காசினியாண்
டுருவைகு மன்புசெய் சீராச ராச னுயர்கிரியீர்
திருவைகுந் தம்விழைந் தேற்களித் தீர்திருச் செங்குன்றையே.

தருவைகும் வண்மை - தருக்கண் உள கொடை (31). தயா - கருணை; கரு - கருப்பம்; காசினி ஆண்டு - உலகை அரசாட்சி செய்து; உரு வைகும் அன்பு - மக்களிடத்தெல்லாம் நிலைத்த அன்பு; திரு வைகுந்தம் - ஒரு திருப்பதி; திருச்செங்குன்று - திருச்செங்குன்றூர் என்னும் திருப்பதி; திரு வை குந்தம் - அழகு வைத்த வேலாகிய கண்; விழைந்தேற்கு - விரும்பிய எனக்கு; திருச்செங்குன்று - அழகினையுடைய செம்மலையாகிய முலை.

34

பண்ணு லியலைச் சுவையுறப் பாடிப் படர்செவிக்கு
விண்ணு ரமுதம் பொழிய வலான்விறல் வேந்தர்பிரான்
தண்ணுர மார்பனெஞ் சீராச ராசன் சயிலத்துளீர்
கண்ணுல மின்றிக் கணவரை நல்லார் கருதலுண்டே.

பண் - இசை; இயல் - இயற்றமிழ்ப்பா; சுவையுற - இன்பம் மிக; அமுதம் - அமுதம் போன்ற இசை; விறல் வேந்தர் - வெற்றிபடைத்த மன்னர்; பிரான் - தலைவன்; தண் - குளிர்ச்சி; ஆரம் - சந்தனம், முத்து; சயிலத்துளீர் - மலையில் உள்ளவரே. கண்ணாலம் - கலியாணம்;

கணவர் - கொழுநர்; கண் ஆலம் இன்றி - கண்ணாகிய விடம் இல்லா மல்; நல்லார் - பெண்கள்; கண வரை - கூட்டமாகிய மலையாகிய முலை.

35

மன்கணஞ் சூழ்ந்து தொழூந்தேவை காவலன் வாலறிஞர்
நன்கணஞ் சூழ்கின்ற சீராச ராச னளிர்வரைவா
யென்கணன் னார்மெய்யின் மென்மையுண் டில்லை யிடையினமே
வன்கணங் கையான் மறைத்தாலுந் தோற்றுவ வல்லினமே.

மன்கணம் - அரசர் கூட்டம்; தேவைகாவலன் - இராமேசுவரத்தைக் காக்கும் அரசன்; வாலறிஞர்-தூய அறிவு படைத்தவர்; மெய்ஞ்ஞானியர்; நன் கணம் - நல்ல கூட்டம்; என் கண் அன்னார் மெய்யின் மென்மை உண்டு - என் கண்ணை ஒத்தார் உடம்பின்கண் சாயலாகிய மென்மை உண்டு; இல்லை இடை இனமே - இன்னம் இடை இல்லை; வன் கண் அங்கையால் மறைத்தாலும் - வலிய கண்களை அழகிய கையால் மறைத் தாலும்; தோற்றுவ வல் இனமே - வல்லுக்கு (சூதாடு கருவிக்கு) இன மாகிய முலைகள் தோற்றுவன. மெய்யெழுத்துக்களுள் மென்மை உண்டு; இடையினம் இல்லை; வல்லினம் தோற்றுவ, வன்கணம் கையால் மறைத் தாலும் வல்லினம் வெளிப்படும். மெய்யெழுத்துக்களில் உள்ள மூன்று இனங்களையும் இங்குக் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

36

செல்லமை யாக மறைவாண ராசிக்குச் செம்பொன்பொழி
யெல்லமை யாகத்தன் சீராச ரச னெழில்வரைவாய்
வல்லமை யாகத் தனுவிருந் தென்னநாண் வாய்ந்துமென்ன
சொல்லமை யாவொண் கணையில்லை யாயினற் றேகையரே.

செல் - மேகம்; செல் அமையாக - மேகத்தின் அமைதியுடையதாக; மேகத்தை உண்டுபண்ணுகிற. மறைவாணர் - வேதத்தில் வல்லவர்; ஆசி - வாழ்த்து; எல் அமை ஆகத்தன் - சூரியன்போல ஒளி படைத்த உடம்பினையுடையான்; எல் - சூரியன்; எழில் - அழகு; வல்லமையாகத் தனு இருந்து என்ன - வல்லமையுண்டாக வில்லிருந்தென்ன; நாண் வாய்ந்தும் என்ன - நாண் வில்லில் பொருந்தியும் என்ன; சொல் அமை யாத ஒண் கணை இல்லையாயின் - சொல் உவமையாக அமையாத பாணம் இல்லையாயின்; 'சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்' என்பர் கம்பர். வல் அமை ஆகத் தனு இருந்து என்ன - வல்லாகிய சூதாடு

கருவியமைத்த மார்போடு கூடிய உடம்பு இருந்து என்ன; நாண் வாய்ந்தும் என்ன - நாணத்தை வாய்ந்தும் என்ன; சொல் அமையா ஒண் கணை இல்லையாயின் - சொல்லால் அமையாத ஒள்ளிய அம்பாகிய கண்களை அவ்வுடம்பு உடையதில்லையாயின். வில்லும் நாணும் இருந்தும் என்னை தற்கு கணையில்லையே? எங்ஙனம் மன்மதப்போர் செய்வேன்; படை வழங்கிப் பார் என்பது குறிப்பெச்சம்.

## 37

அணையலை யீந்திலங் காபுரி வேந்தை யழித்தவன்றன்
றுணையலை யாவர சாக்கிய தேவற்குத் தூண்டெழிற்றே
ரிணையிலை யென்னச்செய் சீராச ராச னிருங்கிரியீர்
பிணையலை யீந்துபின் னேசெண்டு நல்கல் பெருவழக்கே.

அணை அலை ஈந்து - கடலில் அணையைக் கட்டி; இலங்காபுரி வேந்து - இலங்கை மன்னனாகிய இராவணன்; துணையல் - துணைவன், தம்பியாகிய விபீடணன்; தேவன் - இங்கே இராமன்; புல்லாணி வீற்றிருக்கும் திருமால். தூண்டு- செலுத்தப்படுகிற; எழில் தேர் - அழகிய தேர்; இணை இலை - ஒப்பு இல்லை; பிணையலை ஈந்து - மாலையைக் கொடுத்து; செண்டு நல்குதல் - பூச்செண்டினைத் தருவது; பெருவழக்கு- உலகில் எங்கும் பெருவாரியாக வழங்கும் முறைமை; பிணை - பெண் மான்; பிணைமானும் அலையுமாகிய கண்களை ஈயாது செண்டு ஆகிய முலையை நல்குதல் பெருவழக்கில்லை என்றவாறு.

## 38

தேனைவிட் டென்று மொருவாத முல்லைத் தெரிய
னூனைவிட் டென்று மறுதவொள் வேலா னுருதவரைச்
சேனைவிட் டட்டவன் சீராச ராசன் றிகிரியன்னீ
ரானைவிட் டஞ்சே லெனச்சொல் வதுகை யமைத்தென்னையே

ஒருவாத - நீங்காத; முல்லைத்தெரியலினான் - முல்லை மாலையை அணிந்தவன்; ஊன் - மாமிசம்; அறாத - நீங்காத; பகைவரைக் குத்திச் சாய்த்தலினால் வேல் ஊனை நீங்காதாயிற்று; உறாதவரை - தன்னோடு நட்புடன் சாராத பகைவரை; சேனை விட்டு - படையை ஏவி; அட்டவன் - கொன்றவன்; திகிரி - மலை; ஆனை விட்டு - யானையை ஒருவன்மேல் விடுத்து; அஞ்சேல் எனச் சொல்வது கை அமைத்து

என்னையே - அஞ்சா திருக்க எனச் சொல்வதைக் கையினால் அமைத்துக் காட்டி என்னை பயன். ஆனை விட்டு - யானையாகிய முலையை விடுத்து; அம் சேல் எனச் சொல்வது கை அமைத்து என்னையே - அழகிய சேல் என்று சொல்வதாகிய கண்ணைக் கையின்கண் மறைத்து என்ன பயன்.

## 39

நுரையாத் துகில்பல வீசிப் புவிமக ணோன் றணியத்
திரையாற் பவளமு முத்தும் பொழியும் திருப்புணரிக்
கரையார் வளச்செம்பிச் சீராச ராசன் கனகிரிவாய்
வரையாத் தனப்பொதி பெற்றன மார்கலி மாய்ந்ததுவே.

துகில் - ஆடை; நுரையை ஆடையாகக் கூறுதல் மரபு. புவிமகள் - பூமாதேவி; நோன்று - பொறுத்து, தாங்கி; புணரி - கடல்; கடல் பூமகள் உடுத்தற்காக நுரையாகிய ஆடையையும் அணிவதற்காகத் திரைக்கையால் பவளம் முத்துகளையும் மிகுதியாய்த் தரும்; செம்பி - செம்பிநாடு; செம்பிநாடு ஆகிய சேதுநாடு கடற்கரை சூழ்ந்ததாகும். கனம் - மேகம், பெருமை; வரையாத் தனப்பொதி பெற்றனம் - அளவுபடாத நிதிச் சுமையைப் பெற்றோம்; ஆர்கலி மாய்ந்தது - நிறைந்த வறுமை இறந்து பட்டது; வரையாத் தனப் பொதி பெற்றனம் - மலையாகிய முலை முகிழைப் பெற்றோம்; ஆர்கலி - கடல், கண்; ஆர்கலி மாய்ந்தது - அந் நிலையில் ஆர்கலியாகிய கண் மறைந்தது. செல்வம் பெற்ற காலத்தில் கண்டு களிக்கக் கண்ணில்லாமற் போயிற்றே என்று இரங்கியவாறு.

## 40

தொக்கவண் டந்தே னருந்தித் தெவிட்டுந் தொடைமுல்லையான்
றக்கவண் டன்னவர் பாங்கினன் றெவ்வர்க்குச் சார் திறலோர்
புக்கவண் டந்தருஞ் சீராச ராசன் புயல்வரைவாய்
மிக்கவண் டங்கை யடக்குவர் பந்தங்கை விட்டவரே.

தொக்க வண்டு - கூட்டமான வண்டுகள்; தெவிட்டும் - தேக்கிடும்; குமட்டும்; தொடை - மாலை; பாங்கினன் - பக்கத்து இருப்பவன்; தெவ்வர் - பகைவர்; திறலோர் புக்க அண்டம் - வீரர் புகும் சுவர்க்கம்; புயல் - மேகம். பந்தம் கைவிட்டவர் - கட்டு ஒழிந்த துறவியர்; மிக்க அண்டம் கையடக்குவர் - மிகுந்த அண்டங்களைத் தம் கையில் அடக்க

வல்லவராவர். பந்து அங்கை விட்டவர் - பந்தாகிய முலையினை அழகிய கையால் கொள்ளாது விட்டவர்; மிக்க வண்டு அங்கை அடக்குவர் - மிக்க வண்டாகிய கண்ணினை உள்ளங்கையில் அடக்குவராயினர். அங்கை - அகங்கை, உள்ளங்கை.

## 41

எம்மகு டாதி பருந்தொழுஞ் சேது விளைப்புரப்போன்
றம்மகு டந்தரை தோயப் பணிந்து தரியலர்சூழ்
செம்மகு டாதிபன் சீராச ராசன் றிகிரியன்றை
யம்மகு டந்தந்த வாறுநன் ருங்கோ லதுதரினே.

மகுடாதிபர் - முடிமன்னர்; புரப்போன் - காப்பவன்; மகுடம் - கிரீடம்; தரியலர் - பகைவர்; செம் மகுடாதிபன் - அழகிய கிரீடத்தை யுடையவன்; கோலது தரின் - செங்கோலாகிய அதனைத் தந்தால். அம் மகுடம்தந்தவாறு நன்று ஆகும் - அழகிய மகுடம் தந்தவாறும் நல்ல தாகும். கோலது தரின் - பாணமாகிய கண்ணைத் தந்தால்; அம்ம குடம் தந்தவாறு நன்றாம் - அம்ம நீ குடமாகிய முலையினைத் தந்தவாறும் நன்றாகும்.

## 42

புற்றிடை வாளர வம்புனை சென்னிப் புகழ்க்கடவுள்
பற்றிடை நெஞ்சுகொள் சீராச ராசன் பனிமலைவா
யுற்றிடை யீடே யிலாதாய்ப் படைக்கை யுடையவர்க்கு
வெற்றிடை மேலிரு வெற்புப் படைத்தல் வியப்பிலையே.

வாள் அரவம் - கொடிய பாம்பு; சென்னி - தலை; புற்றிடை... கடவுள் என்றது சிவனை. கடவுட்பற்று - கடவுளிடத்துள்ள அன்பு; இடைநெஞ்சு கொள் - நெஞ்சினிடத்து கொண்டிருக்கின்ற; பனி - குளிர்ச்சி. இடை - இடம், பூமி; ஈடு - ஒப்பு; படைக்கையுடையவர்க்கு - படைத்தல் தொழிலையுடையவர்க்கு; வெற்றிடைமேல் இரு வெற்புப் படைத்தல் - வெள்ளிடைமேல் இரண்டு மலைகளை ஆக்குதல்; வியப்பு- ஆச்சரியம். படைக் கையுடையவர்க்கு - படையாகிய கண்களையுடைய கையினையுடையவர்க்கு; அதாவது கையால் கண்களை மறைத்திருப்பவர்க்கு; வெற்று இடைமேல் இரு வெற்புப் படைந்தல் - வெறுவிதாகிய இடையின்மேல் இரண்டு மலையாகிய முலையினைப் படைத்தல்.

## 43

பெண்ணுணை யுற்றுப் பெருகும் புவிக்கின்பம் பேணும்வணந்
தண்ணுணை வைப்பவன் சீராச ராசன் சயிலத்தினி
னுண்ணுணை யுற்றவள் பொற்குடந் தாங்கிடை யுண்டெனத்தன்
கண்ணுணை யிட்டனள் கொல்லோவில் லென்னுமென் கண்முகப்பே.

புவிக்கு - உலகத்திற்கு; பெண்ணும் ஆணும் சேர்ந்து பெருகும் புவி என்க. வணம் - வண்ணம்; தண் ஆணை வைப்பவன் - குளிர்ந்த தன் அரசாணையைச் செலுத்துபவன்; சயிலம் - மலை; உள் நாணை உற்றவள் பொற்குடம் தாங்கு இடை உண்டு எனத் தன் கண்ணாணை இட்டனள்கொல் என்க. உள் - உள்ளம், மனம்; நாணை உற்றவள் - நாணத்தைப் பெற்றவள்; இல் என்னும் என் கண்முகப்பே - இல்லை என்று சொல்லும் எனக்குமுன்பே உண்டு என ஆணையிட்டுரைத்தாள் போலும் என்பது வெளிப்படை. இல் என்னும் என் கண்முகப்பே - இடை இல்லை என்னும் எனக்குமுன்; 'தொட்ட எற்குணரலாமால்' என்பர் கம்பர். பொற்குடம் என்றது முலைகளை; கண் ஆணையிடுதல் - கண்ணைத் தொட்டுச் சத்தியம் செய்தல்; கண்ணில் கைவைத்தல்.

## 44

வெட்டுப் படாத பகைத்தூற்றை வேரற வென்றுபொய்யாற்
கட்டுப் படாதவன் சீராச ராசன கனகிரிவாய்
மட்டுப் படாத தனஞ் தருகின்ற மாட்சியினுற்
றட்டுப் படாத திருவே மழைக்கை தரித்தனையே.

தூறு - புதர், குறுங்காடு; வேரற - வேரும் இல்லாமற் போகும்படி, முழுவதும் அழிய; மட்டு - அளவு; மட்டுப்படாத தனம் - அளவுபடாத செல்வம்; முலை. மழைக்கை - மழைபோலும் கை; மழையன்ன கண்ணையுடைய கை; 'மழைக்கண் மங்கையர்' என வருவது காண்க. மழைபோற் குளிர்ச்சியுடைய கண் என்றவாறு.

## 45

படையதில் வேளெனுஞ் சீராச ராசன் பனிவரைவாய்ப்
புடையது பூம்பொழில் வாழ்மயி லேயிரு பொற்குடங்க
ளிடையதின் மீதிருக் கும்போது பார்வை யெதிர்மறைத்தே
யுடையதை யில்லென் றுரைக்கநின் றீரிஃ துயர்பிலையே.

வேள் - முருகன்; புடையது - சூழ்ந்துள்ளது; மயிலே என்றது மயில் போன்ற சாயலையுடையளாகிய தலைவியை. இரு பொற்குடங்கள் - இரு பொன்னாலாகிய குடங்கள்; இரு தனங்கள். இடை - இடுப்பு; அரை. பார்வை - கண்; உடையதை இல் என்று உரைக்க - உடையதாகிய அதை இல்லை என்று சொல்ல; அரையில் துகில் இல்லை என்று சொல்ல; உடையதொன்றை இல்லை என்று சொல்ல; உடையது அயில்-கண். உடையதை இல் என்று உரைப்பது உயர்வில்லை என்பதாம்.

## 46

**கடுக்கையுற் றூர்சடைக் காட்டிற் பிறைக்கண்ணி கட்டினர்சீர்**
**தொடுக்கையுற் றூர்வஞ்செய் சீராச ராசன் றொடர்மலைவா**
**யுடுக்கையொத் தாரிடை காட்டி யெமையே யுயிர்பறிப்பா**
**ருடுக்கையற் றூர்நல் லுடுக்கையுற் றூரென்கொ லோர்வதுவே.**

கடுக்கை - கொன்றைமாலை; பிறைக்கண்ணி - பிறையாகிய மாலையை; 'மாதர்பிறைக் கண்ணியானை' என்பர் திருநாவுக்கரசர்; சடைக்காட்டிற் பிறைக்கண்ணி கட்டினர் - சிவபெருமான்; சீர் - புகழ்; சீர் தொடுக்கை - புகழைத் தொகுத் துரைக்கை; ஆர்வம் - விருப்பம்; தொடர்மலை -தொடர்ச்சியாக அமைந்துள்ள மலை; உடுக்கை ஒத்து ஆர் இடை - துடியை ஒத்துப் பொருந்திய மருங்குல்; உயிர் பறிப்ப - உயிரைப்போக்க; உடுக்கை அற்றார் - துகில் இல்லாராயினார்; உடு - அம்பு; கண்; கையுற்றார் - கையிற் பொருந்தினார்; ஓர்வது - எண்ணுவது, நினைப்பது.

## 47

**தீதகத் தோடுள சிற்றின முற்றவுந் தீர்ந்தவன்வெம்**
**பாதகத் தோடு புகாதநன் னெஞ்சினன் பார்பரவப்**
**போதகத் தோடெய்து சீராச ராசன் புயல்வரையிர்**
**சூதகத் தோடுநற் பார்ப்பாரைக் கையாற் றொடுவதென்னே.**

தீது - தீங்கு; அகம் - மனம்; முற்றவும் - முழுவதும்; வெம் - கொடிய; பார் பரவ - உலகத்தோர் புகழ; போதகம் - யானை; புயல்- மேகம்; சூதகத்தோடு - சூதகம் என்னும் இருது எச்சிலோடு, தீட்டு; சூது அகத்தோடு - சூது போன்ற முலையை மார்பிலுள்ளதோடு; பார்ப் பார் - அந்தணர்; பார்க்கும் உறுப்பாகிய கண்கள். 'அஞ்சாங் குலத்தவர் பார்ப்பாரைச் சேர்ந்த ததிசயமே' என்னும் இரகுநாத சேதுபதி ஒருதுறைக் கோவையடி காண்க.

## 48

அக்கை யரவி னரைநா ணொடுபுனை யண்ணலையுங்
கொக்கை முனிந்திரு கூறுசெய் தாண்ட குமரனையுந்
திக்கை நினைத்துத் தொழும்ராச ராசன் றிருமலைவாய்ச்
சக்கை யின்றாகவு மங்கரும் பீந்த தகைமைநன்றே.

அக்கை - எலும்பை; அரவின் அரைநாண் - பாம்பாகிய அரை - ஞாணொடு; புனை - அணியும்; அண்ணல் - பெரியோன், இங்கே சிவபெருமான்; கொக்கை - மாமர வடிவில் வந்த சூரனை; முனிந்து - கோபித்து; கூறுசெய்து - பிளந்து; ஆண்ட - ஆட்கொண்ட; குமரன் - முருகன்; திக்கை நினைத்துத் தொழும்-சிவனும், முருகனும் வீற்றிருக்கும் திசை நோக்கி வணங்கும்; திருமலை-அழகியமலை; சக்கை இன்றாகவும்-சக்கை இல்லையாகவும்; அங்கரும்பு ஈந்த - அழகிய கரும்பினைக் கொடுத்த; சக்கு - கண்; சக்கை இன்றாகவும் - கண்களையில்லையாகவும்; அங்கு அரும்பு ஈதல் - அவ்விடத்தே அரும்பு போன்ற முலையினைத் தருதல், தகைமை - பண்பு, முறைமை. கரும்பினுள் சக்கையிருக்கும்; நீ சக்கையில்லாத அங்கரும்பு ஈந்தாய்; ஈதோர் வியப்பிருந்தவாறென்னே என்றபடி.

## 49

தீங்க ளருந்திச் சுரும்பர் விரும்புந் திகழ்தளவப்
பூங்கணி சூட்டிய சீராச ராசன் பொழில்வரைவா
யீங்க ணிருகல் சுமந்து தளரு மிடையறிந்து
தாங்கவந் தாரையுங் கையால் விலக்கலென் சால்புடைத்தே.

தீம் கள் - இனிய தேன்; சுரும்பர் - வண்டுகள்; தளவப்பூங்கணி - முல்லைப் பூமாலை: கணி - கண்ணி; பொழில் - சோலை; ஈங்கண் - இங்கே; இருகல் சுமந்து - இரு முலைகளைத் தாங்கி; தளரும் இடை - சோர்வுறும் இடை; தாங்க - தாங்காநிற்கையில்; அந்தாரையும் - அழகிய கண்ணையும்; கையால் விலக்கல் - கையினால் மறைத்தல்; இடை - என்பது காலம் என்றும் பொருளாம். தளருமிடை அறிந்து - சோர்வுறும் காலமறிந்து; தாங்க வந்தாரையும் கையால் விலக்கல் - தாங்கி உதவ வந்தாரையும் கையினால் தடுத்தல்; என் சால்புடைத்து - என்ன முறைமையாகும்; முறையில்லை என்றதாம்.

## 50

மைம்மானும் வண்மையன் பாற்கர பூபன் வரத்துதித்தோன்
தம்மானை மீது நிதிப்பொறை கொண்டு தரணிபர்வந்
தெம்மா னருளெனுஞ் சீராச ராச னிருங்கிரியா
ரம்மானை யீந்தன ரீந்தில ரென்கொ லதிசயமே.

மைம்மானும் - மேகத்தை ஒக்கும்; வண்மையன் - கொடையாளன்; நிதிப்பொறை - நிதிப்பாரம்; தரணிபர் - பூமியாளும் மன்னர்; அம் - மானை - அம்மானைக்காய்கள்; அம் ஆனை ஈந்தனர் - அழகிய யானை யாகிய முலையினைத் தந்தனர்; அம் மானை ஈந்திலர் - அழகிய மானைப்போன்ற கண்ணைத் தந்தாரில்லை; ஒன்று கொடுத்து நிற்கையில் அதைக் கொடாதவருமாதல் அதிசயம் விளைப்பது என்பதாம்.

## 51

தினமுடிப் புற்ற நியமத்த னொன்னார் செருமுடித்துச்
சினமுடிப் புற்றவன் சீராச ராசன் றிகிரியன்னாய்
தனமுடிப் பற்று வெளிப்பட் டிடையே தளர்ந்ததுவோ
கனமுடிப் புற்ற குழலாய் விழிக்கைக்குக் காரணமே.

நியமத்தன் - திட்டமிட்டுக் கடமைகளைச் செய்பவன்; ஒன்னார் - பகைவர்; செரு - போர்; திகிரி - மலை; தனமுடிப்பு அற்று வெளிப்ப்பட்டு இடையே தளர்ந்ததுவோ - பொருள் முடிப்புக் கையற்று வெளிப் படலால் இடையிலே தளர்ச்சி எய்தியதோ. விழிக்கைக்குக காரணம் - நீ செயலொன்று மின்றி விழிப்பதற்குக் காரணமென் என்பது வெளிப் படை. தனம் முடிப்பு அற்று - முலைகள் கச்சுமுடிதலற்று வெளித் தோன்றாநிற்க; இடையே தளர்ந்ததுவோ - இடையொன்றே தளர்ந் ததுவோ; விழிக் கைக்குக் காரணம் - விழியுடன் கூடிய கையுடைமைக்குக் காரணம். அத் தளர்ச்சியைக் காணப் பொறாமல் கண்ணை மூடினை என்றவாறு. கனம் முடிப்புற்ற குழலாய் - மேகத்தை எடுத்து முடிந்தது போன்ற கரிய கூந்தலை யுடையாய்.

## 52

வில்லிடை யேகொண்ட வள்ளிய செங்கையன் வெல்புயங்கள்
கல்லிடை யேகொண்ட சீராச ராசன் கரந்தையன்னார்
மெல்லிடை யேகிக் கெடுதலுற் றூர்கடன் மேவுகையார்
நல்லிடை யேகிப் படைத்தது காட்டினர் நந்தமக்கே.

வில் கொண்ட செங்கையன், வள்ளிய செங்கையன் என்க. கல் - மலை; புயங்கள் மலைபோல் திண்மையுடைவன் என்பதாம். கரந்தை- சேதுநாட்டு ஊர்களுள் ஒன்று; மெல்லிடை ஏகிக் கெடுதலுற்றார் - மெல்லிய இடத்துச் சென்று கெட்டவர்; கடன் மேவு கையார் - கடனைப் பொருந்துதலுள்ளார். நல் இடை ஏகிப் படைத்தது காட்டினர் - நல்ல இடத்துச் சென்று தாம் படைத்ததைக் காட்டாநின்றனர். மெல் இடை ஏகிக் கெடுதலுற்றார் - மெல்லிய இடை எங்கோ போய்க் கெடுதலைப் பொருந்தியவர்; இடை இல்லாதவர். கடல் மேவு கையார் - கண்ணைப் பொருந்தியகையினர். நல் இடையே கிப்படைத்தது - நல் என்பதிடையே 'கி' என்னும் எழுத்தைப் படைத்தது நகில், அதாவது முலை என்றவாறு.

## 53

நலப்பன் மகிபர் தொழுராசராச னயந்தவரைத்
தலப்பன் மணியி னிலங்குவிர் மாயத் தனம்படைத்தீ
ருலப்பில் சுகமொழி யீரா சுகத்தை யொளித்துவிட்டீர்
கலப்பின் விகாரம் பொருந்திய தின்பமென் காண்பதுவே.

நலப் பல் மகிபர் — நலங்கள் பலவற்றைப் பெற்ற மன்னர்; நயந்த வரைத்தலப் பல் மணியின் இலங்குவிர் - விரும்பிய மலையிடத்துப்பெற்ற பற்பல இரத்தினங்களைப் போல ஒளியுடன் விளங்குவீர்; மாயத்தனம் படைத்தீர் - வஞ்சகத்தன்மை பெற்றீர்; மாயத் தனம் படைத்தீர் - எம் உள்ளம் தளரும்படியாக முலைகளைப் பெற்றுள்ளீர்; உலப்பு இல் சுகம் மொழியீர் - கெடுதல் இல்லாத கிளிமொழியீர்; சுகம் — கிளி; சுகம் ஒழியீர் - இன்பம் நீங்காதவராயினீர்; ஆசுகத்தை ஒளித்து விட்டீர் - ஆகின்ற இன்பத்தை மறைத்துவிட்டீர்; ஆசகம் - ஆகின்ற சுகம், அம்பு; ஆசுகத்தை ஒளித்துவிட்டீர் - அம்பு போன்ற கண்களை மறைத்துவிட்டீர்; கலப்பின் விகாரம் பொருந்தியது - சேர்ந்ததால் வேறுபாடு வந்துற்றது; இன்பம் என் காண்பது - என்ன இன்பத்தைக் காண இயலும். கலப்பின் விகாரம் பொருந்தியது - கலவி; 'கல' என்னும் எழுத்துக்களுக்குப்பின் 'வி' என்னும் எழுத்துப்பொருந்தியது என்றவாறு; கலவி இன்பம் காண்பது என்க.

## 54

விளர்தரு புல்லியர் சூழ லுறுதவில் வேளிசைவண்
டுளர்தரு முல்லையன் சீராசராச னுயர்கிரிவாய்
வளர்தரு மத்தகம் வைத்தநல் லாரிந்த வையகத்தே
கிளர்தரு தீங்கு வளைக்கை யுற்றுலென் கிளத்துவதே

விளர்தரு புல்லியர் - வெள்ளறிவுடைய, அதாவது அறிவற்ற கீழோர் ; சூழல் - கூட்டம்; வில்வேள் - கரும்பு வில்லையுடைய மன்மதன் போன்ற அழகன் ; இசை வண்டு - இசை ஒலி எழுப்புகிற வண்டு ; உளர்தரு - பறந்து சுழலுகின்ற ; மொய்க்கின்ற. வளர் தருமத்து அகம் வைத்த நல்லார் - தாம் வளர்தற்குக் காரணமான அறத்திலே மனம் வைத்த நல்லோர் ; வையகம் - பூமி ; கிளர்தரு தீங்கு வளைக்கலுற்றால் - கிளர்ந்த தீங்கினை வளைத்தலைப் பொருந்தினால் ; என் கிளத்துவது - என்ன சொல்லுவது ; வளர்தரு மத்தகம் - வளர்தருகின்ற ஆனை, அதாவது முலை ; நல்லார் - பெண்டிர் ; கிளர்தரு தீம் குவளைக் கை உற்றால் - தேன் கிளர்ந்தெழுகிற அழகிய குவளை மலரோடு கை பொருந்தினால் ; குவளை போன்ற கண்ணோடு கை சேர்ந்தால் : அதாவது கண்களை மறைத்தால்.

55

தருவிடை வைத்த பெருங்கொடை தன்கரந் தாங்கியன்பர்
வெருவிடை யஞ்ச லெனும்ராச ராசன் வீரையில்வான்
பொருவிடை மீமிசைப் பாரத் தனந்தனைப் பூண்டுமையே
மருவிட நீருமச் சங்கர னாகமுன் வந்ததென்னே.

தரு - கற்பக மரம் ; தன் கரம் தாங்கி - தன் கையில் கொண்டு ; அன்பர் - அன்பு செலுத்தும் நண்பர் ; வெருவிடை - துன்பத்தால் அஞ்சுகின்றவிடத்து; அஞ்சல் எனும் - அஞ்சாதே என்று சொல்லும் ; வீரை - வீரை என்னும் ஊர் ; வான்பொருவிடை - வானிலும் போர் செய்கின்ற இடபம் ; விடை மீமிசை - இடபத்தின் மேல் ; பாரத்து அனந்தனைப் பூண்டு - பொறையுடைய ஆதிசேடனைத் தரித்துக்கொண்டு ; நாகம் அணிந்து என்றவாறு ; அனந்தன் என்றது சாதிபற்றி ; குரங்கினை அனுமான் என்பது போல்வது. உமையே மருவிட - உமாதேவி மருவ ; நீரும் அச்சங்கரனாக - நீரும் அச் சிவபிரானாக ; வான்பொரு இடை மீமிசை - ஆகாயத்தை ஒத்த இடைமேல் ; பாரத் தனந்தனைப் பூண்டு - பாரமான முலைகளைத் தாங்கி; உமையே மருவ - உம்மையே யான் அணைய ; நீரும் மச்சம் கரனாக - நீரும் மீன் கையிடத்ததாக ; மீன் போன்ற கண் கையிடத்ததாக ; கண்களைக் கையால் மறைத்து என்றபடி.

56

உரிதான கல்வியுங் கேள்வியு மிக்க வுறுவர்மனப்
பரிதாபந் தீர்த்தொளிர் சீராச ராசன் பனிமலையீர்
பெரிதா மரன்மனை பெற்றது காட்டிய பெற்றியைப்போ
லரிதாரம் பெற்றதுங் காட்டிவிட் டாலின்ப மார்வதுவே.

உரிதான - உரிமையான, தக்க ; உறுவர் - அறிஞர், புலவர் ; மனப்பரிதாபம் - மனத்துயர் ; பெரிதாம் அரன்மனை பெற்றது - அரனார் மனையாட்டியைப் பெற்றதாகிய பெரிது ; இமவான் என்னும் மலை. மலை காட்டியபெற்றி - மலைக்கு ஒப்பாம் முலைகளைக் காட்டிய தன்மை ; பெற்றி - தன்மை ; அரிதாரம் பெற்றது - திருமால் மனைவியாகிய பொன்மகளைப் பெற்றது கடல் ; கடல் என்றது கடல் போன்ற கண் ஆம்.

## 57

உருமுப் படைத்த புயன்மா வுகைத்திகல் வோர்மருண்டு
திருமப் படைதொட்ட சீராச ராசன் றிகிரியில்வே
டருமப் படைக்குத் தலைமைகொண் டார்கட லைமறைத்தார்
பெருமுப் படைத்தலை வன்மோது போரெமைப் பேதிக்கவே.

உருமுப் படைத்த புயல் - இடியைப் பெற்றதாகிய மேகம் ; புயன்மா - மேகம் போன்று முழக்கமுடன் செல்லும் கரிய யானை ; இகல்வோர் - மாறுபட்டோர், பகைத்தவர் ; மருண்டு - மயங்கி ; திரும - திரும்பி ஓட, அதாவது புறமுதுகிட்டுத் தோற்றோட ; படை - ஆயுதம் ; வேடருமப்படை - வேள் தரும் அப்படை - மன்மதன் தருகின்ற படை என்றது பெண்டிரை ; வேள் தரும் அப் படைக்குத் தலைமை கொண்டார் - பெண்களின் நாயகமாக விளங்குகின்றார் தலைவி என்றபடி ; கடலை மறைத்தார் - படைக்கடலைத் தடுத்து நிறுத்தினார் ; கடல் போன்ற கண்களை மறைத்தார் ; பெரு முப்படைத் தலைவன் மோது போர் - பெரிய தானை, யானை, குதிரை என்னும் மூன்று படைக்குத் தலைவன் மோதிய போர் ; முப்படைத்தலை வல் மோது போர் - மு என்னும் எழுத்தைப் படைத்துள்ள லை - முலை ; முலையாகிய சூது கருவி மோதுபோர்; கலவிப் போர். பேதிக்க - வருத்த ; குழம்பச் செய்ய.

## 58

மெய்ப்படை யால்வஞ்சர் பொய்வே ரறுத்தொளிர் வீரசொர்க்க
வைப்படை யார்பெற வொள்வாள் விசிறு மதப்புலியிற்
றெய்ப்படை யாதவன் சீராச ராச னெழில்மலைவாய்க்
கைப்படை யாரென நின்று ரளித்தார் கயத்தலையே.

மெய்ப்படை - உண்மையாகிய படை ; நம்பிக்கையுள்ள சேனை ; வஞ்சர் - வஞ்சகர் ; வேரறுத்து - முற்றும் போக்கி ; வீர சொர்க்க வைப்பு - போரில் மடிந்த வீரர் செல்லும் சொர்க்க உலகம்; அடையார் -

பகைவர் ; ஒள்வாள் விசிறு மதப்புலி - ஒளி பொருந்திய வாளைச் சுழற்றுகிற எழுச்சியுடைய புலிபோல்வான் ; ஈந்து எய்ப்பு அடையாதவன் - கொடுத்து இளைப்பு அடையாதவன் ; எழில் - அழகு. கைப்பு அடையார் என நின்றார் - கசப்பு அடையாதவர் என்று சொல்ல நின்றவர் ; கயத்தலை அளித்தார் - தாம் கசப்பு அடையார் எமக்குக் கசப்பு அளித்தார் என்றவாறு. கயத்தல் - கசத்தல். கைப்படையார் - கையிற் படையாகிய கண்ணுடையார்; கயத்தலை - யானைமத்தகம். முலை.

## 59

ஒருகலை மானுந் திருமா மகளு முடனிலங்க
வருகலை வாணர்க்கெஞ் ஞான்று மளித்து மதுரகவி
பருகலை வேட்டவன் சீராச ராசன் பனிமலையிர்
பெருகலை வேண்டினன் குன்று தலைத் தந்த பெற்றியென்னே.

ஒரு கலைமான் - ஒப்பற்ற கலைக்குரியளாய கலைமகள் ; திருமா மகள் - செல்வத்திற்குரிய இலக்குமி ; கலைவாணர் - கலையில் வல்ல புலமையாளர் ; எஞ்ஞான்றும் - எப்பொழுதும் ; மதுரகவி - இனிமையான பாடல் ; பருகலை வேட்டவன் - செவி மடுத்தலை விரும்பியவன் ; பெருகலை வேண்டினன் - வளர்தலை விரும்பினேன் ; குன்றுதலைத் தருதல் - குறைதலைத் தருதல் ; பெற்றி - தன்மை ; வளர்தலை விரும்பியவர்க்குக் குறைதலைத் தருவது பொருத்தமில்லை என்றவாறு. பெருகு அலை - பெருகிய அலையாகிய கண்; குன்று தலைத்தருதல் - குன்று ஆகிய முலை எதிர்ப்படுதல்.

## 60

கிளைவிட்டி லாதியெட் டீதியு மின்றிக் கிளர்செம்பிய
ருளைவிட்ட வாம்பரிச் சீராச ராச னுயர்கிரிவாய்த்
தளைவிட்டு மாச்சீர் மயங்கவிட் டீர்கொச் சகம்விடுத்தீர்
கொளைவிட் டவாமொழி யீர்காரி கைவைத்துக் கொண்டென்னையே.

கிளை விட்டில் - பெருக்கமுறும் விட்டில் பறவை ; கூட்டமான விட்டில் பறவை ; ஆதி - முதலிய ; ஈதி - துன்பம் ; கேடு ; எட்டு ஈதியாவது விட்டில், கிளி, எலி, நால்வாய், வேற்றரசு, தன்னரசு, மிக்க பெயல், பெயலின்மை. செம்பியர் - செம்பிநாட்டார் ; உளைவிட்ட வாம்பரி - பிடரிமயிர் விரிந்த தாவும் குதிரை ; தளை விட்டு - பாவில்

தளை தவிறவிட்டு; மாச்சீர் - தேமா முதலிய மாச்சீர் ; கொச்சகம் - கொச்சகப்பா ; காரிகை - கட்டளைக்கலித்துறைப் பாடல். தளை விட்டு மாச் சீர் மயங்கவிட்டீர் - கட்டு விடுத்து மா ஆகிய முலையின் சீரில் யான் மயங்கும்படி செய்தீர் ; கொச்சகம் விடுத்திர் - கொய்சகமாகிய உடையை விடுத்தீர்; கொச்சகம் - ஆடை ; கோளை விட்டு அவா மொழியீர் - கொளை - பண்; பண்ணைவிடுத்துக் காதலிக்கும் சொல்லீர் ; காரிகை வைத்துக் கொண்டு - விடமாகிய கண்ணைக் கையில் வைத்துக் கொண்டு. காரி - விடம். காரிகை வைத்துக்கொண்டும் காரிகை இலக்கணம் தெளியாமல் தளைவிட்டு மாச்சீரும் மயங்கவிட்டீரே. இதுவோ நும் காரிகை இயல் என்றவாறு.

## 61

பெருகெழு பானிரு பாளைய காரர்பொன் பெய்துதொழு
முருகெழு பூங்கழற் சீராச ராசன் முதுவரையீ
ருருகெழு மாலைமாற் றுந்தூங்கல் வஞ்சியு மூங்குவிட்டுத்
திருவெழு கூற்றிருக்கையுங் கையாக்கிய செய்தியென்னே.

பெருகு - செல்வம் முதலியவற்றால் வளர்ந்துள்ள ; எழுபானிரு பாளையகாரர் - எழு பததிரண்டு பாளையகாரர் ; சேதுபதியின் ஆணைக்கு உட்பட்டார் இவர் ; பொன் பெய்து - பொன்னைக் கப்பமாகச் சொரிந்து ; உருகெழு பூங்கழல் - நல்ல வடிவம் பொருந்திய அழகிய வீரக்கழல் ; உருகெழு என்பதற்கு அச்சம் நிறைந்த என்றும் உரைக்கலாம். முதுவரை - பழமலை ; உருகெழு மாலைமாற்று - நல்ல வடிவம் பொருந்திய மாலைமாற்று; பிரபந்த வகை. தூங்கல் - பாவின் ஓசைவகை ;• வஞ்சி - பாவகை ; ஊங்குவிட்டு - புறத்தே போக்கி ; திருவெழுகூற்றிருக்கை - பிரபந்தவகை. கையாக்கிய - கைப்பற்றிய ; செய்தி - செயல். உரு கெழு தூங்கல் - உட்கு பொருந்திய மயக்கத்தை மாற்றுகின்ற தூங்கலாகிய யானை போன்ற முலையை ; வஞ்சியும் ஊங்குவிட்டு - வஞ்சிக்கொடி போன்ற இடையின் மேலே போக்கி ; திரு எழு கூற்று இருக்கை - அழகு எழுகின்ற எமனுக்கு இருப்பிடமாகிய கண். அழகாலே ஆடவரைக் கொல்லுதலால் திருவெழு கூற்ருயிற்று. கையாக்கிய செய்தி - கையினால் உள்ளடக்கி மறைத்த தன்மை.

## 62

மத்தந் தலைவைத்த சீராம நாதர் மலர்ப்பதத்தை
நித்தந் தலைவைக்குஞ் சீராச ராச னெடுங்கிரியீர்
சித்தந் தலையளி செய்பீர் கடலிற் றிருக்கைவைத்து
முத்தந் தலையளித் தீரின்ப வளத்தை முன்னுமெற்கே.

மத்தம் - ஊமத்தமலர் ; தலைவைத்த - தலையில் சூடிய ; நித்தம் - நாள்தோறும் ; தலைவைக்கும் - இராமநாதர் திருவடியில் தலைவைத்து வணங்கும். சித்தம் - மனம் ; தலையளிசெய்யீர் - கருணை வையீர். கடலின் திருக்கை வைத்து - கடல்போன்ற மயக்கத்தை வைத்து ; இன்பவளத்தை முன்னும் எற்கு முத்தம் தலையளித்தீர் - இனிய பவளம் வேண்டினேற்கு முத்தம் கொடுத்தீர் ; கடலில் திருக்கை வைத்து - கடலாகிய கண்ணில் அழகிய கையை வைத்து ; அதாவது கண்ணை மறைத்து. முத் தந்த லை அளித்தீர் - மு என்னும் எழுத்தை முன்னே த்ந்த லை, முலை என்றவாறு ; முலை யளித்தீர் - முலையைக் கொடுத்தீர் ; இன்ப வளத்தை - இன்பப் பெருக்கை ; முன்னும் - கருதும், விரும்பும்.

## 63

சிட்டரை விட்டிலன் றூய குணங்கள் செறிதலில்லாத்
துட்டரை விட்ட புலவோர் கவிச்சுவை துய்த்தலில்க
சட்டரை விட்டனன் சீராச ராசன் றடவரைவாய்ப்
பட்டரை விட்டனர் பார்ப்பாரைப் பற்றினர் பாவையரே.

சிட்டர் - பெரியோர், கல்வி நிரம்பிய சான்றோர்; தூய குணங்கள் - நற்குணங்கள்; செறிதல் - மிகுதல்; துட்டர் - தீயோர்; கவிச்சுவை - கவிநயம், கவி இன்பம்; துய்த்தல் - அனுபவித்தல்; கசட்டர் - குற்றமுள்ளவர்; தடவரை - அகன்ற பெருமலை; பட்டரை விட்டனர்; பட்டர் - குருக்கள்; பட்டு அரை விட்டனர் - பட்டாடையை அரையில் நெகிழ விட்டனர், பாதி நெகிழவிட்டனர் என்றுமாம்; பார்ப்பாரைப்பற்றினர் - பார்ப்பார் - அந்தணர்; கண். பார்ப்பாரைப் பற்றினர் - கண்ணைக் கையால் பற்றி மறைத்தனர். பெரிய ஐயர் பட்டரை விட்டுப் பார்ப்பாரைப் பற்றினர் என்பது ஒலிப்பொருள்.

## 64

துலையினி ஞெனக் கோடா நடுநிலைத் தூமனத்தான்
மலையினிற் றீப மெனும் ராச ராசன் வளவரைவாய்க்
கலையரை நீத்துக் குயவரை விட்டதென் காரியினைத்
தலைமைகொள் கூற்று வணேச்சத் தியைப்பற்றுந் தன்மையரே.

துலையினின் நா - தராசின் நடுமுள்; நடுநிலை - ஒருபக்கம் சாராது எல்லோருக்கும் ஒப்ப நிற்கும் நிலை; தூமனம் - தூய உள்ளம்; மலையினில் தீபம் - மலை விளக்கு; மலையின்கண் உள்ள விளக்கு எல்லா

இடங்களிலும் தெரிதல் போல இவன் புகழும் எங்கும் அறியப்பட்டது என்பதாம். வள வரை - வளம்பொருத்திய மலை; கலையர் - குங்கிலியக் கலய நாயனார்; குயவர் - திருநீலகண்டக்குயவர்; காரி - காரி நாயனார்; கூற்றுவன் - கூற்றுவநாயனார்; சத்தி - சத்தி நாயனார். கலை அரை நீத்து - ஆடையை அரையினின்றும் தள்ளி; குயவரை - குசமாகிய மலை; காரி - விடம்; கூற்று - எமன்; சத்தி - வேல்; விடமும் கூற்றும் வேலு மாக ஆகிய கண். சத்தி என்பது சத்தியாகிய உமையால் முருகனுக்கு அளிக்கப்பட்ட வேல் என்பதாம். 'தற்பெயர் நிறுத்திக் கற்பினொடு கொடுத்த வேல்' எனவரும் கல்லாட அடி நோக்கத்தக்கது.

## 65

முட்கரங் கொண்டு பெரும்பகை நாட்டை முரணழித்தே
யெட்கரங் கொண்டயல் லேரா லுழுதுவித் திச்செருக்கும்
உட்கரங் கொண்ட படைராச ராச னுயர்கிரியிற்
புட்கரங் கொண்டு மலையங்கை விட்டதென் பூவையரே.

முட்கரம் - பிடிவாதம்; முரண் - வலிமை; கரம் - கழுதை; வித்தி - விதைத்து; கழுதை பூட்டிய ஏரால் உழுது எள்ளை விதைத்து செருக்குக் கொள்ளுதல் வெற்றியுற்ற மன்னரின் செயல்களாம். உட்கரம் - எழுச்சி; புட்கரம் கொண்டு - புட்கர தேசத்தைக் கைப்பற்றி; மலையம் - மலைய மலை, பொதியமலை; புள் கரம் கொண்டு - வண்டைக் கைக்கொண்டு; அதாவது வண்டாகிய கண்ணை மறைத்து என்றவாறு. மலையம் - மலையமலை; என்றது மலைக்கொப்பம் முலைகளை.

## 66

துக்கம் தவிர்த்தொளிர் சீராம நாதர் துணையடிக்கு
மிக்கன் புளங்கொளுஞ் சீராச ராசமன் வெற்பனையீர்
அக்கங்கை வைத்தவர் தோலா ரகலத்த ராடையில்லாத்
திக்கம் பரர்நல் லிதழிய ரென்றுமைச் செப்புவனே.

துணையடி - இரு திருவடி; அக் கங்கை வைத்தவர் - அந்தக் கங்கையைத் தலைமேல் வைத்தவர்; தோலார் அகலத்தர் - தோலாடை (யானைத்தோலாடை) போர்த்த திருமார்பினையுடையவர்; ஆடை இலாத் திக்கு அம்பரர் - நிர்வாணமாதலால் திக்கையே ஆடையாகக் கொண்டவர்; நல் இதழியார் - நல்ல கொன்றைமாலையையுடையவர். இவை சிவபெருமானுக்குரிய அங்கவடையாளங்களாகும்; இவை தலை விக்கும் பொருந்தும் வகையில் ஏற்றி உரைக்கலாம். அக்கம் கைவைத்

தவர் - அக்கமாகிய கண்ணைக் கையில் வைத்தவர்; தோல் ஆர் அகலத்தர் - யானை பொருந்திய மார்பினர்; இங்கே யானை என்றது முலை. ஆடை இலாத் திக்கு அம்பரர் - உடைநெகிழ ஆடையின்றி நின்றனர் என்றவாறு. நல் இதழியர் - நல்ல இதழினை (உதட்டினை) யுடையபெண்டிர்.

67

நாளம் விளைத்த நளின வயற்செம்பி நாடுவைத்த
தோளம் பொருப்பினன் சீராச ராசன் ரெுடர்மலைவாய்
நீளம் படைத்த குழலா யிசைதரு நேரத்திலே
தாளம் விடுத்தவர் தம்புரு வங்கை தரித்தெனையே,

நாளம் விளைத்த நளினம் - தண்டோடு பொருந்திய தாமரை; தோள் அம் பொருப்பினன் - தோளாகிய அழகிய மலையினையுடையவன்; நீளம் படைத்த குழல் - நெடிய கூந்தல்; இசைதரு நேரத்திலே - பாட்டு உதவும் வேளையிலே; தாளம் விடுத்தவர் - ஒற்றும் தாளத்தைக் கை விட்டவர்; தம்புரு அங்கை தரித்தது - தம்புரு என்னும் சுருதிக் கருவியைக் கையில் கொண்டது. இசைதரு நேரத்திலே - புணர்தரு வேளையிலே; தாளம் விடுத்தவர் - தாளம் போன்ற முலையை வெளிப் படுத்தியவர்; தம் புருவம் கை தரித்தது - தம்முடைய புருவத்தைக் கைபொருந்தியது. கண் மறைப்புழிப் புருவமும் மறைந்தது பற்றிக் கூறியது.

68

பெரும்பாண ரொக்கல் வறியோர் வெறுக்கை பெருந்தமிழோ
ரருங்காம தேனு வெனும்ராச ராச னணிவரையீர்
பொருந்தாரை நீர்தா மிருட்சிறை வைத்தல் பொருந்துமென்ரே
விரும்பாந் தளையுடை யீர்வல் விலங்கெமக் கிட்டதுவே.

பெரும்பாணர் - பெரியயாழினைவைத்து இசை பாடுதலில் வல்ல இசைகாரர்; ஒக்கல் - சுற்றம்; வெறுக்கை - செல்வம்; பெருந் தமிழோர் - சிறந்த தமிழ்ப் புலவர்; காமதேனு - விரும்பியதனைக் கொடுக்கும் தெய்வப்பசு; அணி - அழகு; பொருந்தாரை - பொருந்தாத பகைவரை; இருட்சிறை வைத்தல் - இருண்ட சிறையில் அடைத்து வைத்தல்; இரும்பாந் தளையுடையீர் - இரும்பாகிய தளையினையுடையீர்; வல் விலங்கு - வலிய கை விலங்கு. பொரும் தாரை - பொருகின்ற வாள், கண்; இருட்சிறை வைத்தல் - வாளாகிய கண்ணை இருட்சிறை

யிடல், அதாவது கைகளால் மறைத்து வைத்தல்; இரும் பாந்தளையுடையீர் - பெரிய பாம்பாகிய அல்குலையுடையீர்; பாந்தள் -பாம்பு, அல்குல்; வல்விலங்கு - யானை, முலை. வல்லும் விலங்குமாகிய முலை எனினும் அமையும். வல் - சூதாடு கருவி.

## 69

துண்டீர பல்லவர் போர்வென்ற சோழர் துணைவலியாந்
திண்டீர வஞ்சினத் தண்செம்பி நாட்டுத் திறன்மறவர்
ஒண்டீர வங்கிசன் சீராச ராச னுயர்கிரிவாய்க்
கண்டீர வங்கை மறிப்ப ரடக்கார் களிற்றையென்னே.

துண்டீர பல்லவர் - தொண்டைநாட்டுப் பல்லவர்; சோழர் துணைவலி - சோழர்க்குத் துணைவலியாகச் சென்றது செம்பிநாட்டு மறவர் சேனை, துணைவலி — பக்கபலம்; திண் தீர வஞ்சினம் - நிலைத்த உறுதியான வஞ்சினம்; வஞ்சினம் - கடுங்கோபம்; சூளுறவு. திறல் மறவர் — வலிமை பெற்ற வீரர்; வங்கிசன் — வழித் தோன்றல்; கண்டீரவம் கைமறிப்பர் — சிங்கத்தைக் கையால் மறைப்பார்; அடக்கார் களிற்றை - யானையை அடக்கார். கண்தீர அங்கை மறிப்பர் - கண் முழுமையும் கையால் மறைப்பார்; அடக்கார் களிற்றை - களிறாகிய முலையை அடக்கார்.

## 70

குளிர்சிந்து பூம்பொழிற் றேவையர் கோன்றிரை கோத்தமுத்தம்
மிளிர்சிந்து பூந்துறைச் சேது மகீபன் மிடியர்க்குப்பொற்
றளிர்சிந்து கற்பகஞ் சீராச ராசன் றடவரையீர்
ஒளிர்சிந்து நாடுற்ற யான்மலை யாள்முன் னுற்றனனே.

சிந்துதல் — பெய்தல், தூவுதல்; பூம்பொழில் — பூஞ்சோலை; தேவையர் - இராமேச்சுரப் பதிவாழ்நர்; திரை - அலை; திரைகோத்த முத்தம் மிளிர் - அலைகளால் திரட்டப்பட்ட முத்துகள் ஒளிவீசும்; சிந்து பூந்துறை - மலர்கள், மகரந்தம், தேன் முதலியன விழுகின்ற அழகிய கடற்றுறை; மகீபன் - அரசன்; மிடியர் - வறியர்; பொற்றளிர் சிந்து கற்பகம் - பொன்னாகிய தளிரைத்தரும் கற்பகமரம் போல்வான்; பொன்னை வழங்குபவன்; ஒளிர் சிந்து நாடு- விளக்கமான சிந்து தேசம்; மலையாளம் - மலையாளநாடு; சிந்து நாட்டைப் பெற்ற யான் மலை நாட்டையும் பெறக் கருதினேன் என்பதாம். ஒளிர் சிந்து நாடுற்ற யான் - விளங்கும் கடலாகிய கண்ணைத் தேடுற்ற யான்; மலை ஆள முன் உற்றனன் - முலையாகிய மலையை ஆள முன்னே பொருந்தினேன்.

## 71

அடுவினை மிக்க செருவென் றிதன்கொடிக் காகவம்பு
தொடுவினை செய்படைச் சீராச ராசன் றொடர்மலையீர்
நடுவனை யீங்குத் தடுத்துநின் றீரிந்த நன்மையைபோல்
கெடுவுடை யம்மந் தனைத்தடுத் தாலொரு கேடிலமே.

அடுவினை மிக்க செரு - கொல்லுந்தொழில் மிகுந்த போர்; வென்றி- வெற்றி; தன் கொடிக்காக - தன் சின்னமாகிய அனுமக்கொடியைக் காப்பதற்காக; அம்பு தொடுவினை செய்தல் - அம்பை வில்லில் பொருத்தி எய்தல்; படை - சேனை; நடுவன் - எமன்; கூற்றாகிய கண்; கெடுவுடை அம் மந்தனை - கேடு பொருந்திய அந்த மந்தனாகிய சனியை; சனி கெடுங்காலம் துன்பம் செய்பவன்; கூற்றுவன் உடனே அழிப்பவன் என்னும் வேறுபாடும் நோக்கத்தகும். காதலை ஒருநாளை ஒருபொழுதைத் துன்பம் என்பர். அம்மம் - முலை; அம்மந்தனை - முலையை; ' அம்மமுண்ணத் துயிலெழாயே ' என்பர் ஆழ்வார்.

## 72

நூலா ரருண கிரிநாதர் சந்த நுவன்றமிழ்ப்
பாலாவல் கொள்கின்ற சீராச ராசன் பருவரையீர்
மேலாவர் பூவை முகங்குவிந் தேவிம்ம விட்டுநின் றீர்
நாலாவர் பூவையுங் கைப்பற்றி னீர்க்கொளி நந்துவதே.

அருணகிரிநாதர் - முருகப்பெருமான்மேல் திருப்புகழ் பாடிய திருத்தொண்டர்; சந்தம் - ஓசைநயம்; சந்தம் நுவன்ற தமிழ் - சந்தமுறையில் பாடிய தமிழாகிய திருப்புகழ். ஆவல் - விருப்பம்; மேலாவர் பூவை - மேற்குலத்தவர் பெண்; முகம் குவிந்தே விம்ம - முகம் மலராது துக்கத்தால் அழுது அழிய; நாலாவர் பூவை - வேளாளர் பெண்; ஒளி நந்துதல் - புகழ் கெடல். நந்தல் - கெடல்; முகமலராது அழிதல் பூவைக்கும் முகம் குவிந்து பெருத்தல் பூவுக்கும் பொருந்தும். மேலாவர் பூ - அந்தணர் பூ, தாமரை, முலை. முகம் குவிந்தே விம்ம - மொட்டாகிப் பெருக்க; நாலாவர் பூ - வேளாளர் பூ, குவளை; அதாவது கண்; ஒளி நந்தல் - ஒளி இழத்தல், கண்ணைக் கைமறைத்தலால் பார்வையில்லை என்பதாம்.

## 73

செம்மா தவமும் மடவார்தங் கற்புஞ் செழிக்கமுகின்
மும்மாரி மாதந் தவறாது பெய்ய முகவைநகர்ச்
சிம்மாச னுதி பதிராச ராசன் றிகிரியன்னீர்
அம்மானை தேர்ந்தனஞ் சிந்துந் தெரிய வவாவுதுமே.

செம் மா தவம் - சிறந்த பெரிய முனிவர் இயற்றும் தவம்; மடவார் தம் கற்பு - பெண்களின் கற்புநிலை; முகில் - மேகம்; மும்மாரி - மூன்று மழை; முகவை - இராமநாதபுரம். 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும் காவலன் காவல் இன்றெனின் இன்றால்' (மணி 22:208-209) என்பர். சிம்மாசனாதிபதி - அரியணைக்குரிய தலைவன்; அம்மானை தேர்ந் தனம் - அம்மானைப் பாடலைத் தெளிய அறிந்தோம்; சிந்தும் தெரிய - சிந்துவகைப் பாடலையும் அறிய; அவாவுதும் - விருப்புகின்றோம். அம் ஆனை தேர்ந்தனம் - அழகிய ஆனை என்றது முலையை; சிந்து - கடல்; கடலுக்கு ஒப்பாம் கண்.

## 74

சிறுபதங் கம்பைகை தான்றீ யெனவென்று சேமத்தலை
யுறுபதம் பூண்கின்ற சீராச ராச னுயர்கிரியீர்
அறுபதங் கையுடை யாரரைப் பத்தை யவிழ்த்தளித்தாற்
பெறுபவ னஞ்சுகை யுற்றிட லன்றியென் பெற்றவனே.

பதங்கம் - விட்டில்; சிறுபதங்கம் பகை - சிறிய விட்டில் கூட்டம் போன்ற பகைவர்; விட்டிலாகிய பகைக்குத் தீயாக விளங்கியவன் இராச ராசன் என்பதாம். தீயில் விட்டில் விழுந்து மாய்தல் போல இராசராச னாகிய தீயை எதிர்த்துவந்து பகைவராகிய விட்டிற்குலம் அழிந்தது என்க. சேமம் - நன்மை; தலையுறுபதம் - தலைமைப் பதவி; அறுபது அம் கையுடையார் - அறுபது எண்ணிக்கையான பெரும் பொருளைக் கையில் கொண்டார்; அரைப்பத்தை - பத்தில் பாதி, ஐந்து; அஞ்சு கையுற்றிடல் - அந்த ஐந்தைக் கையால் ஏற்றல்; ஐந்து - அஞ்சு; என் பெற்றவனே - வேறு என்ன பெற்றவனாவான். அறுபதம் - வண்டு, கண்; கையுடையார் - கண்ணைக் கையால் மறைத்தவர். அரைபத்தை - அரை என்பதை, 'இ' என்று எழுதுதல் தமிழ்க் கணக்கு; அரை என்னும்- 'இ' என்னும் எழுத்துடன் சேர்ந்த பத்தை; இபத்தை. இபம் - யானை; யானையாகிய முலையை அவிழ்த்து விடுத்தார் என்றபடி; அஞ்சுகை யுற்றிடல் - பயப்படல்.

## 75

வான்க ணளவு மிசையுள்ள சேதுமன் வண்டமிழாந்
தேன்க ணவாவினன் சீராச ராசன் றிகிரியன்னீர்
மீன்க ணளவு முதவார் புதைத்திடின் மிக்கதனம்
ஈன்கணிவ் வாறே பிறராற் கொளப்படு மென்பர்களே.

வான்கணளவும் - வானுலக எல்லைவரையிலும்; இசை - புகழ்; வண்டமிழ் - வளப்பம் பொருந்திய தமிழ்; தமிழாம் தேன் எனத் தமிழைத் தேனாக உருவகிக்கிறார் கவிஞர். அவாவினன் - விருப்புடையன் மீன் கண் அளவு- மிகச் சிறியதான அளவைக் குறித்தது மிக்க தனம் - பெருஞ் செல்வம்; ஈன்கண் - இந்த உலகத்தில்; சிறிதளவு கூடத் தனத்தைக் கொடாது புதைத்திடின் அச் செல்வம் பிறராற் கொள்ளப்படும். 'ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்' என்பர். மீன்கண் அளவும் உதவார் - மீன்போன்ற கண்ணால் பார்த்தலைக் கூடச் செய்யார்; மிக்க தனம் - பெருத்த முலை. பிறரால் கொளப்படும் - மற்றவர்களால் கைப்பற்றப் படும்.

## 76

முத்துறு தெண்கடற் புல்லாணி மேய முதல்வனருள்
வித்துறு செய்யன்ன சீராச ராசமன் வீரையன்னீர்
நத்துறு வீரென்று நத்திவந் தேனய நத்தையொளித்
தொத்ததென் றெண்ணும் படிவெறுஞ் செப்பே யுதவினிரே.

தெண்கடல் - தெளிந்த கடல்; புல்லாணி - திருப்புல்லாணி என்னும் திவ்வியதேசம்; புல்லாணி மேய முதல்வன் - திருமால், இராமன். அருள் வித்து உறு செய் -இராமனின் திருவருளாகிய விதைபொருந்துகிற வயல்; வீரை - சேது நாட்டுள்ள ஓர் ஊர்; நத்துறுவீர் என்று - நத்து என்னும் அணியை உடையவர் என்று; நத்தி - விரும்பி; நயநத்து - அழகிய நத்து அணி; ஒளித்து - மறைத்து; வெறுஞ்செப்பே உதவினீர் - அணிகலம் இல்லாத சிமிழைத் தந்தீர்; வெறும் வார்த்தை மட்டும் கூறினீர்; அன்பில்லை என்பது குறிப்பு; நத்துறுவீர் என்று - விரும்புவீர் என்று கருதி. நத்தி - நாடி; நயநத்தை ஒளித்து - கண்ணை மறைத்து; செப்பு- முலை. ஒத்ததென்று எண்ணும்படி - கண்ணோடு ஒத்தது என்று கூறு மாறு. ஒத்தது - இணைமுலை; வெறுஞ்செப்பு - முலையை மட்டும்; இணைந்த இரண்டில் ஒன்றை ஒளித்து ஒன்றை உதவுதல் பயனில்லை என்றபடி.

## 77

நாதத்துக் கேற்குங் குயின்மொழி யார்தந் நலத்தகற்பின்
மாதத்துக் கேமும் மழைதவருத வளமுகவைப்
போதத்துக் கேற்றமன் சீராச ராசன் பொருப்பனையீர்
கீதத்துக் கேற்காது தாளத்திற் கேற்குங் கிளர்கஞ்சமே.

நாதம் - இசை; ஏற்கும் - ஒக்கும்; குயின்மொழியார் - குயிலின் குரல்போன்ற இனிய பேச்சினையுடையார்; நலத்த கற்பு - நன்மை விளைவிக்கும் கற்பு; மாதர் கற்பினால் மாதந்தோறும் மூன்று மழை தவறாது பெய்யும் பெருமை படைத்தது முகவைப்பதி. முகவைப் போதத்துக்கு - முகவையாகிய மலருக்கு; ஏற்றமன் - தகுந்த மன்னன்; பொருப்பு - மலை; கஞ்சம் - வெண்கலம்; தாமரைக்கை. தாமரைக்கை சங்கீதத்திற் கேற்காது தாளத்திற்கு ஏற்கும். கீதம் - வண்டு, கண்; தாளம் - இங்குத் தனம். கை கண்ணுக்கு ஏற்காது, தாளத்திற்கு ஏற்கும் என்றபடி.

78

பரித்தாய் வருபடைச் சீராச ராசன் பரம்பையன்னாய்
விரித்தாய் சிலப்பதி காரத் தினைமணி மேகலையைத்
தெரித்தா யினியெமைச் சிந்தாமணிக் கண்ணுந் தேற்றுவித்தால்
உரித்தாநற் கல்விக் கிடையே தலையெழுத் துற்றதுவே.

பரித்தாய் வருபடை - குதிரை தாவி வருகின்ற சேனை; பரம்பை - பரமக்குடி என்னும் ஊர்; சிலப்பதிகாரத்தினை விரித்தாய் - சிலப்பதி காரத்தை விரிவாக விளக்கினாய்; மணிமேகலையைத் தெரித்தாய் - மணி மேகலைக் காவியத்தை நன்கு தெரியும் வண்ணம் உரைத்தாய்; சிந்தா மணிக்கண்ணும் தேற்றுவித்தால் - சீவக சிந்தாமணிக் காவியத்தையும் தெளியும்படி சொன்னால்; உரிய நல்ல கல்விக்கிடையே தலைமையான எழுத்துக்களாகிய இக்காவியங்கள் வந்து பொருந்தியது. சிலம்பு அதி காரம் - மலைபோன்ற முலையின் ஆட்சி; மணிமேகலை - மணிமேகலை அணிந்த இடைப்பகுதி; அதாவது அல்குல்; இனி எமை - இனிமேல் எம்மை. சிந்து ஆம் அணிக் கண் - கடலாகின்ற அழகு பொருந்திய கண்; சிந்து - கடல்; கல்விக்கு இடையே தலையெழுத்து உற்றது - கலவி தலையெழுத்து 'அ'; கல்வி என்னும் சொல்லிடையே 'அ' சேர்ந்தால் கலவி என்றாகும்; உரித்தாம் - உரியதாகும், கிட்டும்.

79

கொடையே படைத்த தமிழ்மாலை யோடு குலாவுமுல்லைத்
தொடையே கமழ்புயன் சீராச ராசன் சுழியலன்னீர்
இடையே பிடியுமில் லாமனல் வேலு மிலாமலென்னோ
புடையே யகன்றகொம் பீந்தீர் மதனைவெல் பூசலுக்கே.

கொடையே படைத்த தமிழ்மாலை - கொடுத்தலை அடைகின்ற தமிழ்ப்பாமாலை ; குலாவும் - தேன் பொருந்திய ; கமழ்புயன் - மணக்கும் தோள்களையுடையவன் ; சுழியல் - திருச்சுழியல் என்னும் ஊர் ; இது ஒரு சிவதலம். இடையே பிடியும் இலாமல் - இடையில் பிடிக்கின்ற கைப்பிடியும் இல்லாமல் ; நல்வேல் - சிறந்த வேலாயுதம் ; புடை - பக்கம் ; கொம்பு - கம்பு, தண்டு ; பிடியுமில்லாமல் வேலு மில்லாமல் வெறுங் கம்பைமட்டும் கொடுத்தால் எங்ஙனம் வெல்லமுடியும் என்பதாம். இடையே பிடியும் இலாமல் - இடையானது பிடியளவுகூட இல்லாமல் : நல் வேலும் இலாமல் - நல் வேல் போன்ற கண்ணும் இல்லாமல் ; புடையே அகன்ற, பக்கங்கள் பருத்த ; கொம்பு - யானைக் கொம்பு, தனத்துக்குவமை. மதன் - மன்மதன்; மதனை வெல் பூசல் - மதனை வெல்கின்ற போர், கலவிப்போர்.

## 80

சாமந்தப் பாது பெரும்பாரி சூழ்தலிற் றண்முகவைக்
கேமந்தப் பாதவன் சீராச ராசமன் னேர்வரைவாய்க்
காமந்தப் பாதகண் டேருர் சிலம்பையெங் கைக்களித்தார்
தாமந்தப் பாத சரங்கையிற் பூட்டினர் தக்கதன்றே.

சாமந் தப்பாது - ஒவ்வொரு சாமப்பொழுதும் தவறாது ; பெரும் பாரி சூழ்தல் - மிகுதியான கொட்டு முழக்குடன் இராக்காவலாளர் சுற்றி வருதல். பாரி - இராக்காவல் ; இராக்காவலாளர் பாடல். 'பாரிய தடங்கிய தடங்கியது பாடல்' என்கிருர் கம்பர். தண் - குளிர்ச்சி ; ஏமம் - காவல்; ஏமம் தப்பாதவன் - காவலில் சிறிதும் பிறழாதவன்; ஏர் - அழகு; காமம் தப்பாத கண்டு - விருப்பம் குறையாமையைப் பார்த்து; சிலம்பைக் கைக்களித்தார்; பாதசரம் கையிற்பூட்டினர்; சிலம்பு, பாதசரம் இரண்டும் காலணிகள்; இவற்றைக் கைக்கு அணிந்தது முறையன்று என்பதாம். தக்கது அன்று - முறையன்று. சிலம்பு - மலை, முலை; எம் கைக்கு அளித்தார்: எம்முடைய கையில் கொடுத்தார். தாமம் தப்பாத சரம் கையிற் பூட்டினர் - ஒளி குறையாத அம்பாம் கண்ணைக் கையால் மறைத்தனர்.

## 81

மைக்கூற்ற மாரப் பொருஞ்சென்னி கண்ணுகி வண்டமிழ்க்கு
மீக்கூற்ற மாங்கவிக் கூத்தன் மலரியன் வேளிரரும்
பைக்கூற்ற னேர்செம்பிச் சீராச ராசன் பருவரைவாய்க்
கைக்கூற்ற முள்ளாய் தளர்விடைக் கேதந்து காத்தருளே.

மைக் கூற்றம் - கரிய இயமன் ; ஆர - நிரம்ப உண்ண ; பொரும் - போர் செய்யும் ; சென்னி - சோழன். சோழனுக்குத் துணை வலியாக உதவுபவர் சேதுபதிகளாதலின் கண் என்று சிறப்பித்துள்ளார். மீக்கூற்றம் - பெரும்புகழ்; கவிக்கூத்தன் - கவிபாடுதலில் ஒட்டக்கூத்தனை ஒப்பான் ; மலரியன் - மலரி என்னும் ஊருக்கு உரியவன் ; வேளிர் - குறுநில மன்னர் ; கைக்கு ஊற்றம் உள்ளாய் - கையில் வளம் உடையாய் ; தளர்விடை - தளர்ச்சியுறும் காலம் ; கைக் கூற்றம் உள்ளாய் - கையின்கண் கூற்றமாகிய கண்ணையுடையாய் ; தளர்வு இடை - முலையின் பாரத்தால் துவளுகின்ற இடை. கைக்கு ஊற்றம் உள்ளாய் - கைக்கு ஊன்று கோல் உள்ளாய் ; கையைக் கண்ணில் வைப்பதைவிட இடையில் வைப்பதுமேல் என்றும் உரைக்கலாம்.

## 82

பூணுங் கொடைப்பாற் கரசே துபதி புரிதவத்தான்
மாணுந் தமிழைப் பரிபா லனஞ்செய்ய வந்திசையே
பேணும் புயாசலன் சீராச ராசன் பிறங்கலன்னீர்
நாணுங்கைக் கொண்டுமென் னேமத னெய்யு நடுவினின்றே.

கொடை பூணும் - கொடையைக் கைக்கொண்டிருக்கும் ; மாணுந் தமிழ் - மாட்சிமை பெற்ற தமிழ் ; பரிபாலனஞ் செய்தல் - காத்தல் ; இசை - புகழ் ; புயாசலன் - புய அசலன் - தோள்களாகிய மலையை உடையவன் ; பிறங்கல் - மலை ; நாண் - நாணம், வில்லின் நாண் ; மதன் நாண் - வண்டு ; வண்டு என்றது கண்ணை. மதன் - மதன் பீடமாகிய முலை ; மதன் - மன்மதன் ; நடு - இடை, வில்லின் நடு. இடையும் ஒன்று இல்லாதது ; மதன் இடையில் நின்றும் எய்வான் என்றும் கூறலாம். 'நற்காஞ்சிக்கும் வடமலைக்கும் நடுவில் வெளியே வேள்தனைவிட்டு' என்றார் பிறரும்.

## 83

தொடுவேலை நாப்ப ணுளசேது காக்கு முத்துங்கசிங்கம்
அடுவேற் படைக்குமன் சீராச ராச னணிவரையீர்
நடுவே முதலை யெறிந்திரண் டாக்கியென் னன்மனமா
படுவே தனைதவிர்த் தீர்கையிற் சக்கரம் பார்த்திலனே.

தொடுவேலை - தோண்டப்பட்ட கடல்; சகரரின் குமாரர்களால் தோண்டப்பட்டது என்பது புராண வரலாறு. நாப்பண் - நடு ; உத்துங்கம் - உயர்ச்சி, எழுச்சி ; அடுவேல் - கொல்லும் தன்மை படைத்த வேல்;

முதலை - நீர்வாழ்முதலை, தனம் ; எறிந்து இரண்டாக்கி - ஆயுதம் வீசி இரு கூறுபடுத்தி ; இரண்டாக வெளிப்படுத்து. மனமா - மனமாகிய குதிரை ; வேதனை தவிர்த்தீர் - துன்பத்தைப் போக்கினீர் ; கையில் சக்கரம் - கையில் கொண்ட சக்க ராயுதம். கையில் சக்கு அரம் - கைக்குள் மறைந்த கணணாகிய வேலை, அரம் - வேல்.

## 84

காரானை கூக்குரல் பிற்படச் சென்றது காத்ததுழாய்த்
தாரானைப் போற்றிய சீராச ராசன் சயிலமன்னீர்
சீரான பிள்ளைப் பருவத் தொழுக்கமுந் தீர்ந்துமென்னே
வாரானை காட்டிநஞ் சப்பாணி யுற்றனிர் மங்கையரே.

காரானை - கரிய ஆனை; கசேந்திரன். கூக்குரல் - அபயக்குரல்; துழாய்த் தாரான் - திருமால்; சயிலம் - மலை; சீரான - சிறப்பான; பிள்ளைப்பருவத்து ஒழுக்கம் - சிறு பிள்ளைப்பிராயத்தில் செய்யும் செயல்கள்; அதாவது செங்கீரை, சப்பாணி, வாரானை போன்றவை. வாரானை காட்டி - வருதலை வெளிப்படுத்தி; சப்பாணி - கை சேர்த்துக் கொட்டும் செயல்; வாரானை, சப்பாணி இரண்டும் பிள்ளைப்பருவத்து ஒழுக்கங்கள். வார் ஆனை காட்டி - வாரால் கட்டப்பெற்ற ஆனையாகிய முலையை வெளிப்படுத்தி; நஞ்சு அப் பாணி யுற்றனிர் - நஞ்சாகிய கண்ணை அக் கைகளில் கொண்டுள்ளீர்; கண்களை மறைத்தீர் என்பதாம்.

## 85

கம்மிடை சோலை புடைசூழ் முகவைக் கவினகரான்
தெம்மிடை போர்வென்ற சீராச ராசன் றிகிரியிலுந்
தம்மிடை யேநவை வைத்தது காட்டிய தன்மைகண்டோம்
உம்மிடை யேகுறை யாங்காரி யங்கைக் குவந்துமென்னே.

கம் மிடை சோலை - மேகங்கள் நெருங்கித் தவழும் மரச்சோலை; கவின் நகரான் - அழகிய நகரையுடையவன். தெம் மிடை போர் - பகைவர் நெருங்கிவந்து பொரும் போர்; இடையே - இடையில்; நவை வைத்துக் காட்டிய தன்மை - குற்றத்தைத் தாங்கியுள்ள தன்மை; இடைமட்டும் இல்லாமையாகிய குறை; குறையாங்காரியம் - குறைவுபட்டிருக்கும் செயல்; கைக்கு வந்தும் - கையிடத்து வந்தும். 'தம்' இடையே 'ந' வைத்தது - தநம், முலை; காட்டிய தன்மை - வெளிப்படுத்திய நிலை; காரி அங்கைக்கு உவந்தும் என்னே - விடத்தன்மையான கண்ணை உள்ளங்கையால் மறைத்தது எதற்காக.

## 86

பண்டன மூர்ந்தவன் வேத முறைப்படி பாவியரைத்
தண்டனஞ் செய்விக்குஞ் சீராச ராசன் சைலத்திலே
கொண்டன் மூன குழன்மயி லேயுனைக் கூர்ந்துகண்டார்
கண்டனங் கண்டனங் கண்டில மென்று கலங்குவரே.

பண்டு - முன்பு, பழமை; அனமூர்ந்தவன் - அன்னம் ஏறிச் செல்லும் பிரமன்; வேதமுறைப்படி - வேதம் விதித்த விதி முறையில்; பாவியர் - பாவத் தொழில் செயும் கொடியோர். தண்டனம் - தண்டனை; கொண்டல் - மேகம்; குழல் - கூந்தல்; மயிலே - மயில்போன்ற சாயலை யுடைய பெண்ணே. கூர்ந்து கண்டார் - கூர்ந்து நேர்க்கியவர். கண் தனம் கண்டனம் - கண்ணோடுகூடிய முலையைப் பார்த்தோம்; கண் தனம் கண்டிலம் - கண்ணாகிய செல்வத்தைப் பார்த்தோமில்லை. காட்சியும் காட்சியின்மையும் உடைமையால் பார்த்தனம், பார்த்திலம் என்று கலங்குவர் என்பதாம்.

## 87

வேலையி டர்ப்பவ தாபம் பயந்துதன் மேவினர்க்குச்
சோலை யெனக்குளிர் மாராச ராசேச் சுரிபதுமக்
காலை யுளத்தணி சீராச ராசன் கனகிரியிர்
கோலை யொளிப்பர்கொல் பாம்பு படம்விரி கொள்கைகண்டே.

வேலை இடர்ப்பவ தாபம் பயந்து - கடல் போல் மிகுந்த துன்பம் தரும் பிறவித் துயருக்கு அஞ்சி; மேயினர்க்கு - அடைந்தவர்களுக்கு; சோலையெனக் குளிர் - நிழல் நிறைந்த சோலைபோலக் குளிர்ந்த கருணைபுரியும். மாராசராசேச்சுரி - சேதுபதிகளின் குலதெய்வம்; பதுமக்கால் - தாமரை மலர் போன்ற திருவடி. கோல் - கம்பு; பாம்பு படம் விரித்து வருதலைக் கண்டு அதனை அடித்து விரட்ட உதவும் கம்பை மறைத்து வைப்பார்களோ. கோல் - அம்பு, கண்; பாம்பு படம் விரிகொள்கை - பாம்பு படம் விரித்தாற் போலத் தோற்றும் அல்குல் வெளிப்படு நிலை.

## 88

எம்மாண் புளவேந்த ருந்தொழுஞ் சேதுமன் னேறனைய
செம்மாண் புளசெம்மல் சீராச ராசன் சிலம்பனையாய்
அம்மா சுகந்தரு வாயென் றிரந்தேற் கதுமறைத்துச்
சும்மா விருபெருங் கோட்டானை யிந்தீர் சுகமில்லையே.

மாண்பு - பெருமை ; சேதுவினைக் காக்கும் தனிப்பேறு பெற்ற வராதலின் எவ்வளவு பெருமைபடைத்த மன்னரும் தொழும் தகைமை யுடையராயினர் ; ஏறு - சிங்க ஏறு ; செம்மாண்பு - சிறந்த ஆண்மைப் பண்பு, சிறந்த நற்குணங்கள் ; சிலம்பு - மலை ; அம் மா சுகம் தருவாய் - அந்த அழகிய கிளியைத் தருவாய் ; சும்மா - வீணாக ; கோட்டான் - பேராந்தை, கூகை ; கிளியைத்தர வேண்டிய எனக்குக் கோட்டானைத் தந்தீராதல் பயனில்லை என்பதாம். அம் ஆசுகம் - அழகிய அம்பு போன்ற கண் : கோட்டானை - கொம்புள்ள யானை ; அதாவது யானைத் தந்தத்திற்கு ஒப்பாம் முலைகளை என்றவாறு ; சுகம் - இன்பம்.

## 89

நண்ணும் பவந்துடைத் தந்தமில் பேரின்ப நாடடைய
மண்ணும் விசும்புந் தொழும்ராம சேதுமன் வண்டமிழோர்
எண்ணுஞ் சயதுங்கன் சீராச ராச னிருங்கிரியீர்
கண்ணு மொழியு மிலாமனல் வேழமென் கைப்பட்டதே.

பவம் துடைத்து - பிறப்பைப் போக்கி ; அந்தம் இல் பேரின்ப நாடு - முடிவில்லாப் பேரின்பம் தரும் சுவர்க்க நாடு ; மண்ணும் விசும்பும் தொழும் - மண்ணுலகத்தாரும் வானோரும் வணங்கும் ; ராமசேதுமன் - இராமனால் கட்டிய சேதுவைக் காக்கும் அரசன் ; சயதுங்கன் - வெற்றியால் உயர்ந்தோன் ; கண்ணும் மொழியும் இலாமல் நல்வேழம் - கணுக்கள் இல்லாத கரும்பு ; கண்ணும் ஒழியும் - கண்ணோ மறைந்திருக்கும் ; இல்லாமல் - அது அல்லாமல் ; நல்வேழம் - நல்யானை ; இங்கே யானை என்றது முலையை.

## 90

இளவன் கமட முதுகிற் பணில மிவர்ந்தமரக்
குளவன் றவளை யதிலூர்ந் துலாம்வளங் கூர்முகவை
யுளவன் பிற் காக்கின்ற கோராச ராச னுயர்கிரியீர்
வளவன் முனைக்கஞ்சி மீனொளித் தாற்கூடல் மாண்பிற்றன்றே.

கமடம் - ஆமை ; இள வன் கமடம் - இளமையான வலிய ஆமை ; பணிலம் - சங்கு ; இவர்ந்து அமர - ஊர்ந்து தங்க ; குளவன் - நண்டு ; தவளையதில் ஊர்ந்து - தவளையின் மேல் தவழ்ந்து; ஆமை முதுகில் சங்கும் தவளையும் நண்டும் ஏறித் திரியும் படியான நீர்வளம். உலாம் -

உலாவும், திரியும். வளவன் முனை - சோழனது போர்க்களம் ; மீன் ஒளித்தால் - மீனக் கொடியுடைய பாண்டியன் ஓடி மறைந்தால் ; கூடல் மாணபிற்றன்று - மதுரை மாநகர் பெருமையுடையதாகாது. வள வல் முனை - வளப்பமான சூதுகருவி போன்ற முலை ; வளமான வலிய மலை முகடு என்றும் உரைக்கலாம். மலைச் சிகரமும் முலைக்கு ஒப்பாகக் கூறப்படும் பொருளேயாகும். மீன் ஒளித்தால் - மீன்போன்ற கண்ணை மறைத்தால் ; கூடல்மாண்பிற்று அன்று - கலவி சிறவாது.

## 91

திவலை யபசுர மில்லா விசையைச் செவிமடுத்துத்
தவலயங் காண்பவன் சீராச ராசன் சயிலமன்னீர்
குவலய முற்று மடக்கிவைத் தாளிறை கொண்டுநின்று
கவலையற் றீர்வெங் குயவரை யெம்பாற் கடிதளித்தே.

திவலை - துளி, சிறிது; அபசுரம் - மாறான ஓசை; செவிமடுத்து - கேட்டு, தவலயம் - மிகுதியும் உள்ள ஈர்ப்புத்தன்மை; சுருதிலயம். லயம் காண்டல் - சுருதியொப்புமை அறிதல். குவலயம் - பூமி, குவளை; இறை - அரசன், கையிறை; பூமி முழுவதையும் அடக்கிவைத்து ஆளும் அரசரைக் கொண்டமையால் கவலையற்றிருந்தார். வெங்குயவரை - கொடிய மறைவானவரை; குயவரை - குயச்சாதியரை என்றும் ஆம்; கடிதளித்து - விரைந்து தந்து. குவலயம் முற்றும் அடக்கிவைத்து ஆள் இறை கொண்டு - குவளை மலர் போன்ற கண்ணை முழுவதும் மறைத்து வைக்கின்ற கையுடையராய். வெங்குயவரை - விருப்பந்தரும் முலையாகிய மலை. அரசரைக் கையில் வைத்து எமக்குக் குயவரைக் கொடுத்தீர்கள்; அன்பில்லை என்றபடி.

## 92

காருண்டு பூவிற் பொழிந்தும் வற்றுத கடல்வளத்தான்
பாருண்ட சீர்த்தியன் சீராச ராசன் பருப்பதத்தாய்
ஊருண்டு வம்பில்லை மாவுண் டிடையீடிங் கொன்றுமில்லை
தேருண்டு பண்டியுண் டம்மா சுகமட்டுந் தேர்ந்திலமே.

கார் - மேகம்; பூவிற் பொழிந்தும் - பூமியில் பெய்தும்; பாருண்ட சீர்த்தியன் - உலகம் முழுவதும தங்கிய பெரும்புகழுடையான். பருப்பதம் - மலை; ஊர் உண்டு - ஊர் உரிமையாயுள்ளது; வம்பு இல்லை - வம்புவழக்கு எதுவும் இல்லை; மா - ஆடு மாடு குதிரை முதலிய விலங்குகள்; இடையீடு - தடை; ஒன்றுமில்லை - சிறிதும் இல்லை;

பண்டி - வண்டி; சுகம் - இன்பம்; தேர்ந்திலம் - தெளிந்திலேம். ஊரு உண்டு - தொடை உள்ளது; அம்பு இல்லை - அம்பு போன்ற கண் இல்லை; மா உண்டு - யானைக்கு ஒப்பாம் முலை வெளிப்பட்டுள்ளது. இடையீடு இங்கு ஒன்றும் இல்லை - இடையா வலி இங்கு எதுவும் இல்லை; தேர் உண்டு - தேருக்கு ஒப்பாம் அல்குல் உண்டு; பண்டி - வயிறு. அம் ஆசுகம் மட்டும் தேர்ந்திலம் — அழகிய அம்பு போன்ற கண்ணைமட்டும் தெளிய அறிந்திலேம்.

## 93

முருகலர் முல்லையன் சீராச ராசன் முதுகிரிவாய்ப்
பெருகலின் வேழவே ளாண்மைய ரென்றுமைப் பேணியடுத்
தொருகல விக்கு ரசம்வேண்டி னேன்மய லூங்களித்துப்
பருகலி லாமலின னஞ்சக்கை காட்டினிர் பண்புநன்றே.

முருகு அலர் - மணம் பரவுகின்ற; முதுகிரி - பழமலை; பெருகலின் வேழவேளாண்மையர் - அதிகமான கரும்பு விளைவிப்போர்; பேணி அடுத்தேன் - விரும்பிச் சேர்ந்தேன்; ஒரு கல இக்கு ரசம் வேண்டினேன் - ஒரு கல அளவான கருப்பஞ் சாற்றை விரும்பிக் கேட்டேன்; மயல் - மயக்கம்; பருகலிலாமல் - குடிப்பதற்குப் பயன்படாமல்; சக்கை காட்டினர் - கரும்புச் சச்கையைத் தந்தீர்; பண்பு நன்று - பண்புடைமை நன்றாயிருந்தது; நல்ல பண்பன்று என்பதாம். வேழ வேளாண்மையர் - கரும்புவில்லுடைய மன்மதனால் ஆளப்படும் தன்மையர்; ஒரு கலவிக்கு - ஒப்பற்ற சேர்க்கைக்கு; இன் நஞ்சு அக் கை காட்டினீர் - இனிய நஞ்சத் தன்மையுடைய கண்ணை அந்தக் கைகளால் காட்டினீர்; அதாவது கையால் கண்ணை மறைத்தீர் என்பதாம். வேளின் ஆண்மையை வேழத்தால் (யானைக் கொப்பாம் தனத்தால்) காட்டுபவர் என்றும்.

## 94

மகரத்தை வேங்கையை வில்லைவெல் மாகவி மன்னிமயச்
சிகரத்தில் வைத்தவன் சீராச ராசமன் றேவையிலே
நகரத்தை முன்னம் படைத்த கிலம்படை நங்கைநின் றன்
பகரத்தை யெய்திய கைவேலை யானின்னம் பார்த்திலனே.

மகரம் - மீன், பாண்டியர் கொடி; வேங்கை - புலி, சோழர் கொடி; வில் - சேரர்கொடி; மூவேந்தர் கொடிகளையும் வெல்லும் [illegible] கொடி சேதுபதியின் மாகவிக் கொடி என்க. கவிக்கொடி - அனுமக் கொடி; மன் இமயச் சிகரம் - நிலையாகவுள்ள இமய மலை உச்சி;

தேவை - இராமேச்சுரம் ; நகரம் - ஊர் ; அகிலம் - உலகம் ; ஊரை முன்பு படைத்துப் பின் உலகத்தையும் படைத்தாள் என்பதாம். நகரத்தை முன்னம் படைத்த கிலம் - 'ந' என்னும் எழுத்தை முன்னே கொண்ட கிலம், நகிலம்; அதாவது முலை. பகரத்தை எய்திய கைவேல் - பகரம் போன்ற வடிவுடைய வேல் ; நின்கைத்திறத்தை - நின் கைத்தொழில் வன்மையை; பகரம் - அழகு என்றும் ஆம்; பகரத்தை எய்திய - அழகு பெற்ற; வேல் - வேலுக்கு ஒப்பாம் கண்; கைவேலை - கையால் மறைக்கப்பட்ட கண்ணை.

## 95

பூதானஞ் செய்து புகழ்பெறு பாற்கர பூபன்செய்த
மாதான தன்மத் துதித்தவன் சேது மகுடபதி
தீத்தான் சேராச் சீராச ராசன் சிலம்பணியீர்
கோதானஞ் செய்யீருந் தானஞ்சூ தாயின கோதையரே.

பூமிதானம் - பூமியை ஒருவருக்கு உரிமையாகக் கொடுத்தல்; பூபன்-மன்னன்; தானம் - கொடை; தன்மம் - தருமம், அறச்செயல்; மகுடபதி-முடியரசன்; சிலம்பு - மலை; கோதானம் செய்யீர் - பசுவைத் தானமாகக் கொடீர்; உம் தானம் சூதாயின - கோதானம் செய்யாமையால் நீர் செய்யும் தானச்செயல் வஞ்சகமாயுள்ளது. கோ - கண்; கோதானம் செய்யீர் - கண்ணைக்காட்டிலீர்; உம் தானம் சூது ஆயின - உம்முடைய மார்பில் சூதுகாய் போன்ற முலைகள்வெளிப்பட்டன.

## 96

செய்யாள் வளர்செம்பிச் சீராச ராசன் சிலம்பினிலே
மெய்யா மலைவெற் றிடைமேலுங் காட்டலும் வெண்குருகார்
கையாற் குவலைய முற்று மறைத்தலுங் காணவல்லார்
ஐயா விவரை முழுதுந் தெரிந்த வணங்கென்பரே.

செய்யாள் - செந்நிறம் வாய்ந்த திருமகள்; மெய்யா - உண்மையாக; மலை வெற்றிடைமேலும் காட்டலும் - மலையை வெளியான இடத்தில் தோற்றுவித்தலும்; வெண் குருகு - வெண்ணிற வளையல், சங்கு வளையல்; ஆர் - நிறைந்த; கையால் குவலையம் முற்றும் மறைத்தலும் - கையினாலே இப் பூமி முழுவதையும் மறைப்பதும்; அணங்கு என்பர் - தெய்வப்பெண் என்று சொல்லுவர். அணங்கு - மலைவாழ் தீண்டிவருத்தும் தெய்வப்பெண். மெய் ஆம் மலை - மார்பிடத்திலே பொருந்திய மலை

போன்ற முலை; வெற்றிடை மேலும் காட்டல் - வெறுவிதான நுண்ணிய இடையின்மேலே வெளிப்படுத்தல்; குவலையம் - குவளைபோன்ற கண்; கையால் குவலையம் முற்றும் மறைத்தல் - கையினால் கண்களை முழுவதும் மறைத்தல்; முழுதும் தெரிந்த - எல்லாம் அறிந்த. முழுதுந் தெரிந்த அணங்கு - நிர்வாணமான பெண்.

97

உம்பரஞ் சாதருள் சீராம மூர்த்தியை யுள்ளன்பொடும்
நம்பர சாட்சியன் சீராச ராசமன் னன்வரைவாய்க்
கொம்பர விந்த முகிழ்த்தா லனைய குவிமுலையார்
அம்பரந் தாமரை யில்லாருள் ளாரென் னதிசயமே.

உம்பர் - வானுலகத் தேவர்; நம்பு அரசாட்சியன் - விரும்பும் அரசாட்சியுடையவன்; நன்வரை - நல்ல மலை; கொம்பு - பூங்கொம்பு; அரவிந்தம் முகிழ்ந்தாலனைய - தாமரைப்பூ அரும்பினாற்போல; முகிழ்த்தல் - அரும்புதல்; தாமரை முகை முலைக்கு உவமை; அம்பரம் - அம்பு அரம்; இரண்டும் கண்ணுக்கு உவமை. தாமரையில்லார் - தாமரை மலர் போன்ற கையிடத்துங் கொண்டுள்ளார்; அம்பரம்தாம் அரை இல்லார் - ஆடை அரையில் இல்லாதவர்; அம்பரம் தாமரையுள்ளார் - மேலிடத்தே, அதாவது மார்பில் தாமரை முகை போன்ற முலையினைக் கொண்டுள்ளார். அம் பரம் தாமரை - அழகிய சிறந்த தாமரை முகை போன்ற முலை என்றும் உரைக்கலாம். தாமரை உள்ளாரும் இல்லாரு மாகத் தோற்ற மளிப்பதால் அதிசயம் என்றார்.

98

சுரும்பு முரல்குழற் சீராச ராசேச் சுரியெனுஞ்சொற்
கரும்பு குலதன மாக்கொண்டு போற்றலிற் காசினியாள்
விரும்பு புயாசலன் சீராச ராசமன் வெற்பனையீர்
அரும்பு தனையளித் திட்டீர்செவ் வாயை யவாவுமெற்கே.

சுரும்பு முரல் குழல் - பூவின் ஏதுவால் வண்டு ஒலிக்கும் கூந்தல்; சுரும்பு - வண்டு; சீராசராசேச்சுரி - சேதுபதிகளின் குலதெய்வம்; சொற்கரும்பு - புகழ்பெற்ற கரும்பு, சொல்ல இனிக்கும் தெய்வம்; குலதனம் - குடும்பச் சொத்து; காசினியாள் - பூமிதேவி; புயாசலன் - தோள்களாகிய மலையையுடையவன். அரும்புதனை அளித்திட்டீர் செவ்வாயை அவாவும் எற்கே - செவ்வாய்க் கோளை விரும்பிய எனக்கு அரிய புதன் கோளைத் தந்தீர். அரும்புதனை அளித்திட்டீர் - தாமரை அரும்புக்கொப்பாம் முலையினைத் தந்தீர்; செவ்வாய் - செவ்வரிக்கு இடமான கண்.

## 99

தூயநற் சேது முதலாய தீர்த்தமுந் தொல்கடவுட்
கோயில்க ளாயிரம் பன்னூறு சத்திரம் கோமடமும்
தாயினுங் காக்கின்ற சீராச ராசன் சயிலமின்னே
பாயலை யீகவிக் கற்குவட் டின்கண் படைகொளவே.

தூய நல் சேது - தூய்மையான புண்ணியப் பதியான சேது. தீர்த்தம் - பாவம் முதலியவற்றைப் போக்கும் புண்ணிய நீர் ; கோமடம்- பசுமடம்; ஆயிரங் கோயில்களையும் பல நூற்றுக்கணக்கான சத்திரங் களையும் கோமடங்களையும் தாயினும் மேலாகப் போற்றிக் காப்பவர் சீராசராசன். பாயல் - படுக்கை. கற்குவடு - கல்லான மேடை ; படைகொள - கண்படைகொள்ள ; தூங்க. தூங்குவதற்குப் படுக்கை ஈக என்பது வெளிப்படை. பாய்அலை - காதினைச் சென்று தாக்கும் படியான கடல்போன்ற கண் ; கற்குவடு - மணிவடம் அணிந்த முலை ; கண்பு அடைகொள - கண்ணிடத்தை சேரும் வண்ணம்.

## 100

அளிநந்து தேனுண் டிதழ்க்கத வங்க ளடைத்தினிதா
நளினந் துயில்வயற் செம்பியர் காவல னல்லறமே
தெளிநம் மரணென்னுஞ் சீராச ராசன் சிலம்பனையீர்
புளினமுண் டாகிய தென்னாறு கால்கள் புதைபடவே.

அளி - வண்டு; நந்து தேன் - பெருகிவரும் தேன்; இதழ்க்கதவங் கள் - தாமரை இதழ்களாகிய கதவுகள்; நளினம் - தாமரை; செம்பியர் - செம்பிநாட்டு வாழ்பவர்; நல்லறமே தெளி; (அதுவே) நம் அரண் என்னும் கோட்பாட்டையுடைய சீராசராசன்; அரண் - காப்பு; புளினம்- ஆற்றிடைத்திட்டு; இது முலைக்கு உவமையாம்; ஆறுகால்கள் புதைபட- ஆற்றின் நீர்வரத்து மணலால் புதையுண்டு தூர்ந்துபோக. ஆறுகால்கள்- ஆறுகால்களையுடைய வண்டு; இங்கே கண்ணைக் குறித்தபடியாம். புதைபட - மறைய.

## 101

எம்மா சனமுந் தொழுந்தன்ம சேது வினைப்புரக்கும்
சிம்மா சனாதிபதி ராச ராசன் றிருமலையீர்
உம்மார் பணையுமத் தானைவிட் டெருங்க ளருணர
அம்மானைக் கைப்பற்றி நின்றீர்க் கிருளே யடைவதுவே.

மாசனம் - பெருந்திரளான மக்கள்; தன்மம் - தருமம்; சிம்மாசனாதிபதி - அரியணைக்குரிய தலைவன்; உம் மார்பு அணையும் - உம்முடைய மார்பைத் தழுவும். அத்தான் - கணவன்; அம்மான் - மாமன்; ஊரா ரெல்லாம் அறியும்படி அத்தானைத் கைவிட்டீர்; அம்மானைக் கைப்பற்றி நின்றீர்; அதனால் இருளாகிய பாவம் சேரும் என்பது வெளிப்படை. மார்பு அணையும் - மார்பில் பொருந்தியுள்ள; மத்தானை - மத்தகத்தோடு கூடிய ஆனை, முலை; விட்டீர் - வெளிப்படுத்தினீர். அம் மானை - அழகி மான்போன்ற கண்ணை. ஊருணர - ஊராரெல்லாம் அறியும் படி; ஊருவாகிய தொடை தெரியும்படி.

## 102

கரும்பணி யாரம் வயற்பான் மிளிருங் கரந்தையினன்
பெரும்பணி யாரப் பரிக்கும் புவிமகிழ் பேணவிகல்
வரும்பணி யாரைவெல் சீராச ராசன் வரையனையீர்
இரும்பணி யாரக் குடமளித் தீர்மா வினையடைத்தே.

அணி ஆரம் - அழகிய முத்து; மிளிரும் - ஒளிவிடும்; கரும்பணியாரம் - கரும்பிலுள்ள அழகிய முத்து; கரும்பும் அழகிய முத்தும் என்றும் ஆம்; கரந்தை - சேதுநாட்டுள்ளதோர் ஊர்; பெரும்பணி - பெரும்பாம்பாகிய ஆதிசேடன்; பரிக்கும் - தாங்கும்; புவி - பூமி; புவி மகிழ் பேண - தன் பூமியிலுள்ளாரின் மகிழ்ச்சியைக் காக்கும்பொருட்டு; இகல்வரும் - பகைகொண்டு எதிர்த்துவரும்; பணியார் - அடங்காத பகைவர்; இரும் பணியாரக்குடம் அளித்தீர் மாவினை அடைத்தே - மாவை நிறைத்துப் பணியாரக்குடத்தைத் தந்தீர். இரும் பணி ஆரக்குடம் - பெரிய ஆபரணங்கள் பொருந்திய முலை; மா - வண்டு, கண். அடைத்து - கையால் மறைத்து.

## 103

நத்தார் வயற்செம்பிச் சீராச ராச னறுமுல்லையார்
வித்தார மார்பன் பரதார சோதரன் வெற்பினுள்ளீர்
முத்தார மான வரையிங் குடைய முதுக்குறைந்தோர்
எத்தாலுந் தேவடி யாள்கரங் கொள்ளு மியல்பிலரே.

நத்து - சங்கு, நத்தை; வித்தாரம் - அகலம், அழகு; பரதாரம் - பிறன் மனைவி; சோதரன் - சகோதரன், உடன்பிறந்தவன்; வெற்பு - மலை; முத்தாரமானவர் - முதலில் பெற்ற மனைவியானவர்; உடைய - வருந்த; முதுக்குறைந்தோர் - அறிவுடையோர்; தேவடியாள் -

பொதுமகள், பரத்தை; அறிவுடையோர் மனைவியை விடுத்துப் பொது மகளிர் கையினைப் பிடியார் என்பது வெளிப்படை. முத்தாரம் ஆன வரை - முத்துமாலை அணிந்த மலை என்றது முலையை; எத்தாலும் - எதனாலும்; தேவடி - இனிய மாவடு, கண். வடி ஆள் கரம் - கண்ணை மறைத்த கை.

## 104

அலைக்கணை யிட்ட பெருமானுக் கன்ப னடையலரைச்
சிலைக்கணை தொட்டுவெல் சீராச ராசன் றினமளிக்கும்
மலைக்கணை யுற்றரி திற்றெளி வுற்ற மடந்தையர்தாம்
தலைக்கணை யில்லாமற் பாய்மாத் திரங்கொடுத்தா ரென்னையே.

அலை -கடல்; அலைக்கு அணை இட்டபெருமான் - கடலில் அணை கட்டிய இராமன்; அடையலர் - தம்மைச் சேராத பகைவர்; சிலைக்கணை தொட்டு - வில்லில் அம்பைத் தொடுத்து. அளிக்கும் - காக்கும்; மலைக்கு அணைவுற்று - மலையிலே பொருந்தி; அரிதின் தெளிவுற்ற - மிக அருமையாகத் தெளிவுபெற்ற; மடந்தையர் - பெண்டிர்; தலைக் கணை இல்லாமல் பாய் மாத்திரம் கொடுத்தார் - படுப்பதற்குப் பாயும் தலையணையும் வேண்டும்; தலையணையைத் தராமல் பாய் மாத்திரம் தந்தால் என்ன பயனாம். தலைக் கணை - முகத்தில் பொருந்திய அம்பு ஆகிய கண்; பாய்மா - எழுச்சியுற்ற யானை. முலை; திரம் - உறுதி.

## 105

மண்காட்சி கொள்ள மதமா வுகைத்து வரும்பவனி
எண்காட்சி செய்யும் பருவத் தெழுவர்க்கு மின்பமயல்
பண்காட்சி மிக்கவன் சீராச ராசன் பருவரையிர்
கண்காட்சி யில்லா மலைவளத் தார்க்குங் களிப்பில்லையே.

மண் காட்சி கொள்ள - உலகத்தார் எல்லாரும் காண; மதமா யானை; பவனி - வீதியுலா; எண்காட்சி செய்யும் - எளிதாகக் காணும் வகையில் வரும். பருவத்து எழுவர் - பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் எழுவகைப் பருவமகளிர். இன்ப மயல் - இன்ப மயக்கம்; மயல் பண் காட்சி மிக்கவன் - மயக்கம் தரும்படியான அழகு படைத்தவன்; கண்காட்சி இல்லா மலைவளம் - பார்வைக்கு எட்டாமல் இருக்கிற மலைவளம்;

ஆர்க்கும் - எவருக்கும்; காட்சி - பார்வை. கண்காட்சி இல்லா - கண் பார்வை இல்லாமல் மறைத்தல்; மலைவளத்தார் - மலைபோன்ற முலை வளமுடையார்; களிப்பு - மகிழ்ச்சி.

## 106

புதலை யிவர்முல்லைப் பூந்தொடைப் பாற்கர பூபனருள்
மதலை யெனுமன் னவன்ராச ராசன் வரையனையீர்
முதலை நடுவே யிழந்தனிர் கட்கடை மூடிநின்றீர்
விதலை யறவே களிப்பதெவ் வாறு விளம்புமினே.

புதலை இவர் முல்லை - புதரிலே பற்றிப் படர்கின்ற முல்லை; மதலை - புதல்வன்; முதலை - தேடிய செல்வத்தை; கட்கடை - கள்ளுக் கடை; விதலை - நடுக்கம்; களிப்பது - மகிழ்ச்சியுறுவது; விளம்புமின் - சொல்லுவீர்; முதல் - தனம், முலை; நடுவே இழந்தனிர் - மார்பினின் நடுவே விடுத்தீர்; கட்கடை - கண்ணின் கதவு; இமை. இமைகளை மூடி நின்றீர் என்றது கண்புதைத்தமையைச் சுட்டியவாறாம்.

## 107

சூரர் தொழுகின்ற சீராச ராசன் றொடரியன்னீர்
சேரர் கொடியையுந் தென்னர் கொடியையுஞ் சென்னிவழி
வீரர் கொடிமறைத் தோங்குதல் காட்டினிர் வெல்கொடியைப்
பார வடமலை வைத்ததுங் காட்டுவல் பார்த்திருமே.

சூரர் - பெருவலிமை பெற்ற வீரர்; தொடரி - சேதுநாட்டுள்ள தோர் ஊர்; சேரர் கொடி - வில், புருவம்; தென்னர்கொடி - பாண்டியர்கொடி மீன், கண்; சென்னிவழி வீரர்கொடி - சோழர்வழிவந்த வீரர்கொடி புலி; சேர பாண்டியர் கொடிகளைச் சோழர்கொடி மறைத்துச் சிறந்தோங்கு தல். வெல்கொடி - சோழர்கொடியாகிய புலிக்கொடி. பாரவடமலை - பெரிய இமயமலை; சோழர் கொடி - புலி, புலிக்கு ஒரு பெயர் புண்டரீகம்; புண்டரீகம் என்பது தாமரையையும் குறிக்கும். புண்டரீகம் போன்ற கை. அப் புண்டரீகத்தை வடமலை வைத்ததும் காட்டுவன் என்றது தான் மலை போன்றவற்றில் கைவைத்தலைக் குறித்தது. யான் உம் முலையில் கைவைத்தலையும் பார்த்திரும் என்றவாறு.

## 108

சதமக னன்னமன் சீராச ராசன் சயிலமின்னே
மதசர மாரி பொழியுமிக் காலம் வருந்தெமக்கே
முதலொரு மாத்திரை யில்லாத மூலையை மூடல்செய்யா
திதமுட னல்கித் திரையொளித் தீர்நும் மியல்புநன்றே.

சதமகன் - இந்திரன்; மதசரமாரி - மன்மதனுடைய அம்பு மழை; மின் - மின் போன்று ஒளிபடைத்தபெண்; மாத்திரை இல்லாத மூலை - யானையின் முகபடாம் அமையாத மூலையாகிய தந்தம்; முலை; முலை களை மறையாது இதமாய்க் கொடுத்தீர்; திரை - அலை, கடல்; அதாவது கண்; திரை ஒளித்தீர் - கண்களை மறைத்தீர்.

## 109

தருக்குடைத் தொன்னா ரலறப் பொருது தமிழ்க்குதவும்
பெருக்குடைக் கைவண்மைச் சீராச ராசன் பிறங்கலன்னீர்
செருக்குடைக் காமன் சரமாரி காக்குந் திறமின்றியே
திருக்குடைக் கையொடு நின்றீர் மலையிற் றிகைக்கவிட்டே.

தருக்கு - செருக்கு; ஒன்னார் - பகைவர்; பிறங்கல் - மலை; சரமாரி - சரமழை; சொரிகின்ற மழை; மழைதடுக்கும் திறமில்லாமல் அழகிய குடையையுடைய கையோடு; கா மன் - கற்பகச்சோலைக்கு அதிபதியான இந்திரன்; காமன் - மன்மதன். திருக்கை உடைக் கை யொடு - கண்ணைப் பொதிந்த கையுடனே; திருக்கு - கண்; மலையின் திகைக்க விட்டே - மலைபோன்ற முலையைப் பிரமிக்கும் வண்ணம் வெளிப்படுத்தி; திகைத்தல் - மயங்குதல், பிரமித்தல்.

## 110

தேனைக் கடுத்த சொல்லார் மதன்வென்றிச் செருமறவர்
தானைக் கடற்குமன் சீராச ராசன் சயிலத்தில்வேள்
சேனைக் கடுத்தவர் நீர்கரிக் கோடு சின்ந்தெதிர
மானைப் பிடித்த கரத்தாற் பிடித்தீர் மதன்களிறே.

கடுத்த - ஒத்த; மதன் - மன்மதன்; செருமறவர் தானைக் கடல் - போர் புரிவதில் வல்ல வீரர் சேனையாகிய கடல்; மன் - தலைவன், அரசன்; வேள் சேனைக்கு அடுத்தவர் - மன்மதனுடைய சேனைக்குத் தகுதிபெற்றவர், பெண்டிர்; கரிக்கோடு -யானைத்தந்தம்; தந்தத்திற்கு

ஒப்பான முலைகள். மானைப் பிடித்த கரத்தால் மதன் களிறு பிடித்தீர். மான் - மான்போன்ற கண்; மானைப் பிடித்த கரம் - கண்ணை மறைத்த கை; மதன்களிறு - மன்மதன் யானையாகிய இருள்; கண்ணை மறைத்தமையால் இங்கே இருளைப் பிடித்துவைத்தவ ராகின்றனர்.

## 111

பொய்க்கு மொழியுடை வஞ்சர் கொளாது புலவரெய்ப்பின்
வைக்கும் பெருஞ்செல்வஞ் சீராச ராசன் மலரியன்னீர்
மெய்க்கு முடைவளை யாரென் றெமக்கு வெளியிட்டநீர்
கைக்கு வளையுடை யேமென்று காட்டியென் காணுதிரே.

எய்ப்பின் வைக்கும் பெருஞ்செல்வம் - தளர்ந்த காலத்து உதவ வைக்கும் சேமநிதி ; புலவர்களின் சேமநிதியாய் விளங்குபவன் சீராச ராசன் ; மலரி - சேது நாட்டுள்ள ஓர் ஊர் ; மெய்க்கும் - உடம்புக்கும், முலைக்கும் ; உடைவளையார் - உடையை அணியார் ; உடை மறைப் பின்றி முலைகளை வெளிப்படுத்தியமை சுட்டியது. கைக்கு வளை உடையேம் - கையிடத்தே வளையல்களை உடையராயினேம் ; கைக் குவளை உடையேம் - கையிடத்தே குவளை போன்ற கண்ணையுடை யோம். இதனால் கண்ணை மறைத்தமை வெளிப்படுத்தவாறாம்.

## 112

இரக்க வரும்புல வோருக் கவர்பிறர்க் கீத்தினிது
புரக்க வளிக்கின்ற சீராச ராசன் பொலங்கிரிவாய்ப்
பரக்க நயவசி யத்தொழில் செய்யும் பண்மொழியார்
சரக்கை விடாமற் றனம்விடுப் பார்கொ றரணியிலே.

ஈத்து இனிது புரக்க - கொடுத்து நன்கு காக்க. பொலங்கிரி - அழகிய மலை ; பரக்க - பெரிதாக, மிகுதியாக ; நயவசியத்தொழில் - இன்பமுடன் ஈர்க்கின்ற செயல் ; வயப்படுத்தும் ஆற்றல் ; பணிமொழி யார்-அடக்கமாகக் கீழ்ப்படிந்து பேசும் பேச்சுடைய பெண்டிர்; பண்ணின் இனிய சொல்லார். நய வசியத் தொழில் - நயமான வாணிகத் தொழில் ; சரக்கை விடாமல் தனம் விடுப்பார்கொல் - பண்டங்களை வெளியிடாமல் செல்வத்தை வெளிப்படுத்துவரோ. சரக் கைவிடாமல் - அம்பு நிகர் கண்களைக் கைவிடாமல் மறைத்தவர் ; தனம் விடுப்பார் - முலைகளை வெளிப்படுத்துவார். தரணி - பூமி.

## 113

முற்றால முண்டருள் சீராம நாதர்தம் மொய்கழலின்
பற்றா லமைந்த திருவுளத தானற்றமிழ்ப் பாவலர்க்கு
நற்றால நல்கிய சீராச ராச னளிர்வரைவாய்க்
குற்றால மெய்தியுஞ் சாரலை யெய்திலன் கோமளமே.

முற்றாலம் - எங்கும் பரந்து எழுந்த நஞ்சு, ஆலகாலம்; மொய்கழல் - கழல் பொருந்திய திருவடி ; பற்று - விருப்பு, அன்பு ; பாவலர் - பாப் புனைவதில் வல்லவர்; நற்றாலம் - நல்ல பூமி ; அழகிய பொ. நற்றட்டு. நளிர் - குளிர்ச்சி ; குற்றாலம் - திருக்குற்றால மலை ; குற்றாலம் சேர்ந்தும் ஆங்குப் பெய்யும் சாரல் மழையைப் பெற்றிலேன் என்பது வெளிப்படை. குற்றாலம் - குறுகிய தாலம் ; தட்டம் போன்ற முலை ; சார் அலை எய்திலேன் - அவள்பால் சேர்ந்துள்ள கடலுக்கு ஒப்பாம் கண்களைப் பெற்றிலேன். அலை - கடல் ; கண். கோமளம் - அழகு வாய்ந்த பெண்.

## 114

செருமலை தெவ்வர் புறங்கண்டு தானஞ் சிதறுகரத்
தொருமலை யூரும் ரவிகுல சேகரன் ஒண்டமிழ்க்குத்
தருமலை யன்ன புயன்ராச ராசன் சயிலமின்னே
திருமலை காட்டிப் பெருமானைக் காட்டாத் திறமென்னையே.

செருமலை தெவ்வர் - போரிட்டு வந்துள்ள பகைவர் ; புறங்கண்டு- தோற்றோடுதல் கண்டு ; தானம் - மதம் ; தானம் சிதறுகரத்து ஒருமலை - மதம் பொழியும் கையையுடைய யானை ; ஊரும் - ஏறி நடத்தும் ; ரவி குலசேகரன் - சூரிய குலத்துக்கு முடிமணியானவன்; தரும் மலை அன்ன புயன் - கொடுக்கும் மலையொத்த திண் தோளான் ; திருமலை - திரு வேங்கடமலை ; திருமலை காட்டிப் பெருமானைக் காட்டாத் திறம் - திருமலையாகிய திருவேங்கடமலையைக் காட்டி அங்கு எழுந்தருளியிருக் கும் பெருமானைக் காட்டாத தன்மை. திருமலை காட்டி - அழகிய மலையொத்த முலைகளை வெளிப்படுத்தி ; பெரு மானைக் காட்டாத் திறம் - பெரியமான் கண்ணுக்கு ஒப்பாம் கண்களைக் காட்டாத தன்மை.

## 115

சொல்வம் புடைச்சிற் றினந்துறந் தோன்பகைத் தூறுகெடக்
கல்லும் படைக்குமன் சீராச ராசன் கனகிரியீர்
செல்வம் படைத்தநற் கொங்கை யுடையர் திருவஞ்சியார்
கொல்லம் படைத்தவர் சேரல ராதன்மெய் கோதையரே.

சொல்வம்பு - வீண்பேச்சு; பகைத்தூறு - பகைவர்களாகிய மரத்தின் அடியை; கல்லும் - தோண்டியெடுக்கும்; மன் - தலைவன்; கனகிரி - மேகம் சூழ்ந்த மலை; படைத்த - வாய்ந்த; கொங்கையுடையார் - கொங்கு நாட்டையுடையவர்; திருவஞ்சியார் - அழகிய வஞ்சி நகரத்தை யுடையவர்; கொல்லம் படைத்தவர் - கொல்லம் என்னும் ஊருக்கு உரியவர்; சேரலர் - சேரநாட்டு மன்னர்; மெய் - உண்மை;கோதையர்- மாலை சூடியமகளிர் ; கொங்கு - சேரமன்னனுக்குரிய நாடு; வஞ்சி, கொல்லம் என்பன சேர மன்னனுக்குரிய ஊர்கள்; செல் வம்பு அடைத்த- நீண்ட கச்சினால் கட்டப்பெற்ற; கொங்கயையுடையார் - முலையுடைய வர்; திருவஞ்சியார் - அழகிய வஞ்சிக் கொடிபோன்ற இடையுடையார்; கொல் அம்பு அடைத்தவர் - தீண்டி வருத்தும் அம்பு போன்ற கண்ணை மறைத்தவர்; சேரலராதல் - சேராத தன்மையுடையராதல்.

## 116

சிலைபோற் றிகழ்நுத னல்லார்தங் கற்புஞ் செயுந்தவமும்
நிலைபோற்றி யாள்கின்ற சீராச ராச னெடுங்கிரியீர்
மலைபோற் றனமிருந் தாலு மிடையே வறுமையுறும்
கலைபோய்க் கொடுங்கோல் கரம்பிடித் தார்க்கிது கட்டுரையே.

சிலை - வில்; மாதர் கற்பும் மாதவர் செய்யும் தவமும் நிலைபெறுதல் ஆட்சியின் மேன்மையை விளக்கும். நிலைபோற்றி ஆள்தல் - நிலைக்கு மாறு அரசாளுகை; மலைபோற்றனம் - மலைபோற் குவிந்த பெரிய செல்வம்; இடையே - வாழ்வினிடையில்; வறுமையுறும் - தரித்திரம் வந்து சேரும்; கலை போய் - நல்லகலைகளினாலாய அறிவு கெட்டு; கொடுங்கோல் கரம் பிடித்தார் - தீய ஆட்சியை மேற்கொண்டார்; கட்டுரை - எடுத்துச்சொல்; மலைபோற்றனம் - மலைபோன்ற முலை; இடையே வறுமையுறும் - இடையானது இல்லை என்னும்படி மெலிந்து காணும்; கலைபோய் - ஆடையானது நெகிழ்ந்து; கொடுங்கோல் கரம் பிடித்தார் - கொடிய அம்புபோன்ற கண்ணைக் கையால் பொத்தியவர்.

## 117

இருவாரி சூழ்ந்த தனுக்கோடி காவல னென்றுமலர்த்
திருவார் முகவைப் பதிராச ராசன் சிலம்பனையாய்
பொருவா ரிராக்கதத் தானையென் பால்விடும் பொற்பறிந்து
செருவா ரிலங்கையி லங்கையுள் ளாயென்று தேறினனே.

இருவாரிசூழ் - இரண்டு பக்கமும் கடல் சுற்றிய; காவலன் - காக்கும் மன்னன்; என்றும் - எந்நாளும்; மலர்த்திரு - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; சிலம்பு - மலை; பொருவார் இராக்கதத்தானை - போர் செய்வாராகிய அரக்கர் படை; செருவார் இலங்கையிலுள்ளாய் - செருச்செய்வார் இருக்கும் இலங்கையில் உள்ளாய்; இலங்கை இலங்கை- அடுக்கு. தேறினன் தெளிந்தேன்; பொரு வார் இராக் கதத்து ஆனை- ஒத்த கச்சினுள் அடங்கியிராத எழுச்சியுடைய ஆனை; முலை; செருவார் இலங்கு ஐயில் அங்கையுள்ளாய் - காதளவு சென்று பொரும் நீண்ட ஒளி படைத்த வேலைப்போன்ற கண்ணை உள்ளங்கையில் கொண்டுள்ளாய்: அதாவது கையால் கண்களை மறைத்துள்ளாய் என்றபடி.

## 118

மனுமானு நீதியன் வேதியர் காவலன் வண்முகவை
யெனுமா நகர்வளர் சீராச ராச னெழில்வரையிற்
றனுமானு நன்னுத லாய்மல ரானெய் சரந்தருநோய்க்
கனுமா னிலாமன் மருத்து மலைதர லாவதென்னே.

மனு - மனுநீதியளித்தவராகிய மனு; மானும் - ஒத்த; வண்முகவை- வளப்பமுடைய முகவை என்னும் இராமநாதபுரநகர்; எழில் - அழகு; தனு - வில்; மானும் - ஒக்கும்; மலரான் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன்; மலரான் எய்சரம் - இந்திரசித்தன் விட்ட பிரமாத்திரம்; நோய்- துன்பம்; அனுமான் இலாமல் மருத்துமலை தரலாவது எப்படி என்பது வெளிப்படை. மலரான் - மலரம்புளுடைய காமன்; எய்சரம் தருநோய்- மன்மதன் எய்யும் மலரம்புகளால் நேரும் துன்பம்; அனுமான் இலாமல் - முதன்மையான மான்கண் போன்ற கண்கள் இல்லாமல்; மருத்துமலை தரல் - மருத்துமலைபோன்ற முலைகளைத் தருதல்; ஆவது என்னே - விளையும் பயன் என்ன; பயன்விளையாது என்றபடி.

## 119

வீரம் படைத்த பெருந்தேவை வேந்தன் மிகும்புண்ணியன்
தீரம் படைத்தவன் சீராச ராசன் றிகிரியன்னீர்
கோரம் படைத்த கொலையானை யென்மேற் குறித்துவிட்டார்
ஈரம் படைத்தவ ராதலென் னேயிவ் விருநிலத்தே.

தீரம் - அஞ்சாது எதிர்க்கும் ஆண்மை; திகிரி - மலை; கோரம் படைத்த கொலையானை-கொடுமைத்தன்மை வாய்ந்த கொலையானை; குறித்துவிட்டார் - ஏவிவிட்டவர்; ஈரம் படைத்தவராதல் என்னே - இரக்கமுடையவராதல் எவ்வாறு; இருநிலம் - பெரிய பூமி; பரந்த உலகம். கோரம் படைத்த கொலையானை-வட்டில் போன்ற வடிவுடைய வருத்தும் யானை, முலை; முலைகளாகிய யானைகளை என்மேல் விடுத்தார் என்பதாம். ஈர் அம்பு அடைத்தவராதல் என்னே - இரண்டு அம்புபோன்ற கண்களை மறைத்தவராதல் என்ன வியப்பு.

## 120

வேளங்கைக் கொண்ட கொடியுடைத் தென்னரும் வில்லவருங்
காளங்கைக் கொண்ட வளவரும் போற்றமிழ் காத்துவண்மை
நீளங்கைக் கொண்டவன் சீராசராச னெடுங்கிரியார்
வாளங்கைக் கொண்டனர் வாளங்கைக் கொண்டிலர் மாயமென்னே.

வேள் அங்கைக் கொண்ட கொடி - மன்மதன் பிடித்த கொடி, மீனக் கொடி; தென்னர் - பாண்டியர்; வில்லவர் - சேரர்; காளம் - பகைவருடைய எக்காளம்; வளவர் - சோழர்; தமிழ் காத்து - மூவேந்தர் தமிழ் காத்தாற்போலத் தமிழைப் பேணி; வண்மை நீள் அங்கை - கொடையால் சிறந்த அழகிய கை; 'தருகை நீண்ட தயரதன்' என்பார் கம்பர். வாள் அங்கைக் கொண்டனர் - வாளை அழகிய கையில் பிடித்துள்ளார்; வாள் போன்ற கண்களை உள்ளங்கையால் மறைத்துக் கொண்டனர். வாளம் கைக்கொண்டிலர் - சக்கரவாளப் பறவை எனப்பொலியும் முலைகளை அடக்கிவையாமல் வெளிப்படுத்தினர்; வாளம்-சக்கரவாளம். 'மங்கைமார் தடமுலையெனப் பொலிவன வாளம்' (கம்ப. பம்பைப். 21). மாயம்-மாய வித்தை; கண்கட்டு வித்தை. வாளம் கைக்கொண்டும் கொள்ளாமையுமாய்க் காட்சிதரல் கண்கட்டு வித்தைபோல் உள்ளது என்பதாம்.

## 121

கரும்பட்ட சொல்லியர் காமன் றடஞ்சேது காவலனென்
றிரும்பட்டஞ் சூடிய சீராசராச னெழில்வரைவாய்ப்
பெரும்பட்ட வாணுதல் வம்பே தொலையும் பெருந்தனமேன்
அரும்பட் டினிதணி யார்கர வாளரென் றுயபின்னே.

கரும்பு அட்ட சொல்லியர் - கரும்புச் சாற்றைக் காய்ச்சிய பாகு போன்ற இனிய பேச்சுடைய மாதர்; காமன் - மன்மதனைப் போன்ற

அழகன்; இரும் பட்டம் - பெரிய விருது; பெரும்பட்டவாணுதல் - பெரிய நெற்றிப்பட்டத்தை அணிந்த அழகிய நெற்றியுடையாளே; அண்மையினி. வம்பே தொலையும் பெருந்தனம் ஏன் - வீணாக அழிந்துபோகும் பெருஞ் செல்வம் எதற்காக; அரும்பட்டினி தணியார் - தாங்குதற்கு இயலாத பிறருடைய பட்டினியைப் போக்கார்; கரவாளர் - மறைத்துவைக்கின்ற இயல்பினர்; பிறருக்கு ஈந்து பயன் கொள்ளாது சேர்த்துவைக்கும் செல்வத்தால் பயன் இல்லை என்பதாம். வம்பே தொலையும் பெருந் தனம் - முலைக்கச்சை இற்றுவிழும்படியாகச் செய்யும் முலைகள்; மேல் அரும்பட்டு இனிது அணியார் - அம்முலைகளின் மேல் அருமையான பட்டாடையை அணிதல் செய்யார்; கரவாளர் - கையில் வாளைக் கொண்டவர்; அதாவது கையால் வாள் போன்ற கண்களை மறைத்தவர்.

## 122

செறுவா ளுடைப்படை யாற்பகைத் தார்முடி சிந்திமுல்லை
நறுவாகை சூடிய சீராச ராச னலவரைவாய்ப்
பெறுவாரை வையா தவரைவிட் டார்குழை பீறிடவே
தெறுவா னுறுகின்ற வைவாளைக் கைக்கொ டிறமென்னையே.

செறுவாள் - வருத்தும் வாள்; வாளுடைப்படை - வாளாயுதம்; முடி சிந்தி - தலைகளை உருட்டி; முல்லை நறுவாகை - தனக்குரித்தான முல்லைப்பூவும் வெற்றிமாலையாகிய வாகைப்பூவும்; நலவரை - நல்ல வளப்பமுடைய மலை; அழகிய மலை; பெறுவாரை - பெற்றோர்களை; வையாதவரை - பழியாதவரை; விட்டார் - அலைந்துதிரியவிட்டார்; வைவாளைக் கைக்கொள் திறம் - வைகின்றவளைக் கைப்பற்றும் தன்மை; பெறு வாரை வையாத வரை விட்டார் - பொருந்தும் கச்சினை அணியாத மலைபோன்ற முலையை வெளிப்படுத்தினார்; குழை பீறிடவே தெறுவான் உறுகின்ற வை வாள் - குண்டலம் பிளக்கும்படி வருத்து தலைச் செய்கின்ற கூரிய வாளாகிய கண்.

## 123

வானையுள் ளார்தொழுஞ் சீராம நாதனை வாழ்த்துமிசைத்
தேனையுண் பானெங்கள் சீராச ராசன் றிகிரியில்வேள்
தானையுள் ளார்பொருந் தானையென் மேற்பொரத் தந்துவிட்டார்
தானையில் லார்புவித் தானை பிடித்த சதுரமென்னே.

வானையுள்ளார் - வானுலகத்துள்ளார்; வாழ்த்தும் இசைத்தேன் - வாழ்த்துகின்ற இசைப்பாமாலையாகிய தேன்; உண்பான் - துய்ப்பவன்; திகிரி - மலை; வேள்தானையுள்ளார் - முருகனைப் போன்ற படையாளரையுடையார்; தானை என்மேற் பொரத் தந்துவிட்டார் - படைகளை என்மேல் போர் செய்யுமாறு விடுத்தார். தானையில்லார் - படையில்லாதவர்; புவி - பூமி; தானை பிடித்த சதுரம் - படைகளைக் கைக்கொண்ட சாமர்த்தியம்: வேள் தானையுள்ளார் - மன்மதன் சேனையைச் சேர்ந்தவராகிய பெண்டிர்; பொருந்து ஆனை என்மேல் பொரத் தந்து விட்டார் - தம் மார்பிலே பொருந்திய ஆனைத் தந்தம் போன்ற முலைகளை என்மேல் வந்து தாக்குமாறுவிடுத்தார்; தானையில்லார் - ஆடையில்லாதவராயினார்; புவித்தான் - பூமியில்; ஐ பிடித்த சதுரம் - வேல் போன்ற கண்களை மறைத்த விரகு. சதுரம் - சாமர்த்தியம்.

## 124

எய்யுஞ் சிலைக்கை மறமன்னர் கோளரி யின்றமிழ்க்குப்
பெய்யும் புயக்கரன் சீராச ராசன் பெருங்கிரிவாய்ச்
செய்யம் புயத்திருப் போல்வார் சுவர்க்கந் திறந்தளித்து
வையம் படைக்கின் றனரறி யேனிவர் மாயங்களே.

எய்யும் சிலை - அம்புவைத்து விடப்படும் வில்; மறமன்னர் - வீர மன்னர்; கோளரி - சிங்கம்; பெய்யும் புயக்கரன் - பொன் முதலிய நிதிவழங்கும் கையையுடையவன்; செய்யம்புயம் - செந்தாமரை - அம்புயத்திரு - தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; சுவர்க்கம் - பேரின்ப உலகு; வையம் படைக்கின்றனர் - உலகத்தையும் தோற்றுவிக்கின்றனர். சுவர்க்கத்தையும் தந்து உலகத்தையும் படைப்பது விநோதமாகும். மாயங்கள் - இந்திரசாலங்கள், கண்கட்டுவித்தை; சுவர்க்கம் - முலை; வை அம்பு அடைக்கின்றனர் - கூரிய அம்பு போன்ற கண்களை மூடுகின்றனர்.

## 125

அன்பு மறனு மறிவும் பெருக்கி யனைத்துயிர்க்கு
மின்பம் புரிகின்ற செங்கோல் செலுத்தி யிசைமுழுதுந்
தன்பங்கின் வைக்கின்ற சீராச ராசன் சயிலமின்னே
துன்பந் துவைத்தவர் கோவங்கைக் கொள்ளத் துணியலரே.

இசை - புகழ் ; தன்பங்கின் - தன்பக்கத்தில் ; துன்பந் துவைத்தவர்; துன்பங்களிலே மூழ்கியிருப்பவர்; கோவம் - கோபம், சினம் ; துணியலர் - முன்வரரார். துன் பந்து வைத்தவர் - நெருக்கமான பந்து போன்ற முலைகளைப் பெற்றிருப்பவர் ; கோ அங்கைக் கொள்ளத் துணியலர் - கண்ணை அழகிய கைகளால் மறைத்துக் கொள்ள முற்படார்.

## 126

சுருங்காத சேது பதிமர போங்கச் சுடர்விளக்காய்
வருங்காம தேனு வெனும்ராச ராசன் வரையிடத்தே
அருங்காரிகையொடு சின்னூ லிடையு மறிதலில்லார்
பெருங்காவி யங்கைவைத் தென்னவர் காணப் பெறுவதுவே

சுருங்காத - குறைவு படாத ; ஓங்க - சிறப்புற ; சுடர்விளக்கு - சுடர்விட்டு எரியும் விளக்கு ; காமதேனு - தேவலோகத்துள்ள பசு ; வேண்டுவோர் வேண்டுவதைத் தரும் ஆற்றல் படைத்தது ; வரையாது கொடுப்போன் என்றபடி. அருங்காரிகை - அருமையான காரிகை என்னும் பாவிலக்கணநூல் ; யாப்பருங்கலக்காரிகை. சின்னூல் - சின்னூல் என்னும் பெயர் படைத்த நேமிநாதம் என்னும் மொழியிலக்கண நூல் ; இடையும் அறிதல் இல்லார் - சிறிதும் தெரியாதவர் ; என்னவர் காணப் பெறுவர் - அவர் என்ன பொருளைக் காண வல்லவராவர். பெருங்காவியம் - பெரிய காவிய இலக்கியங்கள் ; கைவத்து என்னையே - இலக்கணமறியார் பெருங்காவியங்களைக் கற்பது இயலாது என்றபடி ; அருங்காரிகையொடு - கிடைத்தற்கு அரிய கைக்காரியொடு ; கைக்காரி - கையையுடைய கருநிற யானை ; என்றது யானைத் தந்தம் போன்ற முலைகளை. சின்னூல் இடையும் அறிதல் இல்லார் - சிறிய நூல் போல நுண்ணியதாயிருக்கும் இடை தெரியமாட்டாமல் நிற்பவர் ; பெருங்காவி - பெரிய குவளைமலர் போன்ற கண்.

## 127

மண்டாங்கு திண்புயன் சீராச ராசன் வரையிடத்தே
விண்டாங்கு சொர்க்க மிளிர்வா ரரம்பையு மேனகையும்
கண்டா லுருப்பசி யாரென்ப துண்மைநற் கற்பகமும்
உண்டா யளிக்கையு முள்ளார் கிடைத்தது முதியமே.

மண் - பூமி ; விண்தாங்கு சொர்க்கம் - ஆகாயத்தில் பொருந்திய சுவர்க்கவுலகம் ; மிளிர்வார் - விளங்குவார் ; அரம்பை, மேனகை, உருப்பசி என்போர் விண்ணுலக நடனமாதர் ; உருப்பசியார் என்பது - உருப்பசி போன்றவர் ; நற்கற்பகம் - நல்ல கற்பகமரம் ; வேண்டியவற்றைத் தரும் தேவலோகத்து மரம். அளிக்கையுமுள்ளார் - கொடுத்தலையுமுடையவர் ; ஊதியம் - இலாபம் ; விண்தாங்கு சொர்க்கம் மிளிர்வார் - ஆகாயத்துக்கு ஒப்பாம் வெறுவிதான இடையின் மேல் முலைகள் விளங்கப் பெற்றவர் ; அரம்பை - வாழை போன்ற தொடை ; மேல் நகையும் - வாயிடத்தே மிளிரும் பல் ; உருப்பசியார் - வருத்தும் பசி அறியார் ; நல் கற்பு அகம் - நல்ல கல் போன்ற முலையுடைய மார்பு : அளிக்கையும் உள்ளார் - வண்டுபோன்ற கண்ணைக் கையிடத்தே கொண்டுள்ளார் ; ஊதியமே-இன்பமாகுமா ?

## 128

இபநயமிக்க திருமுன் றி லான்மறை யேத்தொலியாற்
றபநயமிக்க பெரியோர்க் களிக்கின்ற தண்ணளியோன்
சுபநய மிக்கவன் சீராச ராசன் சுழியலன்னீர்
உபநய னம்மிலர் பார்ப்பா ரலரிவ் வுலகினிலே.

இபம் - யானை ; முன்றில் - முற்றம் ; மறை ஏத்து ஒலி - வேதத்தை ஓதும் ஓசை; தவநயம் - தவமாகிய நன்மை; தண்ணளியோன் - கருணையாளன் ; சுபநயம் - இன்ப நலம் ; சுழியல் - திருச்சுழியல் என்னும் தலம். உபநயனம் இலர் - பூணூல் சடங்கினைப் பெறாதவர்; பிரம்மோபதேசம் பெறாதவர். பார்ப்பார் அலர் -பார்ப்பார் என்னும் தகுதியைப் பெறார் ; உபநயனம் - இரண்டு கண் ; பார்ப்பார் அலர் - காணுதலைச் செய்யார் ; கண்களை மறைத்தமையால் உபநயனம் இல்லாதவராயினார் என்பதாம்.

## 129

ஈதலை வேலை யுடைக்கா னெரியென் றிகல்படைமன்
ஈதலை வேலை யெனும்ராச ர்ாச னிருங்கிரியீர்
காதலை வேலை யெனக்கொடுக் குந்திருக் காட்டுகின்றீர்
காதலை வேலை யெனக்கொடுக் குந்திருக் கைவிடுமே.

வேலையுடைய படை, கானெரி என்று இகல்படை என்க. வேல் - வேலாயுதம் ; கானெரி - காட்டுத்தீ ; இகல்படை - போர் செய்யும்

சேனை ; மன் - தலைவன், மன்னன் ; ஈதலை வேலை எனும் - கொடுத் தலைத் தம் தொழில் என்று சொல்லும் ; காதலை வேலை எனக் கொடுக்கும் திரு - காதலுணர்வைக் கடல் போலத் தரும் திருவீற்றிருக் கும் முலைகள் ; திரு - மங்கையர் கொங்கைமேல் தோன்றும் வீற்றுத் தெய்வம் ; காது அலை வேலை எனக்கு ஒடுக்கும் திருக்கை விடும் - காது களை வந்து மோதும் கடல்போன்ற கண்களை எனக்குக் காட்டாது மறைக்கும் அழகிய கைகளை எடுத்துவிடும்.

## 130

எண்டிருக் கைந்தம துள்ளத்தி லாத வினியவர்தாம்
உண்டிருக் கைக்குப் பொழிராச ராச னுயர்கிரிவாய்க்
கொண்டிருக் குந்திரு வேயொத் தவரைமுற் கொண்டுவைத்துக்
கண்டிருக் கையில்வை யாரென்ப ரால்க் கடலிடத்தே.

எண் திருக்கை - எண்ணத்தில் உளதாம் மாறுபாடு ; அதாவது வஞ்சனை ; உண்டு இருக்கைக்கு - உணவுண்டு வாழ்வதற்கு ; திருவே - விளி ; ஒத்தவரை முற்கொண்டு வைத்துக்கண்டு இருக்கையில் வையார் - நிகரானவரை முற்பட ஏற்று ஆசனத்தில் வைத்து மதிக்கமாட்டார் ; கடலிடம் - கடல் சூழ்ந்த உலகம். ஒத்த வரை முற்கொண்டுவைத்து - ஒன்றுக்கொன்று நிகரான மலை போன்ற முலைகளை முற்படக் காட்டி ; கண் திருக் கையில் வையார் - கண்களை அழகிய கைகளால் மூடிக்கொள்ளார்.

## 131

பண்ணே ரிலாத மொழிமாதர் பெண்ணைப் பரியிவர
எண்ணே ரமதவே ளெனும்ராச ராச னிருங்கிரியீர்
மண்ணே ரிலாத வரையூடு கால்செல் வழியறியேன்
கண்ணோ யிலாது மயங்குகின் றேற்குநுங் கைகொடுமே.

பண் நேர் இலாத மொழி மாதர் - பண்ணிசை ஒப்பாகாத இனிய பேச்சுடைய மாதர்; பண்ணிசையினும் இனிய சொல்லார்; பெண்ணைப் பரி - பனங்கருக்கினால் அமைந்த குதிரை; மடல் ஏறுவதற்காகப் பயன் படுத்தப்படுவது. எண் ஏர் மதவேள் - எண்ணும்படியான அழகுபடைத்த மன்மதன்; மண் - உலகு; மண் நேர் இலாத வரை - உலகில் ஒப்பில்லாது உயர்ந்த மலை; வரையூடு கால் செல்வழி அறியேன் மலையிடத்தே காலால் நடந்து செல்லும் வழி தெரிய மாட்டேன்

கண்ணே இலாது மயங்குகின்றேன் - கண்ணொளி இல்லாது திகைக்கின்றேன். நும்கை கொடும் - உம் கைகொடுத்து உதவுவீர். வரையூடு - முலைகளினிடையே; கால்செல்வழி அறியேன் - காற்றுப்புகும் வழி தெரியேன்; அத்தனை நெருக்கமாக உள்ளன முலைகள் என்றபடி. கண் ஏ இலாது மயங்குகின்றேற்கு-கண்ணாகிய அம்பு கிட்டாது மயங்குகின்ற எனக்கு; நும் கைகொடும் - உம் கையெடுத்துப் பார்வையை வழங்குவீர்.

## 132

செற்றமில் சேது பதிராச ராசன் சிலம்பனையீர்
குற்றமி லவ்வை யிடை வைத்த கல்வியைக் கொள்ளுமெற்கு
வெற்றிவேற் கையுடன் றேன்றித் திகம்பரர் வேடத்தராய்
உற்ற வருங்கலச் செப்பினைக் காட்டு மொழுக்கமென்னே.

செற்றம் - மிகுசினம், தணியாத கோபம், மனவைரம்; குற்றம் இல் அவ்வை இடைவைத்த கல்வி - குற்றமற்ற அகரத்தை இடையேபெற்ற கல்வி, அதாவது கலவி; எற்கு - எனக்கு; வெற்றிவேல் கையுடன் - வெற்றி வேலைப் பிடித்த கையோடு; திகம்பரர்வேடத்தர் - ஆடையணியாத சமணமுனிவர் திருவுருவுடன்; அருங்கலச் செப்பு - சமணர்க்கு உரிய ஒழுக்க நூலான அருங்கலச் செப்பு என்னும் நூல்; திகம்பரர் வேடத்திற்கு ஒவ்வாத முறையில் வேலை ஏந்திக்கொண்டு அருங்கலச் செப்பினை விளக்குவது பொருத்தமின்று என்பார், 'ஒழுக்கம் என்னோ' என்றார். வெற்றிவேல் கையுடன் தோன்றி - வெற்றி படைத்த வேல்போன்ற கண்ணை மறைத்த கையோடு வெளிப்பட்டு; திகம்பரர் வேடத்தராய் - ஆடையில்லா வடிவினராய்: உற்ற அருங்கலச் செப்பினை - தமக்குரித்தான ஆபரணச் செப்பை ஒத்த முலையினை. வெற்றிவேற்கை, அருங்கலச் செப்பு என்பன நூல்களின் பெயர்கள், வெற்றிவேற்கை - அதிவீரராமபாண்டியர் பாடிய நீதிநூல்; அருங்கலச்செப்பு - சமணமத தருமம் கூறும் அறநூல்.

## 133

ஆலு முகிலு முடல்வெளுத் தோட வதிகநிதி
காலு மலர்க்கரன் சீராச ராசன் கரந்தையிலே
வேலு மிலாமற் குமரன் விழைவொடு மேவலுண்டோ
பாலு மிகுமென் மொழியாய் மலைமட்டும் பார்த்துவிட்டே.

ஆலும் - அசையும்; முகில் - மேகம்; கருவண்ணம் படைதத மேகம் உடல் வெழுக்கும்படி மிகு செல்வம் வழங்குவோன் என்பதாம்; கரந்தை - சேதுநாட்டுள்ளதோர் ஊர்; குமரன் - முருகன்; மலையில் குமரன் வீற்றிருப்பது எங்கும் காணும் காட்சி; குமரன் எங்கும் வேல் கையிலின்றி இருப்பதில்லை. விழைவொடு - விருப்பத்தோடு; வேலும் இலாமல் - வேல் போன்ற கண் இல்லாமல் என்றது கைகளால் கண்களை மறைத்த தன்மையைக் குறித்தது; குமரன் - இளைஞன்; மலைமட்டும் - மலைக்கு ஒப்பாம் முலைகளை மட்டும்; பாலும் மிகு மென்மொழி - பால் இனிமையினும் மிகு இனிமை படைத்த பேச்சு.

## 134

தெருவரை மாடந் திகழ்தேவை காவலன் றிண்புயமா
இருவரை யேற்றவன் சீராச ராச னெழில்வரையீர்
ஒருவரை மேலு மிருவரை யுள்ள வொருவரென்னே
திருவரை யாமுன் புகுவளை யுங்கைச் செறிப்பதுவே.

தெரு வரை மாடம் - தெருக்களில் மலைபோல் உயர்ந்த மாடம்; தேவை - இராமேசுவரம்; திண்புயமா - வலிய தோள்களாக; இருவரை- இருமலை; மலைபோல் திண்ணிய இரு தோள்கள் என்க. ஒருவரை மேல் - ஒப்பற்ற மலையின்மேல்; இருவரையுள்ள ஒருவர் - சீதேவி பூதேவியருடன் திகழும் ஒப்பற்ற திருமால்; திருவரையாமுன் புகுவளை- திருமகள் தோன்றுவதற்கு முன் தோன்றிய சங்கு, பாஞ்சசன்னியம்; கை செறிப்பது - கையில் ஏந்தியிருப்பது. ஒரு அரைமேலும் இருவரை உள்ள ஒருவர் - ஒற்றை இடையின்மேலே இரண்டு முலைகளைக் கொண்ட ஒப்பற்ற இத் தலைவி; திருவரையாமுன்பு - முலைமேல் திருவைக் கட்டுப்படுத்துவதற்கு முன்பாக; குவளையும் கைசெறிப்பது - குவளைமலர் போன்ற கண்களைக் கையால் மறைப்பது.

## 135

ஆரியர் மான மழியாமற் காத்திவ் வவனிவென்ற
கூரியல் வேல்வல்ல சீராச ராசன் குளிர்வரையில்
சீரியல் சூது பொரும்போரிற் பாரதந் தேற்றித்தந்தீர்
வாரி யடைத்த படலத் திராமன் வரன்முறையே.

ஆரியர் மானம் அழியாமல் காத்து - ஆரிய வந்தணரின் மதிப்புக் குறையாமல் பாதுகாத்து ; அவனி - பூமி; கூரியல்வேல் - கூர்மை படைத்த வேலாயுதம்; குளிர்வரை - குளிர்ச்சி பொருந்திய மலை; சீரியல் சூது பொரும்போரில் பாரதம் தேற்றித்தந்தீர் - சிறப்பாக நடைபெற்ற சூதாட்டப்போர் காரணமாகப் பராதப்போர் விளையுமாறு செய்தீர்; வாரி அடைத்த படலத்து இராமன் - இராமன் இலங்கை செல்வதற்குக் கடலை அடைத்து அணை கட்டிய பகுதி; வரன்முறை - முறைப்படி. சீரியல் சூதுபொரும் போரில் - அழகு அமைந்த சூது போன்ற முலைக ளுடன் நிகழவிருக்கும் கலவிப் போரில்; பாரதம் தேற்றித் தந்தீர் - பரந்துள்ள அல்குலாகிய தேரினை வெளிப்படுத்தினீர்; வாரி அடைத்த படலத்திராமன் - கடல்போன்ற கண்ணை மறைத்த தன்மையவாய் நிலைத்துள்ளீர்.

## 136

நடலை யுடைப்பெரு நல்குர வோருள நன்றுவப்பான்
இடலை யுடைப்புகழ்ச் சீராச ராச னெழில் வரையிர்
அடலை யுடைப்பெருங் கோட்டானைக் காக மமைத்துவிட்டீர்
கடலை யிறைக்கைக் குவந்துநின் றீருங்கள் கல்விநன்றே.

நடலை - துன்பம்; நல்குரவோர் - வறுமையாளர்; நன்று - பெரிது, மிகவும்; உவப்பான் - மகிழும் பொருட்டு; இடலையுடைப் புகழ், இடுதலை அதாவது கொடையால் வரும் புகழ்; அடலை - அடுதலை, வருத்துலை; கோட்டானைக் காகம் அமைத்து விட்டீர் - பெரிய கூகையைக் காக்கையாக மாற்றி விட்டீர்; கடலை இறைக்கைக்கு வந்து நின்றீர் - பறவை தின்னக் கடலைத் தானியத்தை வாரித்தூவுவதற்கு வந்து நின்றீர்; கல்வி நன்று - கற்றவித்தை மிகவும் நன்று; ஒன்றை மற்றொன்ருக மாற்றும் சாலவித்தை வல்லவர் என்பதாம். அடலை யுடைப் பெருங்கோட்டு ஆனைக்கு - கொல்லும் இயல்புடைய கொம்பு களையுடைய யானைக்கு; காண்பார் உள்ளத்தை நையச் செய்யும் ஆனைத்தந்தம் போலுள்ள முலைகளுக்கு; ஆகம் அமைத்து விட்டீர் - மார்பை இடமாகக் கொடுத்து விட்டீர்; கடலை இறைக் கைக்கு உவந்து நின்றீர் - கடல் போன்ற கண்ணை இறையோடு கூடிய கையால் மறைத்து உவந்து நின்றீர். கல்வி நன்று - உம் ஒழுக்கம் மிக நன்றா யிருந்தது; பொருந்தாது என்பதாம்.

## 137

சிதகுஞ் சரசமுங் கொள்வஞ்ச நெஞ்சரைச் சீறியரஞ்
சிதகுஞ் சரமன்ன சீராச ராசன் றிகிரியிலே
மதகுஞ் சரமன்ன கூந்தனல் லீர்நீர் வருதலுண்டோ
மதகுஞ் சரம்வெளி யேற்றுகின் றீர்கண் மறித்துவிட்டே.

சிதகு - குற்றம்; சரசம் - காமச்சேட்டை; சீறி - சினந்து; அரம் சிதகும் சரம் - அரத்தினால் தேய்த்துக் கூராக்கப்பெற்ற அம்பு; அம்பு வருத்துமாறு போல அவர்களை வருந்தச் செய்வன் என்பதாம். மத குஞ்சரம் அன்ன கூந்தல்-வளமான குவளைமலர்போன்ற கரிய மயிர்முடி; நீர் - தண்ணீர்; மதகு - நீர்நிலையிலிருந்து தண்ணீர் வெளிப்படும் மடை; சரம் - நீர்; கண் மறித்துவிட்டு - மதகின் நீர்வரு வழியாகிய கண்ணை அடைத்துவிட்டு; நீர் வருதலுண்டோ - தண்ணீர் வெளி வருமோ; நீர் என்னை அடுத்து வருதல் இயலுமோ; மதகுஞ்சரம் வெளியேற்றுகின்றீர் - மதர்த்த யானை போன்ற முலைகளை வெளிப் படுத்துகின்றீர்; கண் மறித்துவிட்டே - கண்ணைக் கையால் மூடிவிட்டு.

## 138

கன்ன னெனப்பாற் கரற்குதித் திந்தக் கடற்புவியாள்
மன்னன் சயசிங்கஞ் சீராச ராசன் வரையனையீர்
சின்ன விடைக்குப் பெருவரைப் பாரந் திகைக்கவிட்டீர்
முன்ன முமைக்கண் ணறையரென் றேசொலு மொய்யுலகே.

கன்னன் - கொடைக்கு எடுத்துக்காட்டாக உரைக்கப்படும் பெரு மன்னன்; உதித்து - பிறந்து; கடற்புவி - கடல் சூழ்ந்த உலகம்; சயசிங்கம் - வெற்றியினால் சிங்கம் போன்று பெருமிதத்துடன் இருப்பவன்; சின்ன விடைக்கு - சிறிய காளைக்கு; பெருவரைப் பாரம்- பெரிய மலைபோல் பெரிய பாரத்தை; திகைக்க விட்டீர் - அக்காளை திக்குமுக்காடும்படி முதுகில் ஏற்றிவிட்டீர்; முன்னம் - முற்பட; உமை - உம்மை; கண்ணறையர் - கண்ணில்லாதவர், இரக்கமில்லாதவர்; மொய் - நெருக்கம். சின்ன இடைக்குப் பெருவரைப் பாரம் திகைக்க விட்டீர் - சிறிய நுண்ணிய உம் இடைக்குமேலே பெருவரை போன்ற பாரமுலைகளை அவ்விடை வருந்துமாறு வெளிப்படுத்தியுள்ளீர்; கண்ணறையர் - கண்ணில்லாதவர் ; கண்ணை மறைத்தமையால் இவ்வாறு உரைத்தான்.

## 139

சோனையுங் கான மெனப்பொழி பாற்கரன் றோன் றன்மறச்
சேனையின் வீறு முடையான் கிழவன் றிருமரபோன்
ஏனைய வேந்தர் புகழ்ராச ராச னிருங்கிரியீர்
தானையும் யானையும் விட்டவர் கோல்கையிற் றாங்கரிதே.

சோனை - சோனாமாரி, விடாமழை; கானம் என - மழையில்லாப் பாலை என்னும்படி; பொழிபாற்கரன் - பொன்னையும் பொருளையும் தரும் பாற்கரன்; மழையினும் மிகுகொடையாளன் என்பது கருத்து. வீறு - செருக்கு, பெருமிதம்; கிழவன் - கிழவன் சேதுபதி; மரபோன்- வழிவந்தவன்; ஏனை வேந்தர் - பிற மன்னர்; தானை - காலாட்படை; யானை - யானைப்படை; விட்டவர் - போற்றிப் பேணாது விட்டவர்; கோல் - செங்கோல்; செங்கோல் கையில் தாங்கரிது - செங்கோல் தாங்கி அரசாள்வது இயலாது; படை பல மில்லாதவர் அரசு நிலைபெறாது. தானை - ஆடை; யானை - யானைத் தந்தம் போன்ற முலைகள்; கோல் கையில் தாங்கரிது - அம்புபோன்ற கண்ணைக் கையால் மறைத்து நிற்றல் இயலாது; உடுக்கை இழந்தால் கை சென்று எடுத்து மானம் காத்தல் இயல்பு என்பதாம்.

## 140

பாண்பாகச் செவ்வி மதுரம் பொழிந்திசை பாணர்க்கன்பு
பூணபால சூரியன் சீராச ராசன் பொருப்பனையீர்
மாண்பாகக் காட்டானை யுங்காட்டி நிற்கு மதியுடையீர்
காண்பாரைக் காட்டா மறைத்தலென னேவிக்கடி பொழிற்கே.

பாண்- பாட்டு; பாகச் செவ்வி - ஏற்ற அழகு; மதுரம் - இனிமை; இசைப்பாணர் - பாட்டிசைப்பதில் வல்ல பாணர்; பால சூரியன் - உதய சூரியன்; மாண்பு - பெருமை; காட்டானை - காட்டில் வாழும் யானை; மதியுடையீர் - அறிவு படைத்தவரே; காண்பாரை - பார்ப்பவர்களை; காட்டா — காட்டுப்பசு; காட்டானையைக் காட்டியவர் காட்டுப்பசுவை மறைத்தது என்ன காரணம்; மாண்பாக - சிறப்பு விளையும் வண்ணம்; காட்டு ஆனை - காட்டு ஆனை ஒத்த முலை; காண்பார் - காண்கின்ற ஆற்றல் படைத்த கண்களை; காட்டா மறைத்தல் - வெளிப்படுத்தாமல் கைகளால் மூடி மறைத்த தன்மை; கடிபொழில் - வாசனை பொருந்திய சோலை.

## 141

இரும்புரு வச்சிலை கோட்டி மனங்கவ ரேந்திழையார்
விரும்புரு வச்சிலை வேள்தள வாய்வழி வேந்தனிகல்
திரும்புரு வச்சிர வாள்ராச ராசன் திருவரைவாய்
அரும்புரு வச்சிலை தந்தாய் தராயென் னதிசயமே.

இரும்புருவச் சிலை - கரிய புருவமாகிய வில்; கோட்டி - வளைத்து; மனம் கவர் ஏந்திழையார்-காண்பார் உள்ளத்தை இழுக்கும் இயல்புடைய பெண்டிர்; ஏந்திழையார் விரும்பு உருவச் சிலைவேள் - பெண்டிர் விரும்பும் படியான அழகிய கரும்புவில்லையுடைய மன்மதன் போன்ற ஆணழகன்; தளவாய் - வீரர்; இகல் திரும்பு உருவச்சிர வாள் - பகைவர் பின்னிட்டோடும்படி செய்கின்ற உறுதியான வாள்; சிலை - அழகிய சிற்பச்சிலை; அரும்பு உருவச் சிலை தந்தாய் - தாமரை மொட்டுப் போன்ற வடிவுடைய முலையாகிய மலையை வெளிப்படுத்தினாய்; அரும் புருவச் சிலை தராய் - அரிய புருவமாகிய வில்லைத் தந்தாயில்லை: இங்கே புருவச் சிலை என்றது புருவத்தோடு கூடிய கண்ணைக் குறிக்கும். ஒரு சிலையைத் தந்தும் ஒரு சிலையைத் தாராமையும் ஆகிய மாறுபாடு வியப்பிற்குரியதாம் என்றவாறு.

## 142

தெளியானைக் காரியத் தேவாத வேந்தன் திருச்சுழியற்
றளியானைப் போற்றிய சீராச ராசன் சயிலமின்னே
வெளியாகத் தேனை வெறுக்க வுரைக்கின்ற மெல்லியலார்
களியானை விட்டுக் களிப்பாரைக் கைக்கொளல் காட்சியன்றே.

தெளியானை - தெளிவான அறிவு இல்லாதவனை; எண்ணித் துணியும் திறமற்றவனை. திருச்சுழியல் - பாண்டிநாட்டுச் சிவதலத்துள் ஒன்று; இத்தலத்திற்குச் சுந்தரர் பாடிய பதிகம் ஒன்று உள்ளது (7 ஆம் திருமுறை 82 ஆம் பதிகம்). மின்னே - மின்னல் போன்று ஒளிபடைத்த பெண்ணே, விளி. நன்றாகத் தேனை வெறுக்க உரைக்கின்ற மெல்லிய லார் - பெரிதும் தேனை வெறுக்கும்படி மிக இனிமையான பேச்சுடைய பெண்டிர்; தேனினும் இனிய சொல்லரார். தேனை வெறுக்க உரைக் கின்ற மெல்லியலார் - கள்ளை வெறுத்தொதுக்குமாறு பேசும் பெண்டிர்; களியானை விட்டுக் களிப்பாரைக் கைக்கொளல் காட்சியன்றே - கள்ளைக் குடித்துக் களியானை ஆதரியாது போக விடுத்துக் கள்ளுண்டு களிப்பாரை ஆதரிப்பது அறிவுடைமையாகாது. காட்சி - அறிவு; களியானை விட்டு -

களிப்பு மிக்க யானை போன்ற முலைகளை வெளிப்படுத்தி; களிப்பு ஆர் ஐ கைக்கொள்ளல் - செருக்கு மிக்க வேல் போன்ற கண்களைக் கையால் பற்றுதல்; காட்சி இன்று - பார்வை இல்லை.

**143**

மறமுந்து வீரர் குலம்வந்த சேது மகிபதிநற்
றிறமுந்து செங்கோ லுளராச ராசன் திருவரைவாய்ப்
பிறர்கண் ணனைததுந் தெரித்தவ ராகிய பெருவல்லவர்
அறவுந் தமக்கொன்று மேதெரி யாரென வாதலென்னே.

மறம்முந்து - போர்த்திறத்தில் மேற்பட்ட; மகிபதி - அரசன்; நற்றிறம் உந்து செங்கோல் - நல்ல செயல்களைச் செய்ய ஊக்கம் தரும் செவ்விய ஆட்சி; பிறர்கண் அனைத்தும் தெரித்தவராகிய பெருவல்லவர்- பிறரிடத்து எல்லாம் தெரிவித்தவராகிய பெருவல்லமை படைத்தவர். அறவும் தமக்கு ஒன்றுமே தெரியார்தவரெனவாதல்; முற்றும் தமக்கு ஒன்றுமே தெரியாதவரெனவாதல். என்னே - என்ன வியப்பு; அறவும் - முற்றும்; பிறர்கண் அனைத்தும் தெரித்தவர் - மற்றவர் முன்னிலையில் ஆடை குலைய நிற்றலின் உடம்பு எல்லாம் வெளிப்படுத்தியவராவர்; பெருவல் அவர் - பெரிய சூதுகாய் போன்ற முலையினையுடையவர்; தெரியார் எனவாதல் - பாராதவராயிருத்தல்; கண்பார்வையை மறைத்தல்.

**144**

கைதலை வைத்து முறையிட லின்றிக் கருணைமுறை
செய்தலை மேற்கொண்ட சீராச ராசன் சிலம்பனையீர்
மெய்தலைப் பெய்த புகழினைக் கொள்ளா வெறுங்கவிபோல்
நெய்தலை யேற்கா தருந்தன முஞ்சுவை நேர்தலின்றே.

கைதலைவைத்து முறையிடல் - கைகளைத் தலைமேற் கூப்பிக் கொண்டு தம் குறைகளை எடுத்துச் சொல்லுகை; முறையிடல் - விண்ணப்பித்தல்; முறை செய்தல் - நீதி நெறிப்படி அரசாள்தல்; மெய்தலைப் பெய்த புகழ் - உண்மையோடு கூடிய புகழ்; வெறுங்கவி - பொருளாழம் இல்லா வெள்ளைக்கவி; நெய்தலை ஏற்காது அருந்து அனமும் சுவை நேர்தல் இன்றே - நெய்யைத் தன் தலையில் பெறாத சோறு சுவை பயப்பதில்லை; அனம் - அன்னம், சோறு. நெய்தலை ஏற்காது - நெய்தல் மலர்போன்ற கண்களைப் பெறாது; அருந்தனமும் சுவை நேர்தலின்றே - அருமையான முலைமட்டும் பெறுதல் இன்பம் செய்தலில்லை என்பதாம்.

## 145

நெற்றலை யன்னந் துயில்செம்பி நாட னெறிமுறையி
னிற்றலை வல்லவன் தேவைக் கதிபதி நீடமிழி
னிற்றலை யாயவன்சீராச ராச னிருங்கிரியீர்
கற்றலை விட்டதன் காரணத்தா லொன்றுங் கண்டிலமே.

நெற்றலை - நெற்கதிரின்மேல்; துயில் - தூங்கும்; நெறிமுறையின்- அரச நெறியில், நன்னெறியில்; அதிபதி - தலைவன்; நீள் தமிழ் - மிகப்பெருக்கமான தமிழ் நூல்கள்; பெருமை படைத்த தமிழ்; தொன்மை வாய்ந்த தமிழ். தலையாயவன் - தலைசிறந்த புலவன்; கற்றலை விட்டதன் காரணத்தால் ஒன்றும் கண்டிலம் — படித்தலை விட்டதன் காரணத்தால் ஒன்றும் தெரியாதவரானோம்; கல் தலைவிட்டதன் காரணத்தால் - மலைபோன்ற முலைகளை வெளிப்படுத்திய ஏதுவினால்; ஒன்றும் கண்டிலம் - வேறு எதனையும் காணாதவரானோம்; கற்று - கன்று, கைவளை, வண்டு; வண்டுபோன்ற கண்களின் பார்வையை மறைத்ததனால். அலை விட்டதன் காரணத்தால் - அலை போன்ற கண்களை மறைத்து விட்டதனால்; ஒன்றும் கண்டிலம் - எதுவும் தெரியாதவரானோம்.

## 146

பசும்பணைத் தோண்மட வார்மட லூர்வரப் பண்ணிமத
வசும்பளிப் பாட லருமலை யூர்வரு வான்பகைக்கு
விசும்பளிக் குங்கொற்றச் சீராச ராசன்றன் வெற்பினுள்ளீர்
தசும்பளித் தீர்கண் ணடைத்தீ ரெந்தாகந் தவிர்தலின்றே.

பசும்பணைத்தோள் - பசுமைநிற மூங்கில் போன்ற தோள்; மடல் ஊர்வர - தம் காதல் கைகூடாமையின் மடலேறிவரும்படி ; மத அசும்பு அளி பாடல் அறா மலை - மதச் சேற்றில் வண்டுகளின் பாடல் நீங்காமலிருக்கிற மலைபோன்ற பெரிய யானை ; ஊர்வருவான் - யானைமேல் ஏறி நடத்திப் பவனி வருபவன் ; வான்பகை - பெரும்பகைவர் ; விசும்பு அளிக்கும் - சுவர்க்கலோகத்தைத் தரும் ; கொற்றம் - வெற்றி ; தசும்பு அளித்தீர் - தண்ணீர்க்கெண்டியைத் தந்தீர் ; கண் அடைத்தீர் - அக் கெண்டியின் நீர்வரும் வழியை அடைத்துவிட்டீர்; தாகம் தவிர்தல் இன்றே - எம் நீர்வேட்கை நீங்கவில்லை; தசும்பு அளித்தீர் - குடம் போன்ற முலைகளைத் தந்தீர் ; கண் அடைத்தீர் - கண்களை மறைத்தீர்; தாகம் தவிர்தல் இன்று - விரகதாபம் தணியவில்லை.

**147**

படையொன் றிலாது பகைவேந்த ரோடக்கண் பார்த்துநகும்
விடையொன்று வீரர்க் கிறைராச ராசன் மிளிர்கிரிவாய்
இடையொன் றிலாது துதிக்கை யுடைத்து மிங்கிருக்க
இடையொன் றுடைய பழியிற்கை வைத்தற் கேதுவென்னே.

படை ஒன்று இலாது பகை வேந்தர் ஓட - பகைவர் தாம் கொண்டிருந்த ஆயுதங்களைப் போட்டுவிட்டுப் புறமுதுகிட்டு ஓட; நகும் - இகழ்ந்து சிரிக்கும்; விடை ஒன்று வீரர் - காளை போன்ற பெருவீரர்; மிளிர் கிரி - ஒளிவிட்டு விளங்கும் மலை; இடை - துன்பம், இடையீடு, நடு. துதிக்கையுடையது - புகழ்வதற்குரியது; துன்பம் ஒன்றும் இல்லாமல் புகழ்வதற்குரியனாகிய நல்ல சொற்கள் இருக்க; இடை ஒன்றுடைய பழியில் கைவைத்தல் - துன்பம் சேர்க்கும்படியான இகழ் சொற்களை மேற்கொள்ளுதல்; ஏது - காரணம்; இடை ஒன்று இலாது - இடையீடு சிறிதும் இல்லாது; துதிக்கையுடையது - தும்பிக்கையுடைய யானைத்தந்தம் போன்ற முலை; ஒன்றோடொன்று நெருங்கியிருக்கும் தன்மையால் இடைவெளியில்லாதாயிற்று. இடை ஒன்று உடைய பழி - ஒன்று என்னும் எண்ணின் குறி 'க'; இடை க ஒன்று பழி - பகழி; அதாவது அம்புபோன்ற கண்களில் கை வைத்து மறைத்தற்குக் காரணம் என்ன என்பதாம்.

**148**

அளிக்கையி னாலுல கேந்திநிற் பான்வண் டருந்திமதுத்
துளிக்கை யரும்புல்லைச் சீராச ராசன் சுரும்பினில்யாம்
ஒளிக்கை யுடையா ரொளிக்காது காட்ட வுடம்படலாற்
களிக்கையி னோடிடை யீடின்றிக் கற்றனம் கண்டனமே.

அளிக்கையினால் - கொடுக்கின்ற கையினால், கொடைத் திறத்தால்; உலகு ஏந்தி நிற்றல் - உலகைக் காப்பாற்றி நிலைபெற்றிருக்கச் செய்தல்; மதுத் துளிக்கை - தேன் சிந்துகை; சுரும்பு - மலை; ஒளிக்கையுடையார் ஒளிக்காது காட்ட உடம்படலால் - மறைக்குமியல்புடையார் மறைக்காமல் விளக்கிக் காட்டச் சம்மதித்ததால்; களிக்கையினோடு இடையீடு இன்றிக் கற்றனம், கண்டனம் - மகிழ்ச்சியுடன் தடையின்றிக் கற்றோம்; பொருளையும் உணர்ந்தோம். ஒளிக்கையுடையார் - ஒளிபடைத்த கண்ணைக் கையில் கொண்டவர்; ஒளிக்காது காட்ட

உடம்படல் - முலைகளை மறையாது வெளிப்படக்காட்ட ஒருப்படலால்; கல் தனம் - மலை போன்ற முலை; கண்டனம் - பார்த்தோம்.

149

போனரை முனைக மதிக்குந் தறுகண்மை பூண்மறவர்
சீரைமு னக்குஞ் செயதுங்க ராயன் செழுங்குடியிற்
பாரைமு னக்கிய சீராச ராசன் பருப்பதத்தீர்
தாரைமு னகத் தனந்தரி னன்குசந் தான முண்டே.

முனாக - முன்னாக, முதன்மையாக; மதிக்கும் - போற்றும்; தறுகண் - அஞ்சாமை; சீரை முனாக்கும் - சிறப்புகளை முற்படச் செய்யும், மேன்மையுறச் செய்யும்; செயதுங்கராயன் - வெற்றி படைத்த மன்னன்; பாரை - உலகத்தை, தன்கீழ் வாழும் குடிகளை; பருப்பதம் - மலை; தாரை முனாக - எக்காளம் முன்னால் ஊதிச் செல்ல; தனம் தரின் - செல்வம் தந்தால்; நன்கு சந்தானம் உண்டே - பெரிதும் உயர்ந்த இடமுண்டாகும். தாரை முனாக - கண்ணின் முன்னிலையில்; கண்ணை மறைத்துக் கொண்டுள்ளமையினால் கண் முன்பாக என்றார்; தனம் - முலை; சந்தானம் உண்டே - சந்ததி உண்டாகும்.

150

அல்லையும் வெல்பொலந் தேவையு மங்கையா டானையையும்
புல்லையும் காக்கின்ற சீராச ராசன் பொருப்பணையீர்
சொல்லையும் வேம்பா கெனவிதிப் பீருந் தோலையளித்
தெல்லையு மீக்கொண்ட சேலையுங் கைக்கொ ளியல்பென்னையே.

அல் - இரவு; பொலந்தேவை - பொன்மயமான ஒளிபடைத்த தேவை என்னும் இராமேச்சுரம்; மங்கை - உத்தரகோசமங்கை; ஆடானை - திருவாடானை; புல்லை - திருப்புல்லாணி; தேவை, மங்கை, ஆடானை, புல்லை என்னும் நான்கும் தெய்வத்தலங்கள்; இத் திருப்பதிகளையும் இங்குள்ள தேவாலயங்களையும் பரிபாலிப்பவன்; சொல் - பேச்சு; வேம்பாகு - வேகின்ற இனிய வெல்லப்பாகு; விதிப்பீர் - வழங்குவீர்; தோல்- உடம்பு, யானை; எல் - சூரியன்; மீக்கொண்ட - மேம்பட்ட, சூரியன் ஒளியினும் விஞ்சிய; சேலை - உடுத்திருக்கும் ஆடை, தோலை - யானைத் தந்தம் போன்ற முலைகளை; சேல் - கெண்டைமீன்; மீன்போன்ற கண், கைக்கொள்திறம் - கைப்பற்றிய தன்மை; கையால் மறைத்த தன்மை.

151

சிகரத்தை யொத்த தலையெடுப் பிற்புயல் சீறியிகல்
புகரத்தி யூர்ந்து வருதேவை வேந்தன் புகழ்மறையோர்
அகரத்தை யாதரிக் கும்ராச ராச னணிநெய்தலாய்
மகரத்தி னைந்துலை யேற்றிவிட் டாய்வாளை மாற்றியெற்கே.

சிகரத்தை ஒத்த தலை - மலைமுகடு போன்ற மத்தகத்தோடு கூடிய தலை; தலை எடுப்பில் - தலையைத் தூக்குதலால்; புயல் - மேகம்; சீறி - சினந்து; இகல் புகர் அத்தி - பகைக்கின்ற புள்ளிகளையுடைய யானை; அகரம் - அக்கிரகாரம்; மறையவர் குடியிருப்பு; அணி நெய்தலாய் - அழகிய நெய்தல் நிலத்தைச் சேர்ந்தவளே; மகரத்தின் ஐந்து உலை ஏற்றிவிட்டாய் - ஐந்து மகர மீனை உலையில் போட்டு விட்டாய்; மகரமீன் - கெண்டைமீன்; வாளை மாற்றி - வாளை மீனை அங்ஙனம் செய்யாது மறுத்து; மகரத்தின் ஐந்து - மகரவர்க்கத்தில் ஐந்தாம் எழுத்து மு; லை ஏற்றிவிட்டாய் - மு என்பதோடு லை என்னும் எழுத்தைச் சேர்த்தால், முலை; விட்டாய் - வெளிப்படுத்தினாய்; வாளை மாற்றி - வாள் போன்ற கண்ணை மறைத்து.

152

சிலைவளைக் கையுடைச் சீராம மூர்த்தி திருவடிக்குத்
தலைவளைக் கையுடைச் சீராச ராசன் சயிலமின்னே
மலைவளைக் கைக்கா மெனவுரைப் பாரெம் மதுகையர்க்கும்
அலைவளைக் கைக்கா மெனவுரை யார்இவ் வவனியிலே.

சிலை வளைக் கை - வளைந்த வில்லையுடைய கை; தலை வளைக் கையுடைய - தலை தாழ்த்தி வணங்குதலுடைய; மலை வளைக்கைக்கு ஆம் என உரைப்பர் - சிவபெருமான் மேருமலையை வில்லாக வளைத்தார் என்பது புராண வரலாறு. எம் மதுகையர்க்கும் - எத்தகைய வலிமை படைத்தவர்க்கும்; அலை வளைக்கைக்கு ஆம் என உரையார் - அலையையுடைய கடல் வளைப்பதற்கு உரியதாகும் எனச் சொல்லார்; அவனி - உலகம்; மலை - மலைக்கு ஒப்பான முலை; வளைக்கைக்கு ஆம் - மறைத்து வைப்பதற்கு உரியதாம். அலை - கடல்போன்ற கண்; வள்ளைக் கைக்கு ஆம் - வளையல் அணிந்த கைகளால் மறைத்தற்கு ஆகும்.

## 153

மண்ணோட்ட கில்லா வளனுங் குளனும் வயற்பெருக்கும்
தண்ணோட்ட வோடையு நீள்செம்பி நாடன் றரியலரை
விண்ணோட்ட வென்றவன் சீராச ராசன் வியன்கிரியா
கண்ணோட்ட மில்லவர் நெஞ்சங்கல் லாயினர் கண்டனமே.

மண் - பூமி; ஓட்டகில்லா வளன் - நீங்காத வளப்பம்; தண் ஓட்ட ஓடை - குளிர்ந்த நீரோடும் ஓடை; மண்வளம், குளம், வயற்பெருக்கு, ஓடை ஆகியவை பெருகியிருக்கும் செம்பிநாடு; நீள் - பெருக்கம், மிகுதி; தரியலர் - பகைவர்; விண்ணோட்ட - வானுலகத்தில் ஓடிப்போகும்படி; வியன் கிரி - பரந்த மலை; கண்ணோட்டம் இல்லவர் - இரக்கமில்லாதவர்; நெஞ்சம் கல்லாயினர் - மனம் இரங்காதவராய்க் கல்மனம் படைத்தவராயினர்; இரக்கமில்லாதவர் மனம் கல்லாயிருத்தல் இயல்பேயன்றோ? கண் ஓட்டம் இல்லவர் - கண் பார்வையை வெளியிடாமல் மறைத்தவர்; நெஞ்சம் - மார்பு; கல் ஆயினர் - மலை போன்ற முலையினையுடையவராயினர்.

## 154

முதுகர வேற்ற பெரும்புவி காத்து முறைசெலுத்து
வதுகர வாதவன் சீராச ராசன் வரையணையீர்
இதுகர வேயென் புயமுலைக் கும்முலை யீந்துநின்றீர்
மதுகரங் கட்கு மதுகர நல்கினிர் வண்மைநன்றே.

முதுகு அரவு ஏற்ற பெரும் புவி - ஆதிசேடன் என்னும் பெரும்பாம்பு தன் முதுகில் தாங்கியிருக்கும் பெரிய பூமி; முறை செலுத்துவது - நீதி முறையில் அரசாள்வது; கரவாதவன் - தவறாதவன்; இது கரவே - இது வஞ்சகமே யாகும். புயமுலைக்கு - தோள்களாகிய முல்லைக் காட்டிற்கு; முலை ஈந்து நின்றீர் - முல்லையைத் தந்து நின்றீர்; முலை - முல்லை; மதுகரம் - வண்டு; மது - தேன்; கரம் நல்கினீர் - கையால் வார்த்தீர்; வண்மை - வள்ளல் தன்மை, கொடை; என் புயம் உலைக்கும் முலை ஈந்து நின்றீர் - என் புயங்களை வருத்தும்படி செய்யும் முலைகளை வெளிப்படுத்தித் தந்துள்ளீர்; மதுகரங்கட்கு - வண்டுகளுக்கு; வண்டு போன்ற கண்களுக்கு; உமது கரம் நல்கினிர் - உமது கைகளைத் தந்துள்ளீர்; அதாவது கைகளால் கண்களை மறைத்துள்ளீர் என்றபடி.

## 155

பல்லவ ருக்கும் வளவர்க்குஞ் சேரர்க்கும் பாண்டியர்க்கும்
சொல்லெவ ருக்கு மிலாப்புகழ்ச் சேதுத் துறைக்கதிபன்
நல்லவருக் குநல் லானரைாச ராச னளிர்வரையார்
வல்லவ ருக்கியல் பாமா லுறுகண் மறைப்பதுவே.

பல்லவர் - பல்லவ மன்னர்; வளவர் - சோழர்; சேரர் - சேரமன்னர்; பாண்டியர் - பாண்டிநாட்டு மன்னர்; பல்லவர் முதலிய எல்லா அரசருக்கும் இல்லாத பெரும் புகழுடையான் சேதுமன்னன்; சேதுத்துறைக்கு அதிபன் - சேது காவலராகிய சேதுபதி; வல்லவருக்கு உறுகண் மறைப்பது இயல்பாமால் - வன்மை படைத்தவருக்குத் துன்பங்களைப் போக்குவது இயல்பாகும். வல் அவருக்கு - சூதுகாய் போன்ற முலையை உடையவருக்கு; உறுகண் மறைப்பது - தமக்கு உற்ற கண்களை மறைப்பது. இயல்பாமால் - இயல்பாகுமா? முறையாகுமா என்றபடி.

## 156

விடையர் செருவென்ற சீராச ராசன் வெற்பனையாய்
இடையர் குயவன் குடங்கொண்டு மென்பா லினிதளிக்க
அடைவு கெடவிங் கிருகா துடற்று மருங்கருங்கட்
கடையரு மென்பாற் குடங்கைக் கொளுஞ்செயல் காட்டலென்னே.

விடையர் - வேறுபாடுகொண்டவர், செருக்காளர்; வெற்பு - மலை; இடையர் - இடைச்சாதியார், ஆடுமாடுகளை வளர்ப்போர்; குயவன் - மட்பாண்டத் தொழிலோன்; மென்பால் - மென்மையான நல்ல பாலை; அடைவுகெட - முறைமையின்றி; உடற்றும் - பூசலிடும்; அருங்கருங்கட் கடையர் - கொடிய தீய கள்ளைக் கொண்டிருக்கின்ற கீழோர். பாற் குடம் - பால் நிரம்பிய குடம்; கைக்கொளும் - கைப்பற்றும்; இடைச் சாதியார் குயவன் செய்த குடத்தில் இனிய பாலை நன்கு தரவும் முறையின்றிக் கள்ளைக் கொண்டிருக்கின்ற கடையர் இனிய பாற்குடத்தைக் கைப்பற்றுதல் என்ன வினோதம் என்றவாறு. இடையர் - மெல்லிய இடையினையுடைய பெண்டிர்; குய வன் குடம்கொண்டும் - முலையாகிய பெரிய குடத்தைக் கொண்டும்; என்பால் இனிது அளிக்க - என்னிடம் மகிழ்வுடன் தர; அடைவுகெட - கண்டார் செயல்முறை கெடும்படி; இருகாது உடற்றும் - இரண்டு காதுகளோடும் சென்று சென்று போரிடும்;

கருங்கண் கடையரும் - கரிய கண்ணையுடையவரும்; என்பால் - என்முன்; குடங்கைக் கொளும் செயல் - உள்ளங்கையால் பற்றி மறைக்கும் செயல்.

## 157

**கலையை விடுத்தவர்பா லன்பி லாதவன் கன்னமத**
**மலையை விடுத்திகல் வென்றவன் சேதுக்கு வாய்த்தவன்புன்**
**புலையை விடுத்தவன் சீராச ராசன் பொருப்பனையீர்**
**சிலையை விடுத்துக் கணைமட்டுந் தொட்டென்ன செய்வதுவே.**

கலையை விடுத்தவர் - கலைகளைக் கல்லாதிருப்பவர்; அன்பிலாதவன் - அன்பு கொள்ளாதவன்; கன்னமதமலை - கன்னமதத்தையுடைய மலைபோன்ற பெரிய யானை; இகல் - பகை; புன் புலையை விடுத்தவன் - இழிந்த பாவச் செயல்களை விட்டவன்; சிலையை விடுத்து - வில்லைக் கைவிட்டு; அம்பை மட்டும் தொடுதல் - அம்பை மட்டும் கையில் வைத்திருத்தல்; வில்லைக் கைவிட்டு அம்பை மட்டும் பிடித்துக் கொள்வதால் என்ன செய்ய இயலும், பயனில்லை என்றபடியாம்; சிலையை - மலைபோன்ற முலையை; விடுத்து - வெளிப்படுத்தி; கணைமட்டும் - அம்புபோன்ற கண்களை மாத்திரம்.

## 158

**திருந்தனச் சேவல் பெடைதிளைக் குந்துறைந் தேவையர்கோன்**
**பெருந்தனக் கோக்க டொழூம்ராச ராசன் பெயல்பொங்கியு**
**திருந்தனுக் கோடியன் ஞயருந்தேனெனுஞ் செம்மொழியார்**
**அருந்தனச் சாத விரதியர் கைத்தே னடக்கலென்னே.**

திருந்து அனச்சேவல் - அழகிய ஆண் அன்னம்; பெடைதிளைக்கும் - பெட்டை அன்னத்தோடு கூடியிருக்கும்; தேவையார் - இராமேசுவரத்தில் வாழ்வோர்; கோக்கள் - அரசர்கள்; பெயல் - மழை; பெயல்பொங்கி அதிரும் என்க. மழை மிகுதலால் கடல் பொங்கி ஆரவாரிக்கும். செம்மொழியர் - நல்ல பேச்சினையுடையவர்; அருந்தனச் சாதவிரதியர் - அரிய செல்வமாகச் சத்தியோசாத மந்திரத்தைதடைய தவசியர்; சாதம் - சத்தியோசாத மந்திரம்; இளமை; கைத்தேன் அடக்கல் - கையிலே கள்ளை அடக்கி வைத்துக் கொண்டிருத்தல்; அருந்தனச்சாத இரதியர் -

கிட்டுதற்கு அரிய முலைகளையுடைய இளமையான இரதிபோன்ற பெண்டிர்; கைத்தேன் அடக்கல் - கையில் வண்டு போன்ற கண்களை மறைத்தல்.

## 159

செம்பை யியற்று புரிசையி லுயர் தேவையினுன்
கொம்பை யியற்று பிறைக்களி றூர்கின்ற கோளரியே
றெம்பை யுளேத்தெறும் சீராச ராச னிருங்கிரியாய்
அமபை யெடுத்துப் பணத்தோ டரும்பை யளித்தனையே.

செம்பை இயற்று புரிசை - செம்பினால் செய்யப்பெற்ற மதில்; பிறைக் களிறு - பிறைபோன்ற தந்தங்களையுடைய யானை; கோளரிஏறு - ஆண்சிங்கம்; பையுள் - வறுமை, துன்பம்; அம் பை - அழகிய பை; பணம் - செல்வம்; அரும்பு - அரிசி; மலர்; பையை எடுத்துப் பொருளோடு அரிசியையும் தந்தாய் என்பதாம். அம்பு நீர் என்று கொண்டு பணத்தோடு அரும்பை நீர்வார்த்தளித்தாய் என்றும் ஆம். அம்பை எடுத்து - அம்பு போன்ற கண்ணைக் கையில் எடுத்துக் கொண்டு, அதாவது கண்ணை மறைத்துக்கொண்டு; பணத்தோடு - பாம்பின் படம் போன்ற அல்குலோடு; அரும்பை அளித்தனை - அரும்பு போன்ற முலைகளைத் தந்தாய்.

## 160

வரசிலை யின்பொலங் கோட்டின் வளரி வரைந்துபகை
முரசிலை யாக்கிய சீராச ராசன் முகில்வரையிர்
அரசிலை யான்மற்றை யாலிலையா லத்தி யாலுமென்னும்
பரசிலை வாழை யிலையில்லை யாயிற் பருகுதற்கே.

வரசிலை - மேன்மைபெற்ற மேருமலை; பொலங்கோடு - பொன்மயமான சிகரம்; வளரி - ஒருவகை ஆயுதம்; வளர்ந்து வரும் தன் மெய்க்கீர்த்தி. வரைந்து - பொறித்து; பகைமுரசு - பகைவர் கொட்டும் படைமுரசு; முகில் - மேகம்; அரசிலையால்... பருகுதற்கே - உண்பதற்கு அரசிலை, ஆலிலை, அத்தியிலைகளிருந்தும் பயன் இல்லை; வாழையிலை இல்லையானால் உண்ண இயலாது. அரசிலை - அரசிலை போன்ற அல்குல்; ஆலிலை - ஆலிலைபோன்ற வயிறு; அத்தி - யானைத் தந்தம் போன்ற முலைகள்; முலைகளை வெளிப்படுத்தியமை குறித்த

வாறாம். பரசிலை வாழ் அயிலை இல்லையாயின் - மேலான வில் போன்ற புருவத்தின் கீழ் விளங்கும் அம்புபோன்ற கண் இல்லையானால்; பார்வையை மறைத்துவிட்டாய் என்றபடி. பருகுதற்கு - உண்பதற்கு, இன்பம் துய்ப்பதற்கு

## 161

புன்ஞகஞ் சூழ்கந்த மாதனத் தான்மதி பூண்டிசைகொள்
நன்ஞக ரிகத்தன் சீராச ராச னளிர்வரைபீர்
முன்ஞக நீர்மத் தகம்விடுத் தீரோர் முறையின்றியே
என்ஞேநும் பாற்கட் கடைவான்கை வைத்தனி ரேழையரே.

புன்னாகம் - சுரபுன்னை; கந்தமாதனம் - கந்தமாதனமலை; மதி - அறிவு; இசை - புகழ்; நன்னாகரிகத்தன் - கண்ணோட்டமுள்ளவன்; பலகலை வல்லவன்; நளிர்வரை - குளிர்ச்சிபொருந்திய மலை; முன்னாக - முற்பட; முறையின்றியே - மரபில்லாமல்; மத்து - தயிர்கடை கருவி; பாற்கண் கடைவான் - பாலில் கடைவதற்காக; ஓர் முறையில் லாமல் எதனால் உம்மிடமுள்ள பாலின்கண் கடைவதற்காக மத்தை இட்டுக் கைவைந்துக் கடைய முற்பட்டீர்; ஏழையரே - அறிவற்றவரே, பெண்ணே; தயிரில் மத்திடாமல் பாலில் மத்திட்டது அறிவில்லாமல் செய்த முறைதவறிய செய்கை என்க. மத்தகம் விடுத்தீர் - யானையை அதாவது முலைகளை வெளிப்படுத்தினீர்; நும்பால் கட்கடை - உம்மிட முள்ள கண்ணின் கடையில்; வான்கை வைத்தனிர் - அழகிய கைகளை வைத்தீர். முலையை வெளிப்படுத்திக் கண்ணை வெளிப்படுத்தாமை முறையற்றதாம் என்றவாறு.

## 162

அறுகாலுக் கஞ்சுகிர்ந் தார்வே டழைத்தூன்றி யாய்ந்துவமை
அறுகாலுக் கஞ்சுதற் காம்ராச ராசன்வெற் பார்மலரு
டறுகாலுக் கஞ்சு நுசுப்புடை யீர்நன் றணிதனத்தீர்
அறுகாலுக் கஞ்சு விரல்ளித் தீரலங் காரமின்றே.

அறுகால் - சிங்கத்தால்; உக்கம் - இடையினை; சுகிர்ந்தார் - வகுத்துக்கொண்ட மடவார்க்கு; வேள் - மன்மதன். அறுகு ஆலுக்குத் தழைத்து ஊன்றி - ஊன்றித் தழைத்து அறுகோடு ஆலுக்கு உவமையும் ஆய்ந்து, சுகற்கு உவமையும் ஆம் என்றவாறு. ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றிப் பெருவாழ்வு வாழ்பவன் என்பதாம். சுகன் - சுகமுனிவன், வியாசரின் புதல்வன்; அறுகாலுக்கு அஞ்சு நுசுப்புடையீர் -

மலருடறுத்துச் - செல்லும் காற்றுக்கு அஞ்சும் இடையினையுடையீர் நன்று அணிதல் நத்தீர் - நன்கு அலங்கரித்தலை விருப்பீர்; அறுகால் சிங்கம், காற்று, வண்டு; அறுகாலுக்கு அஞ்சுவிரல் அளித்தீர் - ஆறு கால்களுக்கு முப்பது விரல்களாம்; ஆனால் அளித்ததோ அஞ்சுவிரல்; அத்தகு சித்திரத்தால் அழகில்லை என்க. நன்று அணி தனத்தீர் - நன்கு அலங்கரிக்கப்பட்ட முலையினையுடையீர்; அறுகால் - வண்டு; கண்ணுக்கு உவமை; கண்ணுக்கு ஐந்து விரல் அளித்தீர் என்றது கண்புதைத்தலைச் சுட்டியவாறாம். அலங்காரம் - அழகு.

## 163

கானா றடைகரை யூர்களும் வாவியுங் காண்பினிய
மானா றடையுங் குறுங்காடு நெய்தலும் வாய்த்தகலை
வானா றடைவனசு சீராச ராசன் வனகிரியீர்
தேனா றடைத்துக் கொடுங்குன் றெற்கீந்த திறமென்னையே.

கானாறு அடைகரை ஊர்கள் - காட்டிலிருந்து ஓடிவரும் ஆறுபாயும் கரைகளில் அமைந்த ஊர்கள்; வாவி - குளம்; காண்பினிய - காண்பதற்கு இனிமையான; மான் ஆறு அடையும் குறுங்காடு - மான்கள் வழிகளில் அலைந்து திரியும் சிறுகாடுகள்; கான், ஆறு, ஊர், வாவி, குறுங்காடு, நெய்தல் என்பன நானில வளமும் உடைமையைக் காட்டும். கலைவான் ஆறு - கலையாகிய சிறந்த நெறி; வனம் - அழகு, காடு; தேன் ஆறு - அழகிய ஆறு; கொடுங்குன்று - கரடுமுரடான பாறை; ஆற்றை அடைத்துவிட்டு மேடுபள்ளமான மலைப்பகுதிகளை அளித்த செயலால் விளையும் பயன் யாது; சிறிதும் இல்லை. தேன் ஆறு - வண்டின் வழி; இங்கே வண்டு என்றது கண்ணைக் குறித்தவாறாம். கொடுங்குன்று - முலைகளுக்கு உவமை; தேனாறு அடைத்தது - கண்ணை மறைத்ததாம்.

## 164

தொனித்திருக் கையிசை வேதியர் தோன்றச் சுடர்மகுடம்
குனித்திருக் கைதரு சீராச ராசன் குளிர்வரைவாய்த்
தனித்திருக் கையினீர் தந்தீ ரிரண்டு சதாபலங்கள்
இனித்திருக் கையில்லை யென்று லெனக்கவை யென்பயனே.

தொனித்து இருக்கை இசை வேதியர் - இருக்கு வேதத்தை இனிய ஓசையுடன் ஓதும் அந்தணர்; சுடர் மகுடம் குனித்து - ஒளிமயமான

கிரீடம் அணிந்த தலை தாழ்த்து வணங்கி; இருக்கை தரும் - அமர ஆசனம் அளிக்கும்; இரு கைகளால் கூப்பி வணங்கும் என்றும் ஆம்; தனித் திருக்கையில் இரண்டு சதாபலங்கள் தந்தீர் - தனிப்பட அழகிய கையில் இரண்டு எலுமிச்சம்பழங்களைத் தந்தீர்; சதாபலம் - எலுமிச்சம் பழம்; இனித்திருக்கை - இனிப்புச் சுவையுடன் இருக்கை; என்பயன் - என்ன பயன்; பயனில்லை என்பதாம். தனித்து இருக் கையில் - தனிமையாக இரண்டு கைகளிலும்; சதாபலங்கள் முலைகளைக் குறித் தன; திருக்கு - கண்; இனித் திருக்கை இல்லை என்றால் - இப்பொழுது கண் இல்லாவிட்டால்; கண்ணை மறைத்தமை சுட்டியவாறு.

## 165

படையே தருஞ்சிலை வாண்மற வேந்தன் வண் பாவலர்க்குத்
தடையே செயாதவன் சீராச ராசன் றமிழ்வரையாய்.
இடையே குறைந்து னகரங் கிடைக்காத வின்பமளித்
துடையே யிலாத படியர் வத்தைக்கை யுறுதலென்னே.

படை - சேனை; ஆயுதம்; சிலைவாள் - வில்லும் வாளும்; வண்பாவலர் - வளப்பம் மிக்க பாக்களைப் பாடுவதில் வல்ல புலவர்; இடையே குறைந்து - இடையீடு இல்லாமல்; அகரம் - ஊர்; உன் அகரம் கிடைக்காத இன்பம் - உன் ஊருக்குக் கிடைக்காத இன்பம்; உடையே இல்லாதபடி - செல்வம் இல்லாமல்; ஆடை இல்லாமல்; ஆவத்தை - ஆபத்தை, அம்பினை; இடையே குறைந்து - இடை என்னும் உறுப்புக் குறைந்து; னகரம் கிடைக்காத இன்பம் - இபம்; யானை, முலை. அளித்து - கொடுத்து; கையுறுதல் - கைப்பற்றுதல்; அம்புபோன்ற கண்களைக் கை பொருந்துதல்.

## 166

வெருண்டாரை யஞ்சலென் றுள்கின்ற சிங்கம் வினையகத்து
மருண்டாரை யேவாத சீராச ராசன் மலரியிலே
தெருண்டா ரெனமெய்ம் முழுதுந் தெரிக்குந் தெரிவையர்நீர்
இருண்டா ரெனவே யொளிககையுற் றுலுமக் கேற்றதன்றே

வெருண்டாரை - அஞ்சியவர்களை; அஞ்சல்-அஞ்சாதீர்; ஆள்கின்ற- அரவணைக்கின்ற; வினையகத்து - செயலாற்றுவதில்; மருண்டார் - மயங்கியவர், தியங்குபவர்; மலரி - மலரி என்னும் ஊர்; தெருண்டார் -

தெளிவு பெற்றவர் ; இருண்டார் - தெளிவில்லாதவர் ; அறிவற்றவர். தெளிவுபெற்றவர் என்னும்படி உண்மை எல்லாவற்றையும் தெரிவிக்கின்ற நீர், அறிவுமயங்கியாரைப் போல மறைந்து கொள்வது உம் நிலைக்குப் பொருந்துவதன்றாம் என்றவாறு. ஒளிக்கை - மறைகை; மெய்ம் முழுதும் - உடம்பை எல்லாம் ; இங்கே உடம்பு என்றது முலைகளைக் குறித்தபடியாம். இருளை விரும்பியவர் போல ஒளியாகிய கண்ணை மறைப்பது தகாது. ஒளி - கண் ; ஒளிக் கையுற்றால் என்க.

## 167

மாதகன் மார்பிடை வைத்தவன் சோலை மலையழகன்
கோதகன் முத்து வயல்கொள்ள வைத்த குலத்தலைவன்
போதக மீது வருராச ராசன் பொருப்பணையீர்
காதகன் கண்மேவு கையுடை யீர்போத கம்விடுத்தே.

மாது அகல் மார்பிடை வைத்தவன் - திருமகளை மார்பில் கொண்டவன்; சோலைமலை - திருமாலிருஞ்சோலைமலை; கோது அகல் முத்து - குற்றம் நீங்கிய முத்து. முத்துவயல் கொள்ள வைத்தவர் சீராசராசனின் முன்னோர்; போதகம் - யானை ; காதகன்கண் மேவுகையுடையீர் - கொலையாளிடம் சேர்ந்துள்ளீர் ; போதகம் விடுத்து - உபதேசத்தைப் புறக்கணித்து. காது அகல் கண்மேவு கையுடையீர் - காதளவு நீண்ட கண்களில் பொருந்திய கையையுடையீர் ; போதகம் விடுத்து - முலை யானைகளை வெளிப்படுத்து.

## 168

விடம்பிடிக் கின்ற விழியார் மடல்வரு வேள்பகைஞர்
இடம்பிடிக் கின்றவன் சீராச ராச னிருங்கிரியீர்
அடம்பிடிக் கின்ற கரிக்கொம் பிடிக்கைக் கயருமென்முன்
உடம்பிடிக் கையுற்று நின்று லவர்க்கென் னுரைப்பதுவே.

விடம் பிடிக்கின்ற விழியார் - நஞ்சு பொருந்திய கண்ணைப் படைத்த மகளிர் ; வேள் - மன்மதனுக்கு ஒப்பான அழகன் ; பகைஞர் இடம் - பகைவர் நாடு ; அடம்பிடிக்கின்ற கரி - அடங்காது மதங்கொண்டுள்ள யானை; கரிக்கொம்பு இடிக்கைக்கு அயரும் - யானையினுடைய தந்தம் இடித்தலால் சோர்ந்து விழும் என் முன்பு; உடம்பிடி - வாள்; யானையின் இடியால் சோர்ந்து விழும் என்முன் வாளை ஏந்தி வெறிதே நின்றால் என்ன பயன் ; அதனைத் தாக்கி என்னைக் காத்தல் வேண்டாவோ

என்பதாம். அடம்பிடிக்கின்ற கரிக்கொம்பு - மதர்த்துள்ள யானைக் கொம்பு போன்ற முலை ; உடம்பிடி - வாள்போன்ற கண் ; கையுற்று நின்றால் - கையால் மறைத்து நின்றால்.

## 169

பயமுகங் காட்டி யிரக்கும் வறியவர் பாவலர்க்கு
நயமுகங் காட்டி யவன்சேது காவலன் நாடுபுகழ்
செயமுகங் காட்டுமெஞ் சீராச ராசன் திருமலைவாய்க்
கயமுக னைக்கண் டனன்சேயின் கண்ணுளங் காண்மிகவே.

பயமுகம் - துன்பத்தால் நலிந்து அஞ்சுகின்ற முகக்குறிப்பு ; வறியவர் - பொருள் ஒன்றும் இல்லாதவர்; பாவலர் - புலவர்; நயமுகம் - இன்முகம் ; செயமுகம் - வெற்றிநிலை ; கயமுகனைக் கண்டனன் - யானை முகனாகிய விநாயகனைப் பார்த்தேன் ; சேய் - முருகன் ; சேயின்கண் உளங்காண் - முருகனையும் காணும் உள்ள விருப்புடையேன். கயமுகனை - யானைத்தந்தம் போன்ற முலையினை ; சேய் இன் கண் உளம் காண் - சிவந்த கோடுகளையுடைய இனிய கண்ணைக் காணும் விருப்புடையேன். மிகவே - பெரிதும்.

## 170

சேண வரும்புகழ்ச் சீராச ராசன்றிகிரியினீர்
காண வருங்கந்த மாதனத் தீர்பார்வை கையுடையீர்
மாண வரும்புக லூருடை யீர்திரு வாரியுள்ளீர்
பூண வருங்கோல் வளையீர்நின் றீர்சேது பூபனெத்தே.

சேணவரும் - தூரத்து நாட்டவரும்; கந்தமாதனம், பார், வைகை, புகலூர், திருவாரி, செங்கோல் ஆகியவை சேதுபூபனுக்கு உரிமையுடையன. இவற்றைத் தலைவியும் பெற்று விளங்குகிறாள் என்பது இங்கு எடுத்துக் கூறப்படுகிறது. காணவரும் கந்தமாதனத்தீர் - காட்சிக்கு இலக்காகும் கட்டுத்தறியில் உள்ள யானைத் தந்தம் போன்ற முலையினையுடையீர் ; பார்வை கையுடையீர் - கண்ணைக் கையால் மறைத்துக் கொண்டுள்ளீர் ; மாணவரும் புகல் ஊரு உடையீர் - மாட்சிமையுடைய புகலிடமான தொடையினையுடையீர் ; ஊரு - தொடை ; திருவாரியுள்ளீர் - அழகினை அள்ளிக்கொண்டுள்ளீர்; பூணவரும் கோல் வளையீர் - அணிவதற்குரிய வளையல்களையுடையீர்; சேதுபூபன் - சேதுநாட்டு மன்னன்.

**171**

புதனும் பிருகற் பதியு மனைய புலவருக்கு
விதன மறுத்தவன் சீராச ராசன் மிளிர்கிரியாய்
வதன மறித்தனை மாவே தனைசெயு மாறுவிட்டாய்
மதனன் கலகத்து நீசாக் கியர்கலை மாதரசே.

புதன் - சந்திரன் ; பிருகற்பதி - வியாழன், தேவ்குரு ; விதனம் அறுத்தவன் - துன்பத்தைப் போக்கியவன்; வதன மறித்தனை - அழகிய மான்குட்டியை; மாவேதனை - மிகுதுன்பம்; மதனன் கலகம் - மன்மதன் செய்கின்ற போர், கலவிப்போர் ; வதனம் மறித்தனை - முகத்தினை, அதாவது கண்ணை மூடிக்கொண்டாய்; மா - யானை, முலை; சாக்கியர் கலை - சைனர்களின் ஆடையற்ற திகம்பரநிலை ; உடம்பெல்லாம் தெரிய ஆடையின்றி நின்றீர் என்பதாம்.

**172**

காரார் பொழிற்கந்த மாதனத் தான்றன் கடல்கொழிக்கும்
ஆரா பரணத்தன் சீராச ராசன்புல் லாணியன்னீர்
தீரா தவொளி படைத்திரு டன்பாற் றினைத்துணையுஞ்
சேரார் கலையில் லவருமெல் லாந்தெரிந் தீர்க்கிதென்னே.

கார் ஆர் பொழில் - மேகம் நிறைந்த சோலை ; கடல் கொழிக்கும் ஆர் - கடலில் விளையும் முத்து ; ஆர் ஆபரணத்தன் - முத்துமாலையை யுடையவன் ; புல்லாணி - திருப்புல்லாணித் திருப்பதி ; தீராத ஒளி படைத்து இருள்தன்பால் தினைத்துணையும் கலையில்லவரும் சேரார், எல்லாம் தெரிந்தீர்க்கு இது என்னே என்க. தீராத ஒளி - நீங்காத ஒளி, நல்லறிவு ; இருள்தன்பால் சேர்தல் - இருளையடைதல், பாவத்தைச் சார்தல் ; தினைத்துணையும் - தினையளவேனும், சிறிதும்; கலையில் லவரும் - சாத்திரங்களை அறியாதவரும்; சேரார் - அணுகார்; எல்லாம் தெரிந்தீர் - முற்றும் அறிந்துள்ளீர் ; ஒளி - கண் ; ஒளி படைத்தும் இருள்தன்பால் சேர்தல் - கண்ணைப் படைத்தும் மறைத்தமையால் இருட்டினைச் சேர்ந்தாள் என்பதாம். எல்லாம் தெரிந்தீர் என்பது உடம் பெல்லாம் தெரிதலாயினீர் என்றவாறு.

**173**

இமங்கொண் மலையி னிலையாக வென்று மிருக்குமொரு
கமங்கொள் புயலுடைச் சேதுக் கதிபன் கலைகடரங்
தமங்கொள் மதிமிகுஞ் சீராச ராசன் றமிழ்வரையாய்
சமன்கொள்கை வல்லவ ராயு நடுவின்மை தக்கதன்றே.

இமம் கொள் மலை - பனிபடிந்த மலை, இமயமலை ; இமயமலை போல் என்றும் நிலையாக இருக்கும் தன்மைபெற்றது சேது; 'இமசேது பரியந்தம்' என்பது நாட்டுவழக்கு. கமம் - நிறைவு; கமம் கொள் புயல் - நீர் நிறைவு கொண்ட மேகம் ; அதிபன் - தலைவன் ; கலைகள் தரம்தமம் கொள் மதி கலைகளின் உயர்வு தாழ்வுகளை ஆய்ந்துகொள்ளும் அறிவு; தரம்தமம் - உயர்வுதாழ்வு; தகுதி தகுதியின்மை. மதி - அறிவு. சமன்கொள்கை வல்லவர் - சமமாக ஒப்பக்கருதும் கொள்கையில் சிறந்தவர் ; நடு இன்மை - நடுநிலை யில்லாமை; தக்கதன்று - முறையுடையதன்று. சமன் - யமன் ; சமன் கொள் கை - கூற்றுவனுக்கு ஒப்பாம் கண்ணை மறைத்த கை ; வல் அவர் - சூதுகாய் போன்ற முலையினையுடையவர் ; நடு இன்மை - இடையானது இல்லாத தன்மை ; நுண்ணிடையார் என்பதாம் ; தக்கது அன்று - ஏற்புடைத் தாகாது.

## 174

அரண்டாங்கு வேலண்ணல் சீராச ராச னணிவரைவாய்ப்
பரண்டாங்க மேனற் புனவாணர் பாவையுன் பண்புகண்டார்
முரண்டாங்கு கூற்றினைக் கைக்கொண்டி ரொன்றொன்றை மோதிப்பொரும்
இரண்டாகச் செப்பு வதையா வருத்திய தென்பர்களே.

அரண் - காப்பு; அரண் தாங்கு வேல் - காத்தலைக் கொண்டிருக்கின்ற வேல்; பரண் - புனங்காவல் செய்ய உதவும் மேடை; ஏனற்புனம்- தினைப்புனம்; முரண்தாங்கு கூற்று - மாறுபட்ட பேச்சு; ஒன்றை ஒன்று மோதிப் பொரும் - ஒன்றை ஒன்று தாக்கி மாறுபடும்; இரண்டாகச் செப்புவதை - இரண்டு பொருள்படப் பேசுவதை; யாவர் உத்தியது என்பர்களே-யார்தாம் ஏற்புடையது என்று சொல்லுவர்; முரண்தாங்கு கூற்று - வலிமை நிலைபெற்ற கண்; பிறரை வருத்தும்படியான கண்; கூற்றினைக் கைக்கொண்டீர்; ஒன்றை ஒன்று மோதிப் பொரும் இரண்டு ஆகச் செப்பு வதையா வருத்தியது. இரண்டு ஆகச் செப்பு - மார்பிலேயுள்ள செப்புப்போன்ற இரு முலைகள்; வதையா வருத்தியது - தாக்கி வருத்தியது.

## 175

நீர்ப்பாற் சுறவு மகரமுஞ் சேலு நிறைந்தகடற்
சேர்ப்பாற் றிகழ்செம்பி நாடாள் செய்துங்கன் றீயவரை
ஊர்ப்பா லிலாதவன் சீராச ராச னுயர்வரையிற்
பார்ப்பா ரிலையென்பர் காயத் திரிவிடிற் பாவையரே.

சுறவு, மகரம், சேல் - மீன்வகைகள்; கடற்சேர்ப்பால் - கடல் சேர்ந்துள்ளமையால்; செம்பிநாடு- சேதுநாடு; செயதுங்கன் வெற்றியால் சிறந்து விளங்குவோன்; தீயவரை - கொடியோரை; ஊர்ப்பால் இலாத வன் - ஊரில் கொள்ளாதவன்; காயத்திரி - காயத்திரி மந்திரம்; காயத்திரி மந்திரத்தை ஓதாது விடுந்தாரைப் பார்ப்பார் அலர் என்று சொல்லுவர். பார்ப்பார் இலை என்பர் - பார்க்கின்ற கண்கள் இல்லை என்பர்; கண்ணை மறைத்துள்ளமையால் கண் தெரியாமை குறிப்பித்த வாறாம்; காய் அத்திரி விடில் - அத்திரி - மலை, முலை; வருத்தும் முலைகளை விடுத்ததால் என்பதாம்.

## 176

உடலாற் றுவண்ட மிடிப்புலவோர்கவிக் கூரும்பொன்னும்
இடலாற்று சேது பதிராச ராசன்வெற் பேந்திழைகைம்
மடலாற் கடலடைத் தாய்கந்த மாதனமட் டுந்தந்தாய்
கடலாடிப் பின்மலை யேறிக்கல் யாணங் கருதுமெற்கே.

துவண்ட - வாடிய; மிடிப்புலவோர் - வறுமையுற்ற பலவர்; வறுமை யுற்ற பலவோருக்கு நன்கொடையாக ஊரும் பொன்னும் தருபவன் சேதுபதிராசன்; கடலாடி - கடலிலே நீராடி; கடல் நீராடி மலைமேல் ஏறி நற்செயல் செய்யக் கருதுகிற எனக்குக் கடலை அடைத்துவிட்டுக் கந்தமாதனமலையை மட்டும் தந்துள்ளாய் என்பதாம். கல்யாணம் நற்செயல், திருமணம்; கடலாடி - அல்குல் கடலில் படிந்து; மலையேறி முலைகளாகிய மலைகளை அணைந்து; கல்யாணம் கருதும் எற்கு கலவியை விரும்புகிற எனக்கு; கைம்மடலால் கடல் அடைத்தாய் கையினால் கடல் போன்ற கண்ணை மறைத்துள்ளாய்; கந்த மா தனம் மட்டும் தந்தாய் - வாசனைக் கலவை மணமுள்ள திரு இருக்கும் முலைகளை மட்டும் கொடுத்துள்ளாய்.

## 177

தனைத்துணை யாக்கொண்ட செந்தமிழ் வாணர் தழைக்கவெண்ணி
எனைத்தையு மீகின்ற சீராச ராச னிருங்கிரியீர்
அனைத்தையு மேற்பா ரதிகார முள்ளவ ராவனடந்தேன்
றினைத்துணை யுந்தெரி யேனுங்கள் சூததி காரமிதே.

துணை - காப்பு; செந்தமிழ்வாணர் - செந்தமிழில் வல்ல புலமை யாளர்; தழைக்க - செழித்து வாழ; எனைத்தையும் - எல்லாவகைப் பொருள்களையும்; இருங்கிரி - பெரிய மலை; அதிகாரமுள்ளவர்

எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்வார் என்று சார்ந்தேன்; ஆனால், உங்களுடைய தந்திரங்களைத் தினையளவேனும் அறியமாட்டேன் என்பது வெளிப்படை. அனைத்தும் மேற்பார் அதிகாரம் உள்ளவர் - எல்லாவற்றையும் மேற்பார்க்கின்ற தகுதியடைந்தவர்; சூது அதிகாரம் - சூதுகாய் போன்ற முலைகளை வெளிப்படுத்தும் செயல்; பாராமல் கண்ணை மறைத்தமை கருதி இவ்வாறு கூறலாயினன் என்றவாறு.

## 178

எண்டடுக் காத புகழ்ராச ராசனை யேத்துகவி
கொண்டடுத் தார்போற் புதையா துதவுங் குவிதனத்தீர்
விண்டடுத் தாலன்ன கூந்தலும் மையல் விளைக்கு மும்மைக்
கண்டடுத் தான்மையல் மெய்யே மிகுமிது காட்டலென்னே.

எண் தடுக்காத புகழ் - எண்ணுக்கு அடங்காத பெரும் புகழ்; ஏத்து கவி - புகழ்ப்பாமாலை; இராசராசனிடம் கவிகொண்டு அடுத்தார் தாம் பெற்ற திரளான செல்வங்களைப் பிறருக்கும் இல்லை என்னாது வழங்குவார். புதையாது உதவும் குவி தனத்தீர் - ஆடையால் மறையாது வெளிப்படுத்தியுள்ள குவிந்த முலையினையுடையவரே. விண்டு - மேகம்; விண்டு அடுந்தால் அன்ன கூந்தல் - மேகம் நெருங்கிவந்தாற்போலக் காணும் கரிய கூந்தல்; உம்மைக் கண்டு அடுத்தால் - உம்மைக்கண்டு நெருங்கி வந்தால்; மையல் மெய்யே மிகும் - காமமயக்கம் உண்மையிலேயே மிகுதியாகும். உம் மைக் கண் தடுத்தால் - உம்முடைய மை போன்ற கரிய கண்களை மறைத்தால். இது காட்டல் என்னே - இம் முலைகளை வெளிப்படுத்திக் காட்டுதலால் பயன் என்ன என்பதாம்.

## 179

நந்தெதி ரேதன் கணவ னிருத்தலை நாட்டமுற்றும்
பொந்தெதி ரேசூற் றவளை யுழக்கும் புதுவயலான்
செந்தெதிர் கூர்முல்லைச் சீராச ராசன் செழுங்கிரியீர்
வந்தெதி ரேதிட்டி வைகை யுள்ளீர்வல் வழக்கிடவே.

நந்து - நத்தை; நாட்டமுற்றும் - கண்டதும்; பொந்து - வளை; சூல் தவளை - சூல்கொண்ட தவளை; தவளை தன் கணவன் நத்தையின் எதிரில் வந்து இருத்தலைக் கண்டதும் ஊடல்கொண்டு வளையின் முன்னே சினந்துடன் சேற்றைக் கலக்கும் புது வயல்களை

யுடையவன்; செந்து - வண்டு; எதிர்கூர்முல்லை - எதிரேற்று மொய்க்கும் முல்லை மலர்; இராசராசனுக்குரிய அடையாள மாலை; எதிரே வந்து வல்வழக்கிட — எதிரில் வந்து வீண் வழக்கிடும்படி; திட்டி வைகை யுள்ளீர் - திட்டி வைதலை மேற்கொண்டுள்ளீர்; திட்டி வை கை உள்ளீர்- திட்டி - திருஷ்டி, கண்; உம் கண்ணில் கையை வைத்து மறைத்துள்ளீர்; வல் - சூது கருவி போன்ற முலை; வழக்கிட - ஒன்றோடு ஒன்று மோதுமாறு விடுத்துள்ளீர் என்பதாம்.

## 180

வடுகுசவ் வீரமுந் தேரிசை யோன்றமிழ் வண்புலவோர்க்
கிடுகுசன் பின்னன்ன சீராச ராச னெழில்வரையீர்
கடுகுசந் தைக்கு முறைதந்துஞ் சத்திரங் காட்டலின்றேல்
முடுகுசந் தாபந் தவிரப் பருகு முறையிலையே.

வடுகு - தெலுங்கு; சவ்வீரம் - சிந்து நதியின் முகத்துவாரத்துக்கருகிலுள்ள நாடு; சௌராஷ்டிரம்; சௌராஷ்டிர மொழி. குசன் - செவ்வாய்; குசன்பின் - புதன், மால்; கடுகு சந்தைக்கு - விரைந்து சந்தை சொல்லுவதற்கு; முறை தந்து - முறை ஏற்படுத்தித் தந்து; சத்திரம் - தங்குவதற்கான அன்னசத்திரம்; முடுகு - மிகஅதிகமான, மிகுதியான. சந்தாபம் - சுடுகை, மனத்துன்பம்; பருகுமுறை - நீர் குடிக்கும் வகை. கடு குசம் தைக்கும் முறை தந்து - வலிய முலைகள் பொருந்தும் வகைசெய்து; குசம் - முலை; சத்திரம் - வாள், கண். சத்திரம் காட்டலின்றேல் - வாள் போன்ற கண்களைக் காட்டாவிடில்; முடுகு சந்தாபம் தவிரப் பருகும் முறை இல்லை - விரைந்தெழுகிற காமவேதனை நீங்க அனுபவிக்கும் வகையில்லை.

## 181

அல்லையுண் டென்றுசொல் லாமலொளிசெய் தரண்மனைபொற்
கல்லையென் றும்பொரச் செய்ராச ராசன் கனகிரியீர்
இல்லையுண் டென்னும் வழக்கிடை யுள்ளமைக் கேற்பவரு
வல்வழக் கிட்டுநின் றீர்தூசு நீத்த மதத்தவரே.

அல் - இரவு; அல்லை ... அரண்மனை - இரவு உண்டு என்று சொல்லாமல் எப்பொழுதும் ஒளிசெய்து விளங்கும் அரண்மனை; பொற்கல் - பொன்மயமான மேருமலை; பொர - ஒப்ப; கனகிரி - பெருமை பெற்ற மலை; மேகம் தவழும் மலை; தூசு நீத்தமதத்தவர் - ஆடையில்லாது

துறவு நிலையில் வாழும் திகம்பரசமண மதத்தினர்; இல்லை, உண்டு என்பது அவர்தம் சமய வழக்கு; அதனை அஸ்தி, நாஸ்தி என்பர். இல்லை உண்டு என்னும் தம் மதக் கொள்கைக்கு ஏற்பப் பெருவழக்கிட்டு நின்றீர் என்பது வெளிப்படை, இல்லை உண்டு என்னும் வழக்கு இடை உள்ளமை - இல்லையோ உண்டோ என்னும்படி நுண்மையான இடை பெற்றுள்ளமை; ஏற்ப வரு வல் வழக்கிட்டு நின்றீர் - யான் ஏற்கும்படி காணும் வல்லுப் போன்ற முலைகளை வழங்கி நிற்கின்றீர்; தூசு நீத்த மதத்தவர் - ஆடை குலைய நிற்கும் கொள்கையுடையீர். மதம் - கொள்கை, சமயம்.

### 182

தாளாற் படிகொண்ட கொண்ட லுலாவரத் தண்புல்லையின்
மாளாத தேர்தந்த சீராச ராசன் மலரியன்னீர்
வேளாண்மை யாற்ற முலையேற்ற முன்னிய வித்தகத்தார்
வாளா மிகுமாறு காலடைப் பார்கொலிவ் வையகத்தே.

தாளால் படிகொண்ட கொண்டல் - தம் திருவடியால் பூமியை அளந்துகொண்ட மேகவண்ணனான திருமால்; உலாவர - வீதியில் பவனிவர; புல்லை - திருப்புல்லாணி; மாளாததேர் - அழியாத பெருந்தேர்; மலரி - சேதுநாட்டகத்துள்ளதோர் ஊர்; வேளாண்மையால் - பயிர்த்தொழிலால், உபகாரம் செய்தற்பொருட்டாக; உலை ஏற்ற முன்னிய வித்தகத்தார் - அடுப்பில் உலையை ஏற்ற முன்னிய வித்தகத்தார் - அடுப்பில் உலையை ஏற்ற முற்பட்ட திறமையாளர்; வாளா ஆறு கால் அடைப்பார்கொல் - வீணாக நீர்வரும் ஆற்றையும் கால்வாயையும் அடைப்பார்களோ; வேள் ஆண்மையால் தம் முலை ஏற்ற முன்னிய வித்தகத்தார் - மன்மன்மதனின் ஆண்மைச் செயல் காரணமாகத் தம் முலையை வெளிப்படுத்தக் கருதிய அறிவுடையார்; வாளா மிகும் ஆறு கால் அடைப்பார்கொல் - வாள்போன்று ஒளிவிடும் ஆறுகாலுடை வண்டாகிய கண்ணை மறைப்பார்களோ.

### 183

தேசின்மை பெற்ற சிறியோர் குழுவைச் சினந்துதன்கண்
ஆசின்மை கண்டவன் சீராச ராச னணிவரைவாய்த்
தூசின்மை யாலிடை நூலின்மை யாற்கொலோ துன்னல்விட்டு
மாசின்மை யாகிய தையனல் வேலை மறுத்ததுவே.

தேசு - ஒளி, அறிவு; தேசின்மை - அறியாமை; சிறியோர் குழு - கீழ்மக்கள் கூட்டம்; ஆசின்மை கண்டவன் - குற்றமற்ற தன்மை பொருந்தியவன்; தூசின்மையால் இடை நூலின்மையால் - துணி இல்லாமையாலா, இடையிட்டுத் தைப்பதற்கு நூல் இல்லாமையாலா; துன்னல்விட்டு - தைத்தல் தொழிலை விடுத்து; மாசின்மையாகிய தையல் நல் வேலை மறுத்தது - குற்றமற்ற தையல் - தொழிலைச் செய்யா தொழிந்தது. தூசு இன்மையால் - ஆடை இன்மையால்; இடைநூல் இன்மையால் - நூல்போன்ற இடை இல்லாமையால்; துன்னல் விட்டு - நெருக்கமாவுள்ள இணை முலைகளை விடுத்து. துன்னல் - நெருக்கம்; இங்கே நெருங்கியமைந்த முலைகள்; மாசின்மை ஆகிய தையல் - குற்ற மற்ற பெண்ணே, விளி; நல் வேலை மறுத்தது - நல்ல வேலைப்போன்ற கண்ணை மூடி மறைத்தது.

## 184

தேவைத் துறையைத் தநுக்கோடி யைப்புல்லைத் தெண்டுறையைப்
பூவைத்த தேவி நகர்த்துறை யைப்பெரும் புண்ணியநீ
ராவைத்த சேது பதிராச ராச னசலத்தினீர்
கோவைக் கைக்கொண்டு கொழுநனை விட்ட கொடியவரே.

தேவைத்துறை - இராமேசுவரதீர்த்தம்; தநுக்கோடி - தநுக்கோடி ஒரு தீர்த்தத்துறை; புல்லை - திருப்புல்லாணி; தெண்டுறை - தெளிந்த நீருள்ள தீர்த்தத்துறை; பூவைத்த தேவிநகர் - பூனவத் தலையில் சூடிய தேவி வீற்றிருக்கும் தேவிநகர்; தேவிபட்டணம். தீர்த்தத்துறை; புண்ணிய நீர் - தீர்த்தம்; அசலத்தினீர் — மலையினுள்ளீர்; கோவை - அரசனை; கொழுநன் - கணவன், கொடியவர் - கொடுமை வாய்ந்தவர்; 'அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதைபோல' என்பது ஒரு பழமொழி. கோ - கண்; கோவைக் கைக்கொண்டு - கண்ணைக் கையால் பற்றிக் கொண்டு; கொழு நனைவிட்ட - கொழுவிய தாமரை அரும்புபோன்ற முலைகளை வெளிப்படுத்திய; கொடியவரே - கொடி போன்றவரே.

## 185

கறைபட்ட வாண்மற வோருக் கதிபதி கற்றவர்தாம்
குறைபட்டி லாது புரப்பவன் காவிக் கொடியுடையோன்
தறைவிட்டி லாப்புகழ்ச் சீராச ராசன் றமிழ்வரையாய்
பொறைவிட்ட காரணத் தாற்கறை பூண்கை பொருந்தியதே.

கறைபட்ட வாள் - இரத்தக்கறை படிந்தவாள்; அதிபதி - தலைவன்; குறை விட்டிலாது புரப்பவன் - எவ்விதக் குறைபாடும் நேராமல் காப்பவன்; காவிக் கொடி - கவிக்கொடி, நீட்டல் விகாரம்; அனுமக்கொடி. தறைவிட்டிலாப்புகழ் - பூமியில் நீங்காது நிலைபெற்றிருக்கின்ற கீர்த்தி; பொறை - பொறுமை; கறை - பழி. பொறுமையை விட்ட காரணத்தினால் பழி பூணும் நிலை வந்துற்றது என்பதாம். பொறை - சிறுகுன்று; மலை, முலை. கறை - நஞ்சு; நஞ்சின் தன்மை படைத்த கண். பூண் கைபொருந்தியது - ஆபரணம் அணிந்த கை வந்து சேர்ந்தது; அதாவது கண்களை மறைத்தது.

## 186

கருவார் பணில வயற்செம்பி நாடன் கவித்துவசன்
மருவா ரிளஞ்சிங்கஞ் சீராச ராசன் வரையினில்வேள்
குருவாய் வருவீர் திருக்கோவை மட்டுங்கைக் கொண்டிருந்தீர்
திருவாச கந்தப் பொருப்படு மென்னினென் செய்வதுவே.

கரு ஆர் பணிலம் - கருப்பம் கொண்ட சங்கு: கவித்துவசன் - அனுமக்கொடி யுடையவன்; கவி - குரங்கு, அனுமன்; மருவார் - பகைவர்: இளஞ்சிங்கம் - பகைவராகிய யானைக் கூட்டத்தைத் தாக்கும் இளஞ்சிங்கம் போல்வான். வேள் குருவாய் வருவீர் - விரும்பத்தக்க ஆசானாக வருகின்றீர்; திருக்கோவை, திருவாசகம் என்னும் இரண்டும் மாணிக்கவாசகர் அருளிய தெய்வப் பனுவல்கள். தப்ப ஒருப்படுமென்னில் - தவிர்க்க எண்ணுமானால். திருக்கோவை நூலை மட்டும் கொண்டு திருவாசகத்தைக் கொள்ளாமை குருவாய் வருபவருக்கு அழகன்று என்பதாம். வேள் குருவாய் வருவீர் - மன்மதனுக்கு ஆசானாகத் தோற்றமளிக்கின்றீர்; திருக்கோவை மட்டும் - அழகிய கண்ணை மட்டும்; கோ - கண்; கைக்கொண்டிருந்தீர் - கையால் பற்றியிருந்தீர்; திரு வாச கந்தப் பொருப்பு அடும் - அழகிய மணம் பொருந்திய கந்தமாதனமலை வருத்தும்; இங்கே மலை என்றது முலைகளை. கந்தம் வாசனைக்குழம்பு என்று கொண்டு மணமுள்ள சந்தனம் முதலிய குழம்பு பூசப்பெற்ற முலை என்றும் கூறலாம்.

## 187

வந்துகை கூப்பிய வேந்தரைப் பக்கத்து வைத்தளிப்போன்
கந்துகஞ் செண்டு வெளிசெப் புகவைக்குக் காவலவன்
முந்துகை வைத்த கொடைராச ராசன் முதுகிரியீர்
சிந்துகை யுள்ள வருக்கெத் தனமுஞ் சிறப்பதின்றே.

கைகூப்பிய - கைகுவித்து வணங்கிய; கந்துகம் - குதிரை; செண்டு வெளி — குதிரை ஏறிச் செலுத்தும் வெளியிடம்; வையாளி வீதி; முகவை - இராமநாதபுரம்; முந்து கை வைத்த கொடை ராசராசன் - முந்துகொடைகை வைத்த ராசராசன் என்க. சிந்துகையுள்ளவருக்கு - பொருளை வீணாக ஊதாரித்தனமாய் வாரி இறைக்கும் இயல்புடையவருக்கு; எத்தனமும் சிறப்பதின்று - எவ்வகைச் செல்வமும் சிறந்து விளங்குவதில்லை. சிந்து - கடல், கண்; எத்தனமும் சிறப்பதின்றே - எவ்வகையான முலை வெளிப்பாடும் சிறப்பைத் தாராது.

## 188

சேவ லுடைய கொடிவே ளடிக்கன்பு செய்துபுவி
காவல் புரிகின்ற சீராச ராசன் கனவரைவாய்
ஏவ லுடையவர் நீரே முதலிணை யின்றியிங்கே
ஆவ லுடன்கடை காட்டிநின் றீரி . . ததிசயமே.

வேள் - முருகன்; புவி காவல் புரிதல் - நாடாளுதல்; முதலினை இன்றி - மூல முதல் இல்லால்; ஆவல் - விருப்பம்; கடை காட்டி நின்றீர் - கடைப் பகுதியைமட்டும் தெரியச் செய்தீர்; முதல் இல்லாமல் கடை மட்டும் காட்டியது விநோதமாம்; எனவே, இஃது அதிசயம் என்றான். முதலாகிய மூலதனம் இல்லாமலே பொருளிருக்கும் கடையைக் காட்டி என்னபயன் என்றுமாம். ஏவல் - ஏயும் வல்லும், அம்பும் சூதும்; கண்ணும் முலையும். ஏ முதல்; வல் கடை; முதலினை இன்றி - முதலில் உள்ள கண் இல்லாமல் என்றவாறு. கடை காட்டி நின்றீர் - வல்லுப் போன்ற முலைகளை வெளிப்படுத்தி நின்றீர்.

## 189

மையாழி சூழ்புவி யிற்கொடை யாற்கலை வன்மையினுற்
செய்யா ழிசைப்புல மைத்திறத் தாலிணை செப்பரியோன்
மெய்யாழி மாலைப் புகழ்ராச ராசன் மிளிர்வரையாய்
கையாழி வைத்தனை தாணுன்வக் காட்டலென் காரணமே.

மை ஆழி சூழ் புவி - கருநிறக் கடல் சூழ்ந்த பூமி; யாழிசைப் புலமை - யாழ் மீட்டும் திறம்; இராசராசனின் கொடை, கலைவன்மை, இசைப் புலமை ஆகியவை மிக உயர்ந்தவை. இணை செப்ப அரியோன் - ஒப்புக் கூற இயலாதபடி உயர்வு பெற்றவன்; இணை - ஒப்பு; மெய்

ஆழி மால் - கையில் சக்கராயுதம் தாங்கிய திருமால்; மிளிர்தல் - விளங்கு தல். கையாழி ... காரணம் - கையில் சக்கரம் வைத்துள்ளாய்; அவ்வா றிருக்கவும் சிவனுருவைக் காட்டுவது எந்தக் காரணத்தால் என்பது வெளிப்படை. தாணு - சிவன், மலை; கை ஆழி வைத்தனை - கையிடத்தே கடல் போன்ற கண்ணை மறைத்து வைத்துள்ளாய்; தாணு வைக் காட்டல் - மலைபோன்ற முலைகளை வெளிப்படுத்தல்.

## 190

மைம்மான மிக்குப் பொழிநிதி யாற்றமிழ் வண்புலவோர்
சொம்மா னவனெனுஞ் சீராச ராசன் றொடரியின்வாய்க்
கைம்மா னடக்கவல் லீர்பிற ரெய்திடர் காண்டலின்றிக்
கைம்மா னடக்கா விடுதல்செய் தீர்பெருங் கட்டவிழ்த்தே.

மைம்மான - மேகத்தை ஒக்க; சொம் - சொத்து; சொம்மானவன் - சொத்தாக இருப்பவன்; தொடரி - சேது நாட்டகத்தோர் ஊர்; கைம்மான் அடக்கவல்லீர் - கைம்மானாகிய யானையை அடக்கும் வல்லமை படைத்த நீர்; எய்து இடர் காண்டல் இன்றி - அடையும் துன்பத்தைக் கருதாமல்; கைம்மான் அடக்காவிடுதல் செய்தீர் - அந்த யானையை அடக்காமல் விட்டுள்ளீர். கைம் மான் அடக்கவல்லீர் - கையிடமாக மான் கண் போன்ற கண்ணை மறைக்க வல்லவராயுள்ளீர்; கைம்மான் கட்டு அவிழ்த்து அடக்கா விடுதல் - யானைத் தந்தம் போன்ற முலைகளை அடக்காமல் கச்சுக் கட்டிலிருந்து வெளிப்படுத்தியுள்ளீர்.

## 191

புற்றலை யானின மேய்ந்துநன் மரநிழற் போந்துதுயில்
நெற்றலை நீள்செம்பிச் சீராச ராச னெடுங்கிரியீர்
எற்றலைத் தந்த முழுவலிக் கின்னஞ்சுக் கைநல்கினே
முற்றவுந் தீர்ந்த துயருடையே னின்ப மூழ்குவனே.

புற்றலை - புல் வளர்ந்துள்ள இடங்களில்; ஆனினம் - பசுக்கூட்டம்; நெல் தலை நீள் - நெல்லின் கதிர்கள் நீண்டுள்ள; என் தலைத்தந்த முழுவலிக்கு - என்னுடைய தலையில் தோன்றிய பெருவலிக்கு; சுக்கை நல்கினே - சுக்கைத் தந்தால்; முற்றவும் - முழுவதும்; தீர்ந்த துயருடையேன் - துன்பம் தீர்ந்தவன் ஆவேன்; இன்பம் மூழ்குவன் - இன்பத்தில் திளைப்பேன். எற்று அலைத்தந்த முழுவலிக்கு - தாக்கி

வருந்துதலைச் செய்த முழுவலிக்கு; முழுவலி என்றது பெருவலிமை யுடைய முலை என்றபடியாம். இன் நஞ்சுக் கைநல்கினே - இனிய நஞ்சுபோன்ற கண்ணைக் கைமறைப்பிலிருந்து விடுவித்துத் தருமாயின்.

## 192

**தேவைநன் மங்கையெயொ டாடானை புல்லை திருச்சுழியல்**
**யாவையுங் காக்கின்ற சீராச ராச னெழில்வரைவாய்க்**
**காவையும் வெல்குழ லீர்பெருங் காமக கடற்பட்டுநீர்**
**கோவையங் கைப்பற்ற லாமோ முழுவலிக் கொம்புவிட்டே.**

தேவை - இராமேச்சுரம்; மங்கை - திருவுத்தரகோசமங்கை; ஆடானை - திருவாடானை; புல்லை - திருப்புல்லாணி; திருச்சுழியல் - ஒரு சிவதலம். கா - சோலை; காவையும் வெல்குழல் - சோலையின் பசுமை நிறத்தையும் வெல்லும்படியான கரிய கூந்தல்; காமக் கடல் - யாவரும் விரும்பும் படியான கடல், காமமாகிய கடல். முழுவலிக் கொம்பு விட்டு கோவை அங்கைப் பற்றலாமோ — கடலில் விழுந்தோர் நன்கு வளர்ந்த கொம்பைப்பற்றி நீந்தாது கோவைக் கொடியைக் கைப்பற்ற லாகுமா. முழுவலிக்கொம்பு - நன்கு வலிமை பெற்ற யானைத் தந்தம் போன்ற முலை; கொம்புவிட்டு - முலைகளை வெளிப்படுத்தி; கோவை அங்கைப் பற்றலாகுமோ - கண்ணை உள்ளங்கையினால் பிடிக்கலாமோ? அதாவது கண்களைக் கையால் மறைக்கலாமா என்றபடி.

## 193

**திருந்திருக் கைச்சொலு மந்தணர் வாழ்வு சிறந்துகலை**
**மருந்திருக் கைக்கென வூர்முற்று மீத்த வளககுடியிற்**
**றருந்திருக் கைப்புகழ்ச் சீராச ராசன் றமிழகத்துப்**
**பொருந்திருக் கைநல் கிலாய் மலைமீது புகவிடுத்தே.**

இருக்கு - இருக்கு வேதம்; கலை மருந்திருக்கை - கலையாகிய அமுதத்தை அருந்தி வாழ்தல்; மருந்து - அமுதம்; ஈத்த - கொடுத்த; வளக்குடி - செல்வக்குடி; தரும் திருக்கைப் புகழ் - கொடுக்கின்ற அழகிய கையின் புகழ்; தமிழகத்து - தமிழ் மலையில்; மலைமீது புகவிடுத்துப் பொருந்து இருக்கை நல்கிலாய் - மலையிலே ஏறும்படி செய்து உதவி யாக உம்மிடமுள்ள இருகைகளையும் தந்தீரில்லை. திருக்கு - கண்; பொரும் திருக்கை நல்கிலாய் - போரிடும் கண்களைக் காட்டினாயில்லை. மலைமீது புகவிடுத்து - மலை என்றது முலைகளை.

## 194

முல்லை யளிக்குந் தொடைக்குஞ் சயமான் முலைக்குநற்றேட்
கல்லை யளிக்கின்ற சீராச ராசன் கனகிரியீர்
வல்லை யளிக்க வெனவிழை வேற்கிரு வல்லையளித்
தொல்லை யொளித்துவைத் தேமாற்றி னீரஃ தொழுக்கமன்றே.

தொடை - மாலை; சயமான் - வெற்றி மகள்; நல் தோள் கல் - நல்ல தோளாகிய மலை; வல் - சூதாடு கருவி; இரு வல் என்றது சூதாடு கருவிபோன்ற இரு முலைகளை; ஒல்லை - விரைவு; ஒளித்துவைத்து - மறைத்து; ஒல் ஐ - ஒளி படைத்த வேல்போன்ற கண்; ஒன்றை அளிக்க முன்வந்தவர் அதனை மறைத்து வைத்து ஏமாற்றுதல் முறையன்று என்பதாம்; ஒழுக்கம் — நல்ல நடத்தை, முறைப்பட்ட செயல்.

## 195

புரவா லளித்துத் தன்னொடு கலிவாய்ப் புகாதபடி
கரவா தளித்த கொடைப்பாற் கரன்றவக் காதலனெற்
றரவா தரஞ்செயும் சீராச ராசன் தமிழ்வரைவாய்க்
கரவா ரணந்தந் தனர்தந்தில ரென்ன காரணமே.

புரவு - காக்கும் திறம்; கொடை. கலிவாய் - கலியினிடமாக, துன்பத்திடமாக; கலி - துன்பம், வறுமை; கரவாது - இல்லையென்று மறைக்காது; காதலன் - புதல்வன்; எற்றரா ஆதரம் செய்யும் - எனக்கு எல்லாம் தர அன்பு செய்யும்; கரவாரணம் - கையையுடைய யானை; யானைத் தந்தத்திற்கு ஒப்பாம் முலை; கரவு ஆரணம் - வஞ்சம் நிறைந்த கண், கண்ணைத் தந்திலர் என்க. தந்திலர் என்பதற்கு நூல்போன்ற இடையினை இலாதவர் என்றும் ஆம்; தந்து - நூல்.

## 196

கடுவின்றி யின்னமு தந்தரும் பூவையர் காமன்புவி
கெடுவின்றி யாள்கின்ற சீராச ராசன் கிரியிடத்து
நடுவின்றி நின்றவர் நீராவிர் மெல்ல நயந்தவெற்கு
வடுவின்றி மாவின்கொம் பீந்தத னாலென் வரும்பயனே.

கடு இன்றி - கடுமையான பார்வை சிறிதும் இன்றி; முகமலர்ச்சியுடன். கடு இன்றி - நஞ்சு கலவாமல் என்றும் ஆம்; பூவையர் -

பெண்கள்; காமன் - மன்மதன்; மன்மதன் போன்ற அழகன். புவி - பூமி, உலகம்; கெடு இன்றி - தீங்கு எதுவும் சேராமல்; கிரி - மலை; நடு இன்றி நின்றவர் - இடையில்லாது நின்றவர்: நுண்ணிய இடையுடையவர் என்பதாம். நயந்த - விரும்பிய; மாவடு இல்லாமல் மாவின் வெறுங்கொம்பைத் தந்ததனால் யாது பயன் என்பது வெளிப்படை. வடு - மாவடு போன்ற கண்; மாவின் கொம்பு - யானைத் தந்தம் போன்ற முலைகள்.

**197**

கிட்டிக்கை கூப்பிய வேன்மற வோரைக் கெழுமியன்பிற்
கட்டிக்கை நல்கிய சேதுக் கதிபதி கார்வளத்தால்
நெட்டிக்கை யார்செம்பிச் சீராச ராச னெடுங்கிரியார்
திட்டிக்கை யுள்ளவர் நால்வாயுங் காட்டுதல் செய்குவரே.

கிட்டி - நெருங்கி; கைகூப்பிய - கைகுவித்து வணங்கிய; கெழுமி - நெருங்கி; அன்பிற் கட்டிக் கை நல்கிய - அன்பினாலே கட்டித் தழுவி அவர்களுக்குத் தம் கை கொடுத்துப் பாராட்டிய; கை நல்குதல் - கை குலுக்கிப் பாராட்டுதல்; கையில் செல்வம் கொடுத்த என்றும் ஆம். கார் - மழை; நெட்டு இக்கை ஆர் செம்பி - நீண்ட கரும்புகள் வளர்ந்துள்ள செம்பி நாடு; திட்டிக்கையுள்ளவர் - படைக்கும் ஆற்றல் படைத்தவர்; திட்டிக்கை - சிருட்டிக்கை; நால்வாயும் காட்டுதல் - நான்கு வாயைக் கூடப் படைத்துக்காட்டுதல்; திட்டி - கண்; திட்டிக் கையுள்ளவர் - கண்ணைக் கையிடமாகக் கொண்டு மறைத்தவர்; நால்வாய் - தொங்கும் வாயையுடைய யானை; இங்கே யானைத் தந்தம் போன்ற முலைகளைச் சுட்டியவாறாம்.

**198**

மீனங்கைக் கொண்ட கொடிவேந்தர் போன்று விளங்குமன்ன
தானங்கைக் கொண்டவன் சீராச ராசன் றடவரைவாய்க்
கானங்கைக் கொண்ட குழலீ ருடுக்கை களைந்துநின்றுர்
மானங்கைக் கொண்டவ ராதலுண் டோவவ மானமற்றே.

மீனம் கைக்கொண்ட கொடி வேந்தர் - மீனக்கொடியுடைய பாண்டியர்; அன்னதானம் - சோறு நல்குகை; கானம் - கருமை, மேகம்; கானம் கைக்கொண்ட குழலீர் - மேகம் போன்ற கருநிறம் பெற்ற கூந்தலையுடையீர்; உடுக்கை - ஆடை; ஆடையில்லாது நின்றவர்

மானமுடையவராக மதிக்கப்படுவரோ என்பது வெளிப்படை; மானம் - பெருமை, மதிப்பு: அவமானம் - இழிவு, அவமதிப்பு. மான் அங்கைக் கொண்டார் - மான்கண்போன்ற கண்ணை அழகிய கையில் கொண்டவர்.

## 199

கலையினைக் காட்டிய பேரறி வாளர்தங் கண்ணையொத்து
நிலையினைக் காட்டிய கோன்ரகு நாத னிகர்த்துவென்றிச்
சிலையினைக் காட்டிய சீராச ராசன் றினைக்குளத்தாய்
மலையினைக் காட்டிவண் டோகை மறைத்தனை மாதரசே.

கலை - கலை வல்லமை; நிலையினைக் காட்டிய கோன் - நிலைத்து வாழ வழிசெய்த அரசன்; ரகுநாதன் - இராமன்; நிகர்த்து - ஒத்து; வென்றிச் சிலையினைக் காட்டிய - வெற்றி வில்லின் திறத்தை வெளிப் படுத்திய; தினைக்குளத்தாய் - தினைப்புனத்தில் உள்ளவளே; மலை யினைக் காட்டி வண்தோகை மறைத்தனை - மலையைக் காட்டி அதில் உள்ள வளப்பமான தோகையுடைய மயிலை மறைத்து விட்டாய்; மலை யினைக் காட்டி - முலைகளை வெளிப்படுத்தி; வண்டோ கை மறைத் தனை - வண்டுக்கு ஒப்பாம் கண்களைக் கையால் மறைத்துள்ளாய்.

## 200

தூமாண் புடைய புலவோ ருடுவெனச் சூழவைக்குச்
சீமான் மதியெனுஞ் சீராச ராசமன் றேவையன்றாய்
காமா னலமிகு கும்ப முனிதனைக் கைவிட்டபின்
கோமான் பொதிகையைக் கொண்டென் பயன்மலர்க் கோமளமே.

தூமாண்பு - தூய நல்ல பெருமை; உடு - நட்சத்திரம்; சீமான் - செல்வ முள்ளவன்; மதி - பூரணச் சந்திரன்; அரசவையில் புலவோர் நட்சத்திரங்கள் போலச் சூழ்ந்திருக்க இராசராசன் அவர் நடுவே முழுமதி போல ஒளி வீசித் திகழ்வான் என்பதாம். தேவை - இராமேசுவரம்; கும்ப முனி - அகத்தியர், பொதியமலையை இருப்பிடமாக உடையவர்; காம அனலம் மிகு கும்பமுனிதனைக் கைவிட்டபின் - விரும்பும் அனலமாகிய வேள்வி நெருப்பை மிகவளர்க்கும் அகத்தியரைக் கைவிட்டபின்; கோமான் பொதிகை - பசுவும் மான்களும் நிறைந்த பொதிகைமலை; காமஅனலம் மிகு கும்பமுனி - காமமாகிய நெருப்பை மிகச் செய்யும் குடம் போன்ற முலைகள்; கோமான் பொதி கையை - கண்ணாகிய மானை மூடிய கை. கோமளம் - அழகிய பெண்.

## 201

கொன்முன்னு வேற்படை வீரத் தலைமைக் குடியிலுள்ள
தன்முன் னவன்ரகு நாத னிவனென்று சாற்றுமிசைச்
சொன்முன்ன தாக வணிராச ராசன் றொடர்வரையீர்
என்முன் புகுடி மறைத்தீர் பிறப்பிட மேதெரித்தே.

கொன்முன்னு வேற்படை - அச்சத்தைத் தோற்றுவிக்கும் வேலா யுதம்; வீரத் தலைமைக்குடி - வீரத்தால் சிறப்புற்ற மறவர் குலம்; முன்னவன் - முன்னோன்; ரகுநாதன் - இரகுநாத சேதுபதி; அமிர்த கவிராயரால் ஒருதுறைக் கோவை பெற்ற சிறப்புடையவர். இசைச் சொல் - புகழ்மொழி; முன்னதாக - முற்பட; குடி - பிறந்த குடும்பம்; என் முன்பு உம் பிறப்பிடத்தைத் தெரிவித்துப் பிறந்த குடியைச் சொல்லாது மறைத்துவிட்டீர் என்பது வெளிப்படை. என்முன் புகுடி மறைத்தீர். புகுடி-புருவம்; புருவத்தோடு கூடிய கண்; பிறப்பிடம்- அம் மகளிர் பிறப்பிடமாகிய குறிஞ்சி, மலை; மலை என்றது இங்கே முலையினை; தெரித்து - வெளிப்படுத்தி.

## 202

இருக்கைத் தெரிகின்ற வேதியர் காவலன் ஏற்றிகல்வோர்
தருக்கைத் தவிர்க்கின்ற சீராச ராசமன் றாள்வரைவாய்ப்
பெருக்கத் தெரியு மிருமைவல் லார்வம்பு பேணல்விட்டும்
திருக்கைத் திருக்கை யுடையரென் றாவது சீர்த்ததன்றே.

இருக்கு - இருக்கு வேதம்; வேதியர் - வேதம் வல்ல அந்தணர்; ஏற்று இகல்வோர் - எதிர்ந்து வந்து போரிடுவோர்; தருக்கு - செருக்கு; தாள் வரை - மலையடிவாரம்; பெருக்கத் தெரியும் இருமை வல்லார் - விளக்கமாகத் தெரியும் அறிவுபடைத்த இருபொருள் உணரவல்லார்; வம்பு பேணல்விட்டு - புதுமையைக் கொள்ளுதல் விடுத்து; திருக்கைத் திருக்கையுடையார் என்று ஆவது - மாறுபாட்டையே காணும் இயல்பின ராதல்; சீர்த்தது - சிறப்புடையது. இருமை - இருபொருள்; பெருமை; வம்பு - புதுமை, கச்சு; திருக்கு - மாறுபாடு, கண். பெருக்கத் தோன்றும் இருமை வல்லார் - பெருத்துத் தோன்றும் இருவல் போன்ற முலையினர்; வம்பு பேணல் விட்டு - கச்சினால் கட்டிப் பாதுகாத்தலை விடுத்து; திருக்கைத் திருக் கையுடையராதல் - கண்ணை அழகிய கையிடத்தே கொண்டிருப்பது; சீர்த்தது அன்று - முறையாகாது.

203

படையை யிலாதவ ராகி யிகன்றவர் பாறவெல்வோன்
இடையை யிலாத மடவார் மடலூ ரெழிலனெற்குத்
தடையை யிலாதவன் சீராச ராசன் றமிழ்வரையாய்
உடையை யிலாதவ ரேமுன் புருவ மொளிப்பவரே.

படையை இலாதவராகி - படைத்துணையை வேண்டாதவராய்; இகன்றவர் - போரிட்டவர்; பாற - தோற்றோடி மறையும்படி; மடல் ஊர் எழிலன் - மடலேறும்படியான அழகன்; எற்கு - எனக்கு; தடையை இலாதவன் - தடை எதுவும் விதியாதவன்; உடையை இலாதவர் ஆடை இல்லாதவர்; முன்பு உருவம் ஒளிப்பவர் - முற்படத் தம் உருவத்தை மறைத்துக்கொள்வர்; முன் புருவம் ஒளிப்பவர் - என் முன்னே புருவத்தோடு கூடிய கண்ணை மறைப்பவர்.

204

முந்தமிழ் தாமெனப் பாவாணர் சூட்டு முழுமதுரச்
செந்தமிழ் மாலையன் சீராச ராசன் றிகிரியிலே
பந்த மிலாத பெரிய வரைவிட்டுப் பாவைநல்லாய்
அந்த மிலாவண் டரைக்கைக் கொளலென் னழகுடைத்தே.

முந்து - முற்பட; அமிழ்து - அமுதம்; முழுமதுரச் செந்தமிழ்மாலையன் - முற்றும் இனிமை படைத்த செந்தமிழ்ப்பாமாலை கொண்டவன்; பந்தம் - பற்றி, கட்டு; பாவை நல்லாய் - விளி. அந்தம் - அழகு; வண்டர் - சிறியோர், கீழோர்; பற்று இல்லாத பெரியோரைச் சாராது விடுத்து அழகில்லாத சிறியோரை ஏற்றுக்கொள்வது எத்தகைய அழகைத் தரும் என்பது வெளிப்படை. பந்தம் - கச்சுக்கட்டு; பெரிய வரை - பெரிய மலை; முலை. முலைகளைக் கச்சினால் கட்டாது விடுத்து என்பதாம். அந்தம் இலா - குருட்டுத் தன்மை இல்லாத; வண்டரை - வண்டுக்கு ஒப்பாம் கண்களை; கைக்கொள்ளல் - கையால் மறைத்தல்.

205

செருத்தகற் குடஞ்சுட்டி ஞனிறைந் தான்றினஞ் சேர்விருந்தை
யருத்தற் குவந்தவன் றன்னறி வார்மனத் தாலுலகைத்
திருத்தற்குக் கைக்கொண்ட சீராச ராசன் செழுங்கிரியீர்
ஒருத்தற்குக் கைகொடுக் காதா ருறுகண்ணை யுள்ளவரே.

செருத்தற்குடஞ்சுட்டு - மடியினால் குடம்பால் சொரியும் பசு; ஆனிரை - பசுக்கூட்டம்; விருந்து - புதியராய் வந்தோர்; அருந்தற்கு உவந்தவன் - உணவருந்தச் செய்து பேணுவதற்கு மகிழ்ந்தவன்; தன் அறிவார் மனத்தால் - தன் நிலையை உணர்ந்த ஞானியர் உளப்பாங்கின்படி. ஒருத்தற்குக் கை கொடுக்காதார் - ஒருவனுக்குக் கை கொடுத்து உடன் வாழாதார்; உறுகண் கையுள்ளவர் - துன்பத்தைக் கைப்பற்றியிருப்பவராவர்; ஒருத்தல் - யானை; ஒருத்தற்கு - யானைத்தந்தம் போன்ற முலைகளுக்கு; உறு கண் கையுள்ளவர் - பொருந்திய கண்ணைக் கையால் பொதிந்தவர்.

## 206

முனமாக வந்தேத் திகன் மன்னர் சென்னியின் மொய்கழல்வைத்
தினமாக வாழ்கின்ற சீராச ராச னிருங்கிரிவாய்த்
தனமாக வஞ்சக் கரவாக முள்ளநுந் தம்மைமக் கண்டால்
மனமாறி யாவரும் கைப்பார்வை யாரென்று வைப்பதுண்டே.

முனமாக வந்து - தம் முன்னிலையில் வந்து; ஏத்துதல் - புகழ்தல்; இகல் மன்னர் சென்னியின் மொய்கழல் வைத்து - போர் வல்ல அரசர் தலையினால் தம் பாதங்களில் வணங்குதலால்; இனமாக - சுற்றமாக; மொய்கழல் - கட்டிய வீரக்கழல்; இங்கே கழலணிந்த காலைக் குறித்தது. தனமாக - செல்வமாக; வஞ்சக் கரவு ஆகமுள்ள - வஞ்சனையாகிய மறைப்பினை உள்ளத்தே கொண்ட; மனம் மாறி - மனம் வேறுபட்டு; கைப்பார் - வெறுப்பார்; வையார் என்று - கூரிய அறிவுடையார் என்று; வைப்பது உண்டே - போற்றுவது உண்டோ; இல்லை என்றபடி. தனம் ஆக அம் சக்கரவாகம் உள்ள - முலையாகச் சக்கரவாளப் பறவையைக் கொண்டுள்ள. சக்கரவாகம் முலைக்கு ஒப்புக் கூறும் மரபினது. கைப்பார்வையார் - கையைக் கண்ணிடத்தே கொண்டவர்.

## 207

கழுவ வராத கொழும்பா தகமுற்றுங் கண்டவுடன்
நழுவ நிலாய புகழ்ச்சேது காவலன் நல்லவர்தங்
குழுவை விடாதவன் சீராச ராசன் குளிர்வரைவாய்
வழுவை யிலாது மதனுணை யோகையில் வைத்தனையே.

கழுவ வராத கொடும் பாதகம் - போக்கமுடியாத பெரும் பாவச் செயல்கள்; சேதுவைக் கண்டவுடன் பாவங்கள் முழுமையாய் விலகிப்

போகுமாம். முற்றும் - முழுவதும்; நல்லவர்தம் குழு - நல்லறிஞர் கூட்டம்; வழுவை - குற்றத்தை; மதன் ஆணை - மன்மதனின் கட்டளை. குற்றமின்றி மன்மதனின் ஆணையை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டுள்ளாய். ஓகை - மகிழ்ச்சி; வழுவை - யானை, முலை; மதன் நாணை - மன்மதனின் வில் நாணாகிய வண்டை; அதாவது வண்டுபோன்ற கண்களைக் கையில் மறைத்துக் கொண்டுள்ளாய் என்பதாம்.

## 208

விண்ணளி கற்ப தருவுரு வாகியிம் மேதினியாள்
கண்ணளி னம்பொருஞ் சீராச ராசன் கனகிரிவாய்ப்
பண்ணளி மென்மொழி யாலமு தப்பொழி பாவைநல்லாய்
தண்ணளி யின்றித் தனமளித் தாலது தக்கதன்றே.

விண் அளி கற்பதரு - வானுலகில் விரும்பியவற்றைக் கொடுக்கும் கற்பகமரம்; கற்பதரு உருவாகி - கற்பகமரம்போல் இவ்வுலகில் கொடுக்கும் இயல்புடையான் என்பதாம். மேதினியாள் - பூமிதேவி ; கண் நளினம் - கண்ணாகிய தாமரை; பொரும் - ஒக்கும்; பண் அளி மென்மொழி - இசை இனிமை தரும் மென்மையான சொற்கள். அமுதம் பொழி பாவை - அமுதம் போன்று இனிமையாகப் பேசும் பெண்; தண்ணளி இன்றித் தனம் அளித்தால் - கருணையின்றிச் செல்வம் கொடுத்தால்; தண் அளி இன்றி - குளிர்ந்த வண்டுபோன்ற கண் இல்லாமல்; தனம் அளித்தால் - முலைகளைத் தந்தால்; தக்கதன்று - முறையாகாது.

## 209

அன்பந் தரங்க முளராயி னன்ன வரையறிந்தே
இன்பந் தரநல்குஞ் சேதுக்ர வாய்த்தவ னெய்தினரை
முன்பந்தி வைத்துணுஞ் சீராச ராச முதல்வன்வரைத்
துன்பந் தினையும்விட் டார்க்குறுகண் கையிற் றோன்றலென்னே.

அன்பு அந்தரங்கம் - அன்பும் அந்தரங்கமும்; அந்தரங்கம் - நெருங்கிய நட்பு; எய்தினரை - வந்த விருந்தினரை; முன் பந்தி வைத்து - பந்தியின் முதலாவதாக வைத்து; உணும் - உண்ணும்; துன்பம் தினையும் விட்டார்க்கு - துன்பம் தினையளவு கூட இன்றி விடுத்தவருக்கு; உறுகண் கையில் தோன்றல் - கையிடத்தில் மட்டும் துன்பம் தோன்றுதல்; உறுகண் - துன்பம். துன் பந்தினையும் விட்டார் -

நெருங்கிய பந்து போன்ற முலைகளை மறையாது விடுத்தவர்; ... றுகண் கையில் தோன்றல் - பொருந்திய தம் கண்ணைக் கையிடத்தே பொருந்த வைத்தல்; அதாவது கண்ணை மறைத்தல்.

**210**

சினங்காவல் செய்யா மதமா வுகைத்துச் செருவுழக்கித்
தினங்காவல் செய்கின்ற சீராச ராசன் றிகிரியிலே
கனங்காவல் செய்கின்ற கூந்தன்மின் னேபடை காவல்செய்து
தனங்காவல் செய்யா தவருள ரோவித் தரணியிலே.

சினம் காவல் செய்யா மதமா - சினத்தைக் காக்காது மிகுதியும் கொண்டுள்ள மதயானை; உகைத்து - ஏறிச் செலுத்தி; செரு உழக்கி - போரில் படைகளை அழித்து; காவல் செய்தல் - காத்தல் தொழிலைச் செய்தல், அரசாளுதல்; திகிரி - மலை; கனம் - மேகம்; கனம் காவல் செய்கின்ற கூந்தல் - மேகம் போன்ற கரிய கூந்தல்; படை காவல் செய்து - படைகளை வைத்துக் காப்பாற்றி; தனம் காவல் செய்யாதவர் - செல்வத்தைக் காக்காதவர். தரணி - உலகு; படை-ஆயுதம், வேல்; வேல் போன்ற கண்ணைக் காத்து; அதாவது கண்களை மறைத்து; தனம் காவல் செய்யாதவர் - முலைகளை மறையாது விடுந்தவர்.

**211**

அல்லீ ரொளியி னரண்மனை முற்று மழகுசெய்தோன்
கொல்லீர் படைத்தறு கண்மற வோரிறை கூடியுண்
எல்லீரும் வம்மெனும் சீராசராச னிருங் கிரிவாய்
நல்லீர் கராத்திர மேமறைத் தீர்கரி நண்ணுறவே.

அல் ஈர் ஒளியின் - இருளைக் கவ்வும்படியான ஒளியினால் அரண்மனையிலிருந்து தோன்றும் ஒளியினால் இருள் நீங்கிப் பகல் போலத் தோன்றும் என்பதாம். கொல் ஈர் படை - கொல்லும் தன்மை படைத்ததும் பகைவரை அறுத்தெறிவதுமான ஆயுதம்; தறுகண் மறவோர் - அஞ்சாமையுடைய வீரர்; இறை - தலைவன். வம் வாருங்கள்; நல்லீர் - விளி. கரி நண்ணுறவே கராத்திரமே மறைத்தீர் யானை அடுத்து வரவும் கையிலுள்ள அம்பை மறைத்து வைத்தீர். கர அத்திரம் - கராத்திரம். கர அத்திரமே மறைத்தீர் - கையினால் அம்பு போன்ற கண்ணை மறைத்தீர்; கரி நண்ணுற - யானைத் தந்தம் போன்ற முலை அடுத்துவர; முலைகள் வெளிப்பட என்றவாறு.

## 212

மருந்தெனச் செந்தமிழ் வான்புல வோர்சொன் மதுரகவி
விருந்தெனக் கொள்கின்ற சீராச ராசன் வியன்சிலம்பில்
முருந்தெனத் தந்த மிளர்வீர்நல் லாரென் மொழிபடைத்த
பெருந்தனக் காரர்க்குக் கண்ணேட்ட மின்மை பெரும்பிழையே.

மருந்து - அமுதம்; அமுதம்போன்று இனிய செந்தமிழ் என்பதாம்; வான்புலவோர் - சிறந்த புலவர்; மதுரகவி - இனிய பாடல்; நால்வகைக் கவிகளுள் ஒன்று. விருந்தென - விருந்தாக, புதுமையாக; வியன் சிலம்பு - பெரிய மலை; முருந்து - இறகின் அடி முள்; தந்தம் - பல்; நல்லார் - நற்குண நற்செயலுடையவர்; பெண்டிர். பெருந்தனக்காரர் - பெரிய செல்வர்; கண்ணோட்டம் — கருணை, இரக்கம்; பெரும் பிழை - பெரிய குற்றம்; பெருந் தனக்காரர் - பெரிய முலையினை யுடையவர்; கண் ஓட்டம் இன்மை - கண் பார்வை இல்லாமை; அதாவது கண்களை மறைத்தமை.

## 213

வெளியிலை யாகக் குழுமிய முன்றிலில் வேந்தர்தொழ
விளியிலை வேல்கையி னுன்தள வாய்வழி வேந்தனென்னர்க்
களியிலை யாயவன் சீராச ராச னணிவரைவாய்
ஒளியிலை யாயின் பணத்தை யெவரு முறுரென்பரே.

வெளியிலையாக - வெற்றிடம் சிறிதும் இல்லையாம்படி, முன்றில் - அரண்மனை முற்றம்; விளி இலை வேல் - கொல்லுதலைச் செய்யும் இலைவடிவான் வேலாயுதம்; விளி - இறப்பு; அழைக்கின்ற என்றும் ஆம். தளவாய் வழி - மறவர்குலத்தின் வழி; ஒன்னார் - பகைவர்; அளி - கருணை; அணிவரை - அழகிய மலை; ஒளி இலையாயின் - அறிவு ஒளி இல்லையானால்; பணத்தை உறார் - பொருளை அடையப் பெறார்; ஒளி - கண்; கண் இல்லையாயின் என்றது கண்களை மறைத் தமையை; பணத்தை - பாம்பின் படம்போன்ற அல்குலை.

## 214

மண்டளிப் பாட லருமுல்லை மாலையன் வண்டமிழ்ச்சீர்
கண்டளிப் பானெங்கள் சீராச ராசன் கரந்தையன்னுப்
வண்டளிப் பார்கைக்குச் செண்டளிப் பார்மற்று வண்டுக்குக்கை
கொண்டளிப் பாரு முளரோ சொலாயிக் குவலயத்தே.

மண்டு அளி - நெருக்கமான வண்டு; வண்தமிழ்ச் சீர் - வளப்பம் மிக்க தமிழின் சிறப்பு; கரந்தை - சேதுபதிகளின் ஆட்சிக்குட்பட்ட ஓர் ஊர்; வண்டு அளிப்பார் - வளையலைக் கொண்டுள்ளவர்; கைக்குச் செண்டு அளிப்பார் - கைகளில் பூச் செண்டினைக் கொடுப்பர்; செண்டு - பூச் செண்டு, முலை; வண்டு - வளையல், கண்; வண்டுக்குக் கை கொண்டளிப்பார் - வண்டுபோன்ற கண்களுக்குக் கையைக் கொடுத்தல்; அதாவது கண்களை மறைத்தல். கைக்கு வண்டைக் கொடுத்தாய்; செண்டைக் கொடுக்கவேண்டும் என்பதாம்.

## 215

பார்தந்த புண்ணிய மாகவந் தோன்றமிழ்ப் பாவலருக்
கூர்தந்து காப்பவன் சீராச ரரச னுயர்கிரியீர்
நீர்வஞ்சி யென்று நினைத்துவந் தேனுக்கு நீளத்தியை
வார்கையின் வைத்தர சாலிலை யோடிரு மாத்தந்திரே.

பார் - பூமிதேவி, உலகத்தவர்; தமிழ்ப் பாவலர் - தமிழ்ப் புலவர்; புலவருக்கு ஊரையே நன்கொடையாகத் தந்தவன்; நீர் வஞ்சி என்று நினைத்து வந்தேனுக்கு - நீரில் வளரும் வஞ்சிக் கொடி வேண்டும் என்று எண்ணிவந்த எனக்கு; நீள் அத்தியை வார்கையின் வைத்து - உயர்ந்த அத்திமர இலையை என் நீண்ட கையில் வைத்து; அரசு ஆலிலையோடு இருமாத் தந்திரே - அரசிலை ஆலிலையோடு பெரிய மாவிலையும் தந்தீர். நீர் வஞ்சி என்று - நீர் வஞ்சிக் கொடி போன்ற பெண் என்று; நீள் அத்தி - நீண்ட கடல்போன்ற கண்; அத்தி - கடல், கண்; வார் கையின் வைத்து - உம்முடைய நீண்ட கையில் வைத்து மறைத்து; அரசிலை ஆலிலையோடு இரு மாத் தந்திரே - அரசிலை போன்ற அல்குலுடனே, ஆலிலை போன்ற வயிற்றையும், பெரிய யானைத் தந்தம் போன்ற முலைகளையும் வெளிப்படுத்தினீர். மா - யானை, முலை.

## 216

எட்டுக் கடங்காத் திசையு மிசைசென் றியம் பப்பொய்யர்
பெட்டுக் கடங்காத் திறல்ராச ராசன் பெருங்கிரியீர்
கட்டுக் கடங்காத் தனமுடை யார்கடங் காதுறுகண்
மட்டுக் கடங்காது கைக்கொளல் காட்டும் வழக்குநன்றே.

எட்டுக்கு அடங்காத் திசை - எட்டுக்கும் மேற்பட்ட பத்துத் திசையிலும்; இசை - புகழ்; இயம்ப - யாவராலும் பேசப்பட; பெட்டு

பொய்; திறல் - வலிமை; மட்டு - அளவு; கட்டுக்கு அடங்காத் தனம் - கட்டி வைப்பதற்கு இயலாதபடி மிகுந்துள்ள செல்வம்; கச்சுக் கட்டுக்கு அடங்காத முலை; தனம் - செல்வம், முலை. கடம் - கடன்; காது உறுகண் - வருத்தும் துன்பம்; காதளவு நீண்ட கண். அளவிட முடியாத பெருஞ்செல்வமுடையார் கடனாகிய வருத்தும் துன்பத்தை அளவுக்கு மிஞ்சிக் கைக்கொள்ளுதலைக் காட்டும் முறை நல்லதே? நன்றே என்றது நன்று அன்று என்பதாம். கட்டுக்கு அடங்காத் தனம் உடையார் - கச்சுக் கட்டுக்கு அடங்காது பருத்த முலையினையுடையார்; தம் காது உறு கண் கைக்கொளல் காட்டும் வழக்கு நன்றே என்க.

## 217

புன்கட்குட் பட்ட வரையா தரிக்கப்புவி யின்வந்தோன்
என்கட் கைதந்த பெருங்கொடை வேந்த னிகன்றவருந்
தன்கட்கை கூப்ப வருராச ராசன் றமிழ்மலையாய்
நின்கட்கைம் மாறிலை யாயினென் னுமிந் நிதிப்பெருக்கே.

புன்கண் - துன்பம்; ஆதரிக்க - அணைத்துக் காப்பாற்ற; என்கண் கைதந்த - என்னிடம் கைகொடுத்து உதவிய; இகன்றவர் - மாறுபட்டவர், பகைத்தவர்; கைகூப்ப - கை குவித்து வணங்க; கைமாறு - ஒருவர் செய்த உதவிக்கு எதிராகச் செய்யும் மறு உதவி; ஒருவர் செய்த உதவிக்கு மாற்று உதவி செய்யும் தன்மை உன்னிடம் இல்லையானால்; இந் நிதிப்பெருக்கு என்னாம் - நீ பெற்றுள்ள செல்வப்பெருக்கினால் யாது பயன். நின்கண் கைம் மாறில்லையாயின் - உன்னுடைய கண்ணில் வைத்த கையை மாற்றவில்லையானால்; நிதி - தனம்; நிதிப்பெருக்கு என்றது முலைகளை வெளிப்படுத்தமை குறிப்பிட்டவாறாம்.

## 218

ஒப்போதுங் கொண்ட லுடல்வெளுப் பெய்த வொளிநிதியம்
கைப்போது பெய்கின்ற சீராச ராசன் கனவரைவாய்
முப்போதுந் தந்த மனையாரை விட்டு முதுக்குறைந்தோர்
எப்போது மீன மனையாரைக் கைக்கொள்வ தில்லையன்றே.

ஒப்பு ஓதும் கொண்டல் - கொடைக்கு ஒப்பாகப் பேசப்படும் மேகம்; கொண்டல் உடல் வெளுப்பப் பெய்த - மேகம் நாணத்தால் உடல் வெளுக்கும்படி; அதாவது மேகத்தை விடவும் பெருங்கொடையாளன்

என்றபடி; ஒளிநிதியம் - பிரகாசமான பொன், மணி முதலியவற்றை; முதுக்குறைந்தோர் - பேரறிவு படைத்தவர்; பேதைமையுடையவர்; தந்த மனையார் - பெற்ற மனைவி; ஈன மனையார் - இழிந்த பெண்டிர், பேரறிவு படைத்தோர் முக்காலங்களிலும் தாம் பெற்ற மனைவியை விடுத்து இழிந்த பெண்டிரைக் கைப்பற்றுவதில்லை என்பது வெளிப்படை. தந்தம் அனையார் - தந்தத்துக்கு ஒப்பாகும் முலை; மீனம் அனையார் - மீனை ஒத்த கண்.

## 219

கழுவ லிலாத பவத்தைக் கழுவக் கடவுள்வைத்து
வழுவலி லாமலந் நாடொட்டிந் நாள்வரை வாழ்தருமந்
தழுவல்கொள் சேது பதிராச ராசன் றமிழ்வரையாய்
முழுவலி யுண்டுகண் ணோகையுண் டென்னே முயங்குவதே.

கழுவல் இலாத - போக்கமுடியாத; பவத்தை - பாவத்தை; கழுவ - போக்க; கடவுள் வைத்து - சேது இராமேசுவரத்தில் இராமநாதரை வைத்து; வழுவல் இலாமல் - தவறுதல் இல்லாமல்; அந்நாள் தொட்டு - உலகம் தோன்றிய காலமுதல், சேதுகாவலராய் இராமனால் நியமிக்கப் பட்ட காலமுதல். வாழ்தருமம் - நிலைபெற்று வளரும் தருமம்; முழுவலி உண்டு - உடல் முழுவதும் வலியுண்டு; கண் நோகை உண்டு - கண்ணும் நோவுக்கு இடமாயுள்ளது. முயங்குவது - கூடித்தழுவுவது; முழுவலி - யானை; முலை; கண்ணோகையுண்டு - கண்ணோகையால் மறைப் புண்டுள்ளது.

## 220

புரவியன் சேது பதிராச ராசன் பொருப்பனையீர்
கரவியன் பூங்கணை மாரன் பொருத கடுஞ்செருவி
லிரவியன் கையு மிழந்துடு வின்கையு மீங்கிழந்தும்
உரவிய நன்மதி யின்கண் ணிருகை யுறல்வியப்பே.

புரவியன் - காப்போன்; குதிரைப் படையுடையான். கரவியன் பூங்கணை மாரன் - மறைந்து எய்யும் மலரம்புகளையுடைய மன்மதன்; மாரன் பொருத கடுஞ்செரு - மன்மதன் செய்த காமப் பெரும்போர்; இரவியன்கை - இரவிக்கை; கச்சு; உடுவின்கை - உடுக்கை, ஆடை; உரவிய நன் மதியின் கண் - உலாவும் முழுமதிபோன்ற முகத்தினிடத்தே

யுள்ள கண்; இரு கையுறல் - இரண்டு கையும் பொருந்துதல். கச்சு அவிழ்ந்து முலை வெளிப்பட்டும் உடுக்கை நெகிழ்ந்தும் கண்களை இரு கையால் மறைப்பது ஆச்சரியமாயுள்ளது. 'உடுக்கை இழந்தவன் கைபோன்று' என்றபடி கை அவிழ்ந்த ஆடையைப் பற்றாது கண்களைப் பற்றியமையால் வியப்பாம் என்க.

## 221

அலையார் சலஞ்சல மீன்ற தரள மலங்கரித்து
கிலையா வொளிருந் துறைத்தேவை காவல னீண்டவன்பின்
வலையா லெனைப்பிணித் தோன்ராச ராசன் வனகிரியாய்
கொலையார் வழுவை யுடையாய் மதுமறுக் கும்பொழுதே.

சலஞ்சலம் - சலஞ்சலம் என்னும் சங்கு; வலம்புரிச் சங்கிலும் சிறந்த சங்கு என்பர்; தரளம் - முத்து; ஒளிரும் - ஒளிவீசி விளங்கும்; தேவை காவலன் - இராமேசுவரத் தீர்த்தத்துறையைக் காப்பவன்; நீண்ட அன்பு - மிக்க அன்பு; பிணித்தோன் - கட்டியவன்; கொலையார் வழு - கொலைக் குற்றம்; மது - கள். கள்ளை நீக்கும் பொழுதே கொலைக் குற்றத்தை யுடையாய் என்பதாம். வழுவை - யானை; கொலை ஆர் வழுவை - கொல்லும் தன்மை படைத்த யானைத் தந்தம் போன்ற முலை; மது - தேன், வண்டு; வண்டுக்கு ஒப்பாம் கண். மது மறுக்கும் பொழுது - கண்ணைக் காட்டாது மறைக்கும் பொழுது.

## 222

கோதகந் தீர்ந்த ரவிகுல சேகரன் குன்றமன்ன
போதக மூர்ந்து வருராச ராசன்பொருப் பின்மின்னே
சாதக மாகப் பணமிருந் தென்சீ தனமிருந்தென்
பாதக மாமங்குப் பெற்ற வளையுங்கைப் பற்றுதலே.

கோது அகம் தீர்ந்த - குற்றம் எதுவும் உள்ளத்தில் இல்லாத; ரவிகுல சேகரன் - சூரிய குலத்தில் தலையானவன்; போதகம் - யானை; சாதகமாக - நன்மையாக, உதவியாக; பணம் - தான் தேடிய செல்வம்; சீதனம் - சீதனமாக மனைவிவழி வந்த பொருள்; பெற்றவளையும் கைப் பற்றுதல் பாதகமாம் - பெற்ற தாயைக் கைப்பிடித்தல் பெரிய பாவமாம் என்பது வெளிப்படை, பணம் இருந்து என் - பாம்பின் படம் போன்ற அல்குல் இருந்து என்ன பயன்; சீதனம் - சிறப்பான முலை; பெற்ற

வளை - வளை என்பது வண்டுக்கும் பேர். வண்டு போன்ற கண்ணைக் கைப்பற்றுதல் குற்றமாம் என்பதாம்.

**223**

**இம்மா நிலமர சாள்ராச ராச னிருங்கிரிவாய்**
**மைம்மானுங் கூந்தன் மயிலேநீ கூடற் குவந்ததிலே**
**சும்மாநிற் சாபந் தொடுத்தவம் போமறைத் தோயன்றியே**
**அம்மாநிற் கோபந் தணிவதுங் காட்டினை யாரணங்கே.**

மாநிலம் - சிறந்த பூமி; மை - மேகம்; மைம்மானும் கூந்தல் ; மேகம் போன்ற கரிய கூந்தல்; கூடற்கு வந்து - சேர்வதற்காக வந்து; கூடற்கு உவந்து - இணைவதற்கு மகிழ்ந்து; சும்மா - வீணாக; சாபம் தொடுத்த அம்போ மறைத்தாய் - வில்லோடு கூடிய அம்பை மறைத்தாய்; புருவத்துடன் சேர்ந்த அம்பு போன்ற கண்ணை மறைத்தாய். அம்மா - வியப்பு; நிற்கோபம் தணிவதும் காட்டினை - உன்னுடைய கோபம் தணிவதும் வெளிப்படுத்தினாய்; நிற்கோ பந்து அணிவதும் காட்டினை- உன்னிடத்தே பந்து போன்ற முலை அழகு செய்தலையும் வெளிப் படுத்திக் காட்டினாய்.

**224**

**கோலங்கைக் கொண்டதன் குன்ற வளரிபொற் குன்றிலிட்டு**
**ஞாலங்கைக் கொண்டவன் சீராச ராச னளிர்வரையீர்**
**சீலங்கைக் கொண்ட சிவனு மரியுஞ் சிவணுகிற்பீர்**
**ஆலங்கைக் கொண்டின் னமுத கலச மளித்தலினே.**

கோலம் - அழகு; வளரி - வளரித்தடி என்னும் ஆயுதம்; வளர்கின்ற கிர்த்தி. பொற்குன்று - மேருமலை; இட்டு - பொறித்து; ஞாலம் - பூமி; நளிர்வரை - குளிர்ச்சி பொருந்திய மலை; சீலம் - தெய்விகப்பெருங் குணம்; சிவனும் அரியும் - சிவனும் திருமாலும்; சிவணுகிற்பீர் - ஒத்துள் ளீர்; ஆலம் - நஞ்சு; கண்; அமுத கலசம் - அமுதம் பொருந்திய கல யம், முலை. சிவன் நஞ்சை ஏற்று உண்டவர்; திருமால் தேவர்களுக்கு அமுத கலசத்தைத் தந்தவர். நஞ்சைக் கைக் கொண்டு அமுத கலசம் அளிக்கும் தன்மையால் சிவனையும் திருமாலையும் ஒத்துள்ளீர் என்ப தாம். நஞ்சு போன்ற கண்ணைக் கையால் மறைத்து அமுத கலசமாகிய முலைகளை வெளிப்படுத்தித் தந்தீர் என்றவாறு.

### 225

செருமாத் திரைப்பொழு திற்கொற் றஞ்செய்யுந் திறன்மறவன்
பொருமாத் திரைக்கட லான்ராச ராசன் புனவரையார்
பெருமாத் திரைதங்கை வைத்துக்கொண் டார்குளிர் பெய்யிவிடம்
ஒருமாத் திரையில்ல தாமூலை யெற்கே யுதவினரே.

செரு - போரில்; ஒரு மாத்திரைப் பொழுதில் - ஒரு நொடிப்பொழு திற் குள்ளாக; கொற்றம் செய்யும் - வெற்றி பெறும்; திறல் மறவன் - ஆற்றல் பெற்ற பெருவீரன்; பொருமாத் திரைக் கடலான் - ஒன்றோ டொன்று மோதி எழுகின்ற அலைகளோடு கூடிய கடலுக்குரியவன்; புனம் - தினைப் புனம்; பெரு மாத் திரை தம் கையில் வைத்துக்கொண்டு- பெரிய சிறந்த திரைச் சீலையைத் தம் கையில் வைத்துக் கொண்டு; ஒரு மாத் திரை இல்லாத மூலை - ஒரு சிறந்த திரை இல்லாத மூலை; பெரு மாத் திரை - பெரிய அழகிய கடல் போன்ற கண்; ஒரு மாத்திரை இல்லதாம் மூலை - மூலை என்பதில் ஒரு மாத்திரை குறைந்தால் முலை என்றாம்.

### 226

தும்புருக் கொண்ட விசையுங் குறுமுனி தொல்கலையும்
நம்புருக் ககாண்டவன் சீராச ராச னளிர்வரைவாய்
வம்புருக் கொண்ட வரும்பளித் தம்பை மறைத்தனைவேள்
அம்புருக் கொண்ட தரும்பென் றறிந்திலை யாரணங்கே.

தும்புரு - தும்புரு முனிவர்; யாழிசையில் வல்லவர்; குறுமுனி - அகத்தியர்; தொல்கலை - பழங்கலை நூல்கள்; நம்பு உருக்கொண்ட வன் - விரும்புகின்ற அழகிய வடிவினையுடையான்; நம்பு - நசை, விருப்பம்; இசையிலும் தமிழ்த் தொல் கலைகளிலும் வல்லவர் சீராச ராசன் என்பதாம். வம்பு - வாசனை, கச்சு; அரும்பு - பூவரும்பு, முலை; அம்பை - அழகிய பையை; அம்புபோன்ற கண்ணை; மன்மதனுக்கு அம்பு அரும்பு; அந்த அரும்பு எனக்குத் துன்பம் செய்தலை அறிந்தா யில்லை. ஆரணங்கு - தெய்வப் பெண் போன்ற பெண்.

### 227

நெறியிற் சிறந்தியல் பாற்கர வேந்த னிறைதவமீங்
கறியப் பிறந்தவன் சீராச மாணிக்க மண்ணலெனைச்
செறியத் திகழன்பி னேன்ராச ராசன் செழுங்கிரியாய்
பொறியிற் சிறந்ததுள் ளாய்கோட்டை யென்புறம் போக்கினையே.

நெறியில் - அரசுக்குரிய நீதிநெறி முறைமையில்; மாணிக்கம் - மாணிக்க மணிபோல் சிறந்தவன்; அண்ணல் - பெரியோன்; செறியத் திகழ் அன்பு - நெருங்கி விளங்கும் அன்பு; பொறி - இயந்திரம்; கோட்டை - மதில் சூழ்ந்த காப்பிடம்; இயந்திரம் முதலியவற்றால் சிறந்துள்ள நிலை அறியாது கோட்டையை வெளியார் கொள்ள விடுத்தனையே என்பது வெளிப்படை; பொறியில் சிறந்தது - ஐம்பொறிகளி லும் சிறப்புநிலை உற்றது கண்; கண் உள்ளாய் - கண்ணைக் கையிட மாகப் பற்றியுள்ளாய்; கோடு - தந்தம், முலை; கோட்டை - முலையை; புறம்போக்கினை - வெளியே தெரியும்படி விடுத்தாய்.

## 228

கைக்குஞ் சரமம் பகைவேந்தர் கொள்ளக் களிற்றினைப்
கைக்குஞ் சரப மெனும்ராச ராசமன் கார்வரைவாய்க்
கைக்குஞ் சரமெதிர் கின்றது கண்டும்வன் கண்ணரைப்போற்
கைக்குஞ் சரமிருந் தெய்யாத தென்கொல் கனங்குழையே.

கைக்கும் சரமம் - வருத்தம் செய்யும் இறப்பு; களிறு - ஆண்யானை; உகைக்கும் - செலுத்தும்; சரபம் - சிங்கத்தையும் வெல்லும் ஆற்றல் படைத்த பெருவிலங்கு; கார் - மேகம்; கைக்குஞ்சரம் - கையையுடைய யானை; முலை. யானை எதிர்த்து வருதலைப் பார்த்தும் வீரரைப் போலக் கையின்கண் அம்பு இருந்தும் அதனை விடாதது என்ன காரணம் என்பது வெளிப்படை; வன்கண்ணர் - அஞ்சாமையுடைய வீரர்; கைக்கும் சரம் இருந்தும் - கையிடத்தே அம்பு போன்ற கண் இருந்தும்; எய்யாதது - அறியாதது; அதாவது கண்ணை மூடிய தன்மை.

## 229

அற்காய் கதிரொளி யாற்கோயின் முற்று மலங்கரித்தோன்
மற்காய் புயத்துச் சமரகோ லாகல மன்னன்வழி
யிற்காய மெய்திய சீராச ராச னிருங்கிரியாய்
கற்கா யெனவைத்துங் கண்ணறி வில்லை கலையில்லையே.

அல் காய் கதிர் - இருளைச் சினந்து ஓட்டும் சூரியன்; கோயில் - அரண்மனை; மற்காய்புயம் - மல்லரை வருத்தும் தோள்; சமர கோலா கலன் - போரையே விநோதமாகக் கொண்டிருப்பவன், போர் விருப்ப முடையவன்; காயம் - நிலைபேறு; கற்கு ஆய் - கல்விக்குத் தாய்; கண்ணறிவு - கண்ணுகின்ற அறிவு; கலை இல்லை - ஒளி இல்லை.

கல் காய் எனவைத்தும் - கல் - மலை, முல்லை; காய் எனவைத்தும் - காய் தலாக வெளிப்பட வைத்தும்; கண் அறிவு இல்லை - கண் அறியப்படுவ தில்லை, மறைத்துள்ளாய்; கலை இல்லை - ஆடையின்றியும் உள்ளாய்; ஆடை நெகிழ முன் நிற்கின்றாய் என்பதாம்.

## 230

பார்வந் தனைபுரி சீராச ராசன் பருவரைவாய்க்
கார்வந்த பூங்குழ லீர்நும் மரைப்பணம் காட்டியென்றன்
சீர்வந்த வாசையெல் லாங்கொள்ளை கொண்டு திருக்கொழிப்பீர்
ஆர்வம் பொழிபெருஞ் சூதுவல் லீர்க்கியல் பாமிதுவே.

பார் வந்தனைபுரி - உலகிலுள்ளாரெல்லாம் வணங்குகிற; கார் வந்த பூங் குழலீர் - மேகம் போன்ற அழகிய கூந்தலையுடையீர்; விளி. நும் அரைப்பணம் காட்டி - உம்மிடத்திலுள்ள அரைப்பணத்தைக் காட்டி; சீர்வந்த ஆசை எல்லாம் - சிறப்புமிக்க செல்வம் முழுவதும்; ஆசை - செல்வம்; கொள்ளை கொண்டு திருக் கொழிப்பீர் - கைப்பற்றிச் செல்வத் தால் மிக்கு விளங்குவீர்; ஆர்வம் - விருப்பம்; சூதுவல்லீர்க்கு - சூதாட் டத்தில் வல்லவராகிய உமக்கு; இயல்பு - இயற்கை; சூது வல்லவர் அரைப்பணத்தை வைத்துச் சூதாடிப் பிறர் செல்வங்களை எல்லாம் கவர்ந்துகொள்ளும் இயல்பினராவர். அரைப்பணம் காட்டி - அரை யிடத்தே பொருந்திய பாம்பின் படம்போன்ற அல்குலை வெளிக்காட்டி; சீர்வந்த ஆசை - சிறப்புடைய பெருவிருப்பம்; கொள்ளைகொண்டு - கைப்பற்றி; திருக்கு ஒழிப்பீர் - கண்ணை மறைத்து இல்லாமல் செய்வீர்; ஆர் வம்பு ஒழி பெருஞ் சூது வல்லீர்க்கு - கட்டப்பெறும் கச்சை நீத்துள்ள பெரிய சூதுகாய் போன்ற முலையினையுடையீர்க்கு.

## 231

துங்கச் செழியர் நிகராகக் கூடலிற் றோய்ந்த தமிழ்ச்
சங்கத்தைக் காக்கின்ற சீராச ராசன் சயிலமின்னார்
நங்கைக் கினியவ ராய்ப்பெரு மாநல நண்ணினராய்த்
தங்கைக் கயலவ ராகிநின் றுரிது தக்கதன்றே.

துங்கச் செழியர் - பெருமை படைத்த பாண்டியர்; நிகராக - ஒப்பாக; கூடல் - மதுரை; தோய்ந்த - நிலைபெற்ற; தமிழ்ச்சங்கம் - பாஸ்கர சேதுபதி, பாண்டித்துரைத்தேவர் ஆகியோரால் 1901ஆம் ஆண்டு

மதுரையில் தோற்றுவிக்கப்பெற்ற தமிழ்ச்சங்கம்; இதனை நான்காம் தமிழ்ச்சங்கம் என்பர். சயிலமின்னார் - மலையில் உள்ள மகளிர்; நங்கைக்கு - பெண்களுக்கு; பெருமா நலம் நண்ணினர் - மிகுந்த செல்வம் பெற்றவராயிருப்பவர்; தங்கைக்கு - தம்முடைய தங்கைக்கு; அயலவராகி நின்றார் - மாற்றார் போல நின்றார். எல்லாப் பெண்களுக்கும் இனியவராயுள்ளவர் தம் தங்கையுடன் மாறுபட்டிருத்தலால் முறையன்று என்றார். நம் கைக்கு இனியவராய் - நாம் புணர்வதற்கு இனியவராய்; பெருமாநலம் - பெரிய யானைத் தந்தம் போன்ற முலைவளம்; தம் கைக் கயல் வராகி நின்றார் - தம் கையிடத்தே கயல்மீன்போன்ற கண்ணைக் கொண்டவராய் நின்றார்.

## 232

வாரண மெட்டும் பொறையாற்றத் தன்புயம் வையம்வைத்துத்
தாரணஞ் செய்கின்ற சீராச ராசன் சயிலமின்னே
ஆரணங் கூறிய பார்ப்பா ரிலாம லவனியிலே
பூரண கும்பந் தருவதுண் டோபொலம் பூங்கொடியே.

வாரணம் எட்டும் - பூமியைச் சுமக்கின்ற திக்கானைகள் எட்டும்; பொறை - பாரம்; பொறையாற்ற - சுமையை இறக்கி இளைப்பாறும் படி; புயம் - தோள்; வையம் - உலகம்; உத்தாரணம் - உயர்த்துதல்; ஆரணம் - வேதம்; அவனி - பூமி; வேதம் ஓதும் பார்ப்பார் இலாமல் பூரணகும்பம் தருவது வழக்கமில்லை என்பது வெளிப்படை; பூரண கும்பம் - மாவிலை தருப்பை முதலியவற்றால் அலங்கரித்து நீர் நிறைக்கப்பட்டுள்ள குடம்; பெரியோர்களை வரவேற்கும் போது பூரணகும்பம் தந்து வரவேற்பர். ஆர் அணங்கு ஊறிய பார்ப்பார் - மிக்க துன்பம் விளைவிப்பதில் தேர்ந்த கண்; பார்ப்பார் இலாமல் - கண் இல்லாமல்; அதாவது கண்ணை மறைத்தமை குறித்தபடியாம். பூரண கும்பம் - நிறை குடம் போன்ற முலை.

## 233

மணிமானு மேனியய் மான்மரு கன்குற வள்ளிமுனங்
கணிமா மரமென நின்றுன் றிருவடி காதலொடு
பணிமா நிலமன்னன் சீராச ராசன் பருப்பதத்தீர்
அணிமா வெளிப்பட்ட துங்க ணிருத்தி யமர்கையொடே.

மணி - மாணிக்கம், செம்மணி; மானும் - ஒக்கும்; மான்மருகன் - திருமால் மருமகனாகிய முருகன்; முனம் - முன்னம்; கணிமா மரம் -

வேங்கையாகிய பெருமரம்; காதலொடு - அன்போடு, பத்தியோடு; அணிமா - எண்வகைச் சித்திகளுள் ஒன்று; அணுப்போல நுண்மையாகுதல். இருத்தி - சித்தி; சித்தி பொருந்துதலுடன் அணிமா என்னும் சித்தியின் வகையும் வெளிப்பட்டது என்பது மேற்போக்கான பொருள். அணி மா - அழகிய யானை, அழகிய முலை; உம் கண் இருத்தி அமர் கையொடே - உமது கண்ணை இறுக்கிப் பொதிந்துள்ள கைகளோடே.

## 234

கருப்பைப் புகாம லடியரைக் காக்கின்ற கந்தனடி
விருப்பை மறாத வியன்செம்பி நாடன் விழுமியர்சூழ்
இருப்பை விடாதொளிர் சீராச ராச னெழில்வரையீர்
பொருப்பை யுருவு மெனவோசெவ் வேலைப் புதைப்பதுவே.

கருப்பை - கருவளரும் பை; கருப்பைப் புகாமல் - பிறவியை அடையாமல்; கந்தன் - முருகன்; மறாத - மறவாத; வியன் செம்பி நாடன் - மிக விரிந்துபரந்த செம்பி நாட்டுக்கு உரியவன்; விழுமியர் சூழ் இருப்பு - சிறந்த அறிவு படைத்த புலவர்கள் சுற்றிலும் இருக்கும்படி நடுநாயகமாக வீற்றிருக்கும் இருக்கை; ஒளிர்தல் - விளங்குதல்; பொருப்பு - மலை; உருவும் - ஊடுருவிச்செல்லும். மலையை ஊடுருவிச் செல்லும் என்பதைக் கருதியோ செந்நிறம் படைத்த வேலாயுதத்தை ஒளித்து வைப்பது என்பது வெளிப்படை. முருகன் கிரவுஞ்ச மலைமீது வேல்வீசிய நிகழ்ச்சியை இது நினைவூட்டுகிறது. பொருப்பு - மலை, முலை; செவ் வேல் - சிவந்து காணும் வேலாயுதம்; செவ்வரி படர்ந்த வேல்போன்ற கண்; வேலைப் புதைப்பது - கண்ணை மறைப்பது.

## 235

புத்தி நிலாய புலவோ ரவைக்கம் புலியனையான்
பத்தினி யாயவட் குக்கடற் சேதுசெய் பண்ணவனை
நத்தினி யானெனுஞ் சீராச ராச னளிர்வரைவாய்ச்
சித்தினி யாயுன்னை யென்பேன் கரிமா தெரித்தலினே.

புத்தி நிலாய - அறிவு நிலைபெற்ற; அம்புலி - சந்திரன்; பத்தினி - கற்பின் திலகமாகிய சீதாப்பிராட்டி; சேது - திருவணை; சேது செய் பண்ணவன் - இராமன்; நத்து இனியான் - விரும்புகின்ற இனிய குணம் படைத்தவன்; கரிமா - எண்வகைச் சித்திகளில் ஒன்று; மிகக் கனமாதை;

கரிமா என்னும் சித்தியைக் காட்டுதலால் உன்னைச் சித்து செய்வதில் இன்பம் காண்பாய் என்று சொல்லுவன் என்பது வெளிப்படை. சித்தினி - கண்கட்டு வித்தை வல்லவள்; கண்ணை மறைத்தமை கருதி இவ்வாறு கூறினன்; சித்தினி என்பதற்குச் சிறந்த பெண் என்றும் உரைக்கலாம். கரிமா தெரித்தல் - யானைத் தந்தம் போன்ற முலைகளை வெளிப் படுத்தல்.

## 236

மலையேற்ற தோளும் மழையேற்ற கையும் மகுடமன்னர்
தலையேற்ற தாளுந் திகழ்ராச ராசன் சயிலமின்னே
கொலையேற்றி வைத்த மகரத்தை நீயுன்கைக் கொண்டதையே
உலையேற்றி யென்கைக் குதவ நின்றாயி.'. துயர்விருந்தே.

ஏற்ற - மாறுகொண்ட, ஒத்த, பொருந்திய; மழை ஏற்ற கை - மழையின் தன்மை பெற்ற கொடைக்கை; மகுடம் - கிரீடம்; தலை ஏற்ற - தலைபொருந்திய, தலைகளைத் தாங்கிய; முடிமன்னர் இராசராசனின் காலில் விழுந்து வணங்குதலால் அவர்களின் தலையை ஏற்றதாயிற்று. கொலை ஏற்றிவைத்த மகரம் - கொல்லப்பெற்ற மீன்; உலை ஏற்றி - கொதிக்கும் நீரில் இட்டு; உயர்விருந்து - சிறந்த விருந்து உணவாகும். மகரம் - மீன் போன்ற கண்; கொலை ஏற்றி வைத்த மகரத்தை நீ உன் கைக்கொண்டு - வருத்தும் தன்மை படைத்த மீன் போன்ற கண்ணை உன் கையிடத்தே பெற்றுள்ளாய்; அதையே உலை ஏற்றி - அம் மகரத்துடன் உலை என்பதைச் சேர்த்து, ம் - உலை - முலை. முலையை என் கைக்கு உதவும் பொருட்டு நிற்கின்றாய்.

## 237

அருமைத் தமிழர சாயுள்ள தன்மர பாதரிக்கப்
பெருமைப் புயல்சண் முகநாக நாதனைப் பெற்றுநலந்
தருமெய்க்க ணிற்பவன் சீராச ராசன் றடவரைவாய்
இருமைக்க ணின்பநல் கீர்நெஞ் சினிற்கோ டிருப்பதினே.

அருமை - கிட்டுதற்கு அரிய சிறப்பு; தமிழரசு - சேதுபதிகளின் அரசு தமிழரசு; தமிழ் மன்னன் ஆளுதலினால் தமிழரசாயிற்று. மரபு - குலம்; ஆதரிக்க - வளர்க்க; சண்முகநாகநாதன் - இராசராச சேதுபதியின் புதல்வர்; நலம் - நன்மை; மெய் - உண்மை; இருமை - இம்மை மறுமை. நெஞ்சில் கோடு இருப்பதினே - உமது நெஞ்சில் நடுநிலை இல்லாததால்.

நல்கீர் - தரமாட்டீர்; இரு மைக்கண் நல்கீர் - இரண்டு மைதீட்டிய கண்களையும் தரமாட்டீர்; மறைத்துள்ளீர் என்பதாம். நெஞ்சில் கோடு இருப்பதினே - உமது மார்பிடத்தே மலை போன்ற முலை இருப்பதனால். மலை பார்வையைத் தடுக்கிறது என்பதாம்.

## 238

தகர மிரண்டி னு மாவூர் பெயரன் றனதுசெங்கா
இகர மிரண்டு சொலும்ராச ராச னெழில்வரையீர்
மகர மிரண்டுங் கரமிரண் டுங்கொள் வதுதெரிப்பீர்
சிகர மிரண்டெங் கரமிரண் டுங்கொளல் தேற்றுவனே.

தகரம் இரண்டினும் ஆ ஊர் பெயரான் - தாதா; இகரம் இரண்டு - இரண்டு அரை ஒன்று; நா இகரம் இரண்டு சொலும் - நா ஒன்றே சொல்லும்; எழில் - அழகு; மகரம் - மகரமீன்; கரம் - கை; கைகள் இரண்டும் கண்களைப் பற்றிக் கொள்வதைக் காட்டினீர்; கண்களை மறைத்துள்ளீர் என்பதாம்; சிகரம் இரண்டு - மலை முகடு இரண்டு; இரு முலைகள்; நான் தனம் இரண்டையும் கையில் பற்றிக்கொள்வேன் என்பதாம்.

## 239

கரை தலைக் கொண்ட கடல்போற் பெரும்படைக் காவலவன்
தரைதலைக் கொண்ட புகழாள னின்பந் தருமதியம்
புரைதலைக் கொண்ட குடைராச ராசன் பொருப்பனையீர்
வரைதலைக் கொண்டவர்க் கெல்லாம்பல் லக்கரம் வாய்ந்ததுவே.

கரைதலைக் கொண்ட கடல் - ஒலிக்கின்ற கடல்; காவலவன் - காப்போன்; தரைதலைக் கொண்ட புகழாளன் - பூமி முழுவதும் பரந்த கீர்த்தியுடையவன்; இன்பம் தரு மதியம் - மகிழ்ச்சி தரும் பூரணச் சந்திரன்; புரைதலைக் கொண்ட - ஒத்துள்ள; மதியம் புரைதலைக் கொண்ட குடை - வெண்கொற்றக் குடை; வரைதலைக் கொண்டவர்க்கு - எழுதுதலை மேற்கொண்டவர்க்கு; பல் அக்கரம் - பல எழுத்துக்கள்; வரை - மலை, முலை; வரை தலைக்கொண்டவர் - முலைகளை முதன்மையாகக் கொண்டுள்ளவர்; பல்லம் கரம் வாய்ந்தது - அம்பு போன்ற கண் கைகளில் பொருந்தியது.

## 240

கடியார் முகவைப் பதிராச ராசன் கரந்தையன்னீர்
செடியார் பெருதவல் லாரை மேற்கொண்டு சிறிதுமில்லாக்
கொடியார் பணக்கா ரரைக்கீழ்ப் படுத்திய கொள்கைகண்டோ
ஒடியாத பார்ப்பாரு மங்கைய ராயிங் கொளித்தனரே.

கடி ஆர் - காவல் நிறைந்த; மணம் மிகுந்த; செடியார் பெறாத - பாவமுள்ளவர் அணுகாத; வல்லார் - வல்லவர், நல்லார்; சிறிதும் இல்லாக் கொடியார் - இரக்கம் சிறிதும் இல்லாத கொடியவர்; பாவமுள்ளவர்கள் அணுகாத வல்லாரை மேலாதிக்கங் கொண்டு பணக்காரரை அடக்கிய செயலைப் பார்த்தோம் என்பது வெளிப்படை. ஒடியாத - தளராத; பார்ப்பார் - பிராமணர், புண்ணியவான்கள்; பார்ப்பாரும் பெண்களைப் போல்பவராய் மறைந்தனர் என்பதாம். செடி - நெருக்கம்; ஆர்பெறாத - ஆர்த்தலைப் பெறாத; கச்சினால் கட்டப்பெறாத; வல்லார் - சூதாடு கருவி போன்ற முலையார்; மேற்கொண்டு - மார்பின் மேலே பெற்று; சிறிதும் இல்லாக் கொடியார் - இடை சற்றும் இல்லாத கொடிபோன்ற மகளிர்; பணக்காரர் - பாம்பின் படம் போன்ற அல்குலினையுடையார்; ஒடிதல் - ஒளிசெய்தல்; ஒளி செய்தலை விடாத கண்ணார் உள்ளங்கைக் குட்பட்டவராய் மறைந்தனர் என்க.

## 241

பஞ்ச முலகு புகாமற் புரப்பவன் பைந்தமிழோர்
விஞ்ச முகனமர்ந் தீபவ னெற்கு விழுத்துணையுள்
வஞ்ச முருதவன் சீராச ராசன் வளவரையீர்
நெஞ்ச முருகிடங் கண்டனம் வெம்மைக்கண் ணேர்கையினே.

புரப்பவன் - காப்பவன், விஞ்ச - செல்வம் முதலியவற்றால் மேன்மையுற; முகனமர்ந்து - முகம் மலர்ந்து; விழுத்துணை - சிறந்த துணை; உள் - மனம்; வஞ்சம் - வஞ்சனை; நெஞ்சம் உருகிடம் கண்டனம் வெம்மைக்கண் நேர்கையினே - வெப்பமான இடத்தில் பொருந்துகையினால் உடம்பு வியர்வையினால் தளர்தலைப் பார்த்தோம். நெஞ்சம் முருகிடம் கண்டனம் - நெஞ்சம் - மார்பு; முருகிடம் - முருகனது இருப்பிடம், குறிஞ்சி; மலைபோன்ற முலைகளைக் கண்டோம் என்பதாம். வெம்மைக் கண் நேர் கையினே - கொடிய கரிய கண் கையில் பொருந்துகையினால்.

## 242

ஈழமுங் கொங்குங் கயவேட்டை யாடி யிசைபெருக
வாழுமெஞ் சேது பதிராச ராச மதன்வரையீர்
தாழுநல் லேழைய ராயினு நீரோ தனமளித்தீர்
மாழை வடுவு மளித்தாலன் றோசுவை வாய்ப்பதுவே.

ஈழம் - ஈழநாடு, இலங்கை; கொங்கு - கொங்குநாடு; கயவேட்டை - யானை வேட்டை; இசை - புகழ்; மதன் - மன்மதன்; நீரோதனம் - நீர்விட்ட பழஞ்சோறு; மாழைவடு - மாவடு; தாழ்ந்த நிலையில் வறுமை யுடையராயினும் நீர் கலந்த பழஞ்சோற்றைத் தந்தீர்; மாவடு ஊறுகாயும் அளித்தாலல்லவா சுவை பயக்கும் என்பது வெளிப்படை; தாழும் நல் ஏழையர் ஆயினும் - கூந்தல் தாழும் நல்ல பெண்களாயினும்; நீரோ தன மளித்தீர் - நீர் முலைகளைத் தந்தீர்; மாவடுவும் அளித்தால் - மாவடு போன்ற உம் கண்ணையும் அளித்தால்; சுவை வாய்ப்பது - இன்பம் கிட்டுவது.

## 243

கள்ளமி லாதரா சாராம பாண்டிய காமன்முன்னோன்
வள்ளன்மை மிக்கவன் சீராச ராசன் மலையணையாய்
உள்ள மிளகா யெனநிற்பை சிந்தக முன்கையுண்டால்
ஒள்ளிய வின்புளி வேண்டெற் குவரை யுதவலென்னே.

கள்ளம் - வஞ்சனை, குற்றம்; ராசாராமபாண்டியன் - இராசராச சேதுபதியின் தம்பி; முன்னோன் - தமையன்; வள்ளன்மை மிக்கவன் - கொடைத்தன்மையால் சிறப்புற்றவன்; உள்ளம் மிளகாய் என நிற்பை - உள்ளத்தால் மிளகாய் போலக் கடுமையாய் நிற்பை; சிந்தகம் உன்கை உண்டால் - புளி உன்கையிடத்தே உண்டு; உவர் - உவர்ப்பு, உப்பு; நன்றாகச் சமைத்த இனிய புளிக்குழம்பை விரும்புகிற எனக்கு உப்பைத் தருவது ஏன் என்பது வெளிப்படை. உள்ளம் இளகாய் என நிற்பை - மனம் இரங்குவாய் எனக் கேட்கவும் ஒன்றும் பேசாது நிற்கிறாய்; சிந்தகம் - கடல், கடல் போன்ற கண்கள்; ஒள்ளிய இன்பு உளி வேண்டு எற்கு - சிறந்த இன்பத்தை எண்ணி வேண்டிய எனக்கு; வரை உதவல் என்னே - மலைபோன்ற முலைகளை மட்டும் தருதலால் என்ன பயன்.

## 244

பொங்குசந் தானந் தழைராச ராசன் புவியிற்றன்மந்
தங்குசங் காழித் தநுக்கோடி காவலன் றுள்வரைவாய்
இங்குசம் போகம் விழைவேன் மனமா மிபமறுக
வங்குசம் விட்டுவில் லம்புகைப் பற்றலென் றாரணங்கே.

சந்தானம் - சந்ததி; தன்மம் - தருமம்; சங்கு ஆழித் தனுக்கோடி - சங்குகள் நிறைந்த கடல் சூழ்ந்த தனுக்கோடி; சம்போகம் - இனிய இன்பம்; புணர்ச்சி. விழைவேன் - விரும்புவேன்; மனம் ஆம் இபம் மறுக - மனமாகிய யானை துன்புற; மறுக - சுழல, நெருங்க; [illegible] [illegible] அங்குசம் என்னும் ஆயுதத்தைக் கைவிட்டு வில்லையும் அம்பையும் கைக் கொண்டிருப்பது ஏன் என்பது வெளிப்படை; அம் குசம் - அழகிய முலைகள்; வில் அம்பு - புருவத்திற்கும் கண்ணிற்கும் உவமை; வில்லம்பு கைப்பற்றல் என்றது கையால் கண்ணை மறைத்தமையைக் குறிப்பித்தவாறாம்.

## 245

பொருவரை யில்லா மறவர்க்கு வேந்தன் புலவருக்குத்
தருவரை யில்லாக் கொடைராச ராசன் றடங்கிரிவாய்
இருவரை நேரில்விட் டேநடு வற்றவ ரேவருக்கும்
திருவரை யிற்றுகி லற்று நடுவன்கை சேர்தலுண்டே.

பொருவர் - ஒப்புச் சொல்லத் தக்கவர்; மறவர் - வீரர்; தருவரை இல்லாக் கொடை - கற்பகமரம் போல அளவு இன்றித் தரும் கொடை; இருவரை நேரில் விட்டு - இரண்டு பேரை எதிர் எதிராக மோதவிட்டு; நடு அற்றவர் - நடுநிலை இல்லாதவர், இடையில்லாதவர்; ஏவருக்கும் - எவருக்கும், எத்தகையவருக்கும்; திரு அரையில் துகில் அற்று - அழகிய இடுப்பில் ஆடை நெகிழ்வுற்றால்; நடு வன்கை சேர்தல் உண்டே - இடுப்பில் தம் வலிய கை உடனே சென்று சேர்வது உண்டு. இரு வரை நேரில் விட்டு - இரண்டு மலைபோன்ற முலைகளை என் எதிரில் தாக்க விடுத்து; நடு அற்றவர் - இடையில்லாதவர்; திரு அரையில் துகில் அற்று - அழகிய இடையில் ஆடையில்லாமல்; நடுவன் - கூற்று, கண்.

## 246

தெளித்துச் சொல்வல்ல சீராச ராசன் செகமுழுதும்
குளித்துப் பவத்தைத் துடைக்கும் தெய்வத்தநுக் கோடியன்னீர்
களித்துப் பருகிட வாருமென் ருற்கட் கடையடையா
தளித்துக் குடங்க ளுதவுதல் சான்ருேர்க் கழகென்பவே.

தெளித்துச் சொல் வல்ல - தெளிவாக எடுத்துச் சொல்லுதலில் வல்ல; செகம் முழுதும் - உலகம் எல்லாம்; உலகத்தாரெல்லாம்; பவம் -

பிறப்பு; துடைக்கும் - போக்கும்; தெய்வத்தனுக்கோடி - தெய்வத் தன்மை பெற்ற தனுக்கோடித் துறை; களித்துப் பருகிட - மகிழ்ந்து குடிப்பதற்கு; வாரும் - ஊற்றுங்கள், ஒழுக்குங்கள்; கட்கடை - கள்ளுக் கடை; குடங்கள் உதவுதல் - குடத்திலுள்ள கள்ளைத் தருதல்; சான்றார் - நற்குணமுடையார்; கள் இறக்கும் தொழிலுடைய சாணார். பருகிட வாரும் - அனுபவிக்க வாருங்கள்; கண்கடை அடையாது - கண்ணின் வாசலைச் சாத்தாது; அதாவது கண்ணை மறையாது; குடங்கள் உதவுதல் - குடம் போன்ற முலைகளைத் தருதல்.

## 247

கோலுள வாய பசுநிரை மிக்கவன் பார்புரக்குங்
கோலுள செங்கையன் சீராச ராசன் குளிர்வரைவாய்
ஆலிலை மேலகலத் தாதன மிட்டனை யெனின்கண்
மேலுள வாய பலகையை யீந்திலை மின்னணங்கே.

பசுநிரை - பசுக்கூட்டம்; கோல் - செங்கோல்; ஆலிலை மேல கலத்து ஆது அனம் இட்டனை - ஆலிலையாலான உண்கலத்துச் சமைத்த அன்னத்தைப் பரிமாறினாய்; எனின் கண்மேல் உளவாய பலகையை ஈந்திலை - ஆனால், அமர்வதற்குக் கண்முன்னால் உள்ள ஆசனப் பலகையைத் தந்தாயில்லை; ஆலிலைமேல் அகலத்து ஆதனம் இட்டனை - ஆலிலை வயிற்றுக்கு ஒப்பு; வயிற்றின்கண் மேலதாகிய மார்பிடத்தே தோன்றியுள்ள முலைகளைத் தந்தாய். எனின் கண்மேல் உளவாய பலகையை ஈந்திலை - ஆனால் கண்மேல் வைத்துள்ள கைகளைத் தரவில்லை; கண் மறைத்த கையை எடுக்கவில்லை என்பதாம். மின் - மின்னல்; மின்னணங்கு - மின்னல் போன்று ஒளிபடைத்த பெண்.

## 248

கடையே மறமன்னர் கைகூப்பி நிற்பக் கவிஞர்க்கென் றுந்
தடையே யிலாதருள் சீராச ராசன் சயிலமின்னே
இடையே கெடக்கட னண்ணுகை யோடுள வேழையருக்
தடையே யிலையாக நன்கு விதன முறலியல்பே.

கடை - அரண்மனை வாயில்; கைகூப்பி நிற்க - கைகுவித்து வணங்கி நிற்க; இடையே கெட - வாழ்விடையே செல்வம் நீங்க; கடன் நண்ணுகையோடுள ஏழையருக்கு - கடன் வந்து சேர்ந்துள்ள வறிய

வர்க்கு; உடையே இலையாக - ஆடை இல்லையாக; நன்கு விதனம் உறல் இயல்பே - பெரிதும் துன்பமுறுதல் இயல்பேயாகும். இடையே கெட - இடுப்பு இல்லாதிருக்க; கடல் நண்ணு கை - கடல்போன்ற கண்ணைப்பொருந்திய கை; ஏழையர் - பெண்கள்; உடையே இலையாக - ஆடை அவிழ்ந்து விழ; நன் குவி தனம் உறல் இயல்பே - அழகிய குவிந்த முலை வெளிப்படுதல் இயல்பேயாகும்.

249

செறுபதமாக வுழுது பயன்செய் செழுங்குடிகள்
உறுபத னின்றி வரினும் மவர்குறை யோர்ந்துமுறை
பெறுபத வித்தலை வன்ராச ராசன் பெருங்கிரியார்
அறுபதங் கையுடை யாரரைப் பத்தை யளித்தனரே.

செறு - வயல்; பதமாக - மண்பக்குவமாகும் வகையில்; உறுபதன் - ஏற்ற பருவம்; பெறும் விளைவு; குறை ஓர்ந்து முறைபெறு பதவித் தலைவன் - குறைகளை நன்கு உணர்ந்து நீதி செய்யும் உயர்ந்த தலைவன்; அறுபது அங்கையுடையார் அரைப்பத்தை அளித்தனர் - அறுபது பணத்தைத் தம் கையில் உள்ளவர்; அரைப்பத்தை - பத்தில் பாதி, ஐந்தை என்றவாறு. அறுபதம் அங்கையுடையார் - வண்டு போன்ற கண்களைக் கையில் கொண்டவர், அதாவது கண்ணை மறைத்தவர்; அரைப்பத்தை - அரை என்பதன் குறியீடு இ; இயுடன் கூடிய பத்தை - இபத்தை; இபம் - யானை, முலை.

250

தன்மா தவனெனுஞ் சீபாற் கரற்குத் தவமகனும்
மன்மா தவனைத் தொழும்ராச ராச மகிபன்வரை
என்மா தவத்திற் கிடைத்துள் ளனள்சத்தி யங்கைக்கொண்டாள்
நன்மா துளங்கனியா ளாயின ளென்ன நான்செயலே.

தன்ம ஆதவன் - தன்மாதவன், தருமசூரியன்; தவமகன் - தவத்தால் பெற்ற முதல் மகன்; மன் மாதவன் - நிலைபெற்ற திருமால்; மகிபன் - அரசன்; என் மாதவத்திற் கிடைத்துள்ளனள் - நான் செய்த பெருந் தவத்தால் வாய்த்தனள்; சத்தியம் கைக்கொண்டாள் - உண்மையைக் கடைப்பிடிப்பவளாயினாள்; நன்மாது - நல்ல இந்தப் பெண்; உளம் கனியாளாயினள் - உள்ளம் இரங்காதவளாயினாள். சத்தி அங்கைக்

கொண்டாள் - வேல்போன்ற கண்ணைக் கையால் பற்றினாள்; நன் மாதுளங்கனி ஆயினள் - அழகிய மாதுளங்கனிக்கு ஒப்பாம் முலைகளை உடையளாயினாள்.

## 251

அறைந்துள்ள வாறு செயாரை வினையி லமைத்தலிலான்
நிறைந்துள்ள நீடிரு வோன்ராச ராச நெடுங்கிரிவாய்
மறைந்துள்ள வாறு பதத்தி னிலைமை வகுத்தறியேன்
திறந்துள்ள செப்பீ ரருத்தம் படநிற்றல் தேர்ந்தனனே.

அறைந்துள்ளவாறு - சொல்லியபடி, ஆணையிட்டபடி; நீள் திருவோன் - பெருஞ் செல்வன்; மறைந்துள்ளவாறு பதத்தின் நிலைமை வகுத்தறியேன் - சொல்லில் மறைந்துகிடக்கிறபடி அதன் பொருள் நிலையைப் பாகுபட அறியேன்; திறந்து உள்ள செப்பீர் - பொருளை வெளிப்படுத்து உண்மைப்பொருளை எடுத்துச் சொல்லுவீர்; அருத்தம்பட நிற்றல் தேர்ந்தனன் - பொருள் பொருந்தச் சொல் நிற்கும் திறன் தெளிய அறிவேன். மறைந்துள்ள ஆறுபதத்தின் நிலை வகுத்து அறியேன் - ஆறுபதம் - வண்டு, கண்; கையினால் மறைப்புண்டுள்ள கண்ணின் நிலையைப் பிரித்து அறிய மாட்டேன். திறந்துள்ள செப்பீர் - வெளிப்பட்டுள்ள செப்புப் போன்ற முலையினையுடையீர்; அருத்தம்பட நிற்றல் தேர்ந்தனன் - உள்ளக்குறிப்பு வெளிப்படுமாறு நிற்பதை உணர்ந்தேன்.

## 252

தெள்ளு தமிழின் புலவோர்க் கிரும்பொன் றினம்பொழியும்
வள்ளன் முகிலெனுஞ் சீராச ராச மகிபன்வரைக்
கிள்ளை மொழியி னுலகை விலைக்கொள் கிளரொளியீர்
உள்ள தனம்விட் டலைகை யுறுத லுயர்பிலையே.

தெள்ளுதமிழ் - தெளிவான தமிழ்; இரும்பொன் - மிகுந்த பொன்; வள்ளல் முகில் - மேகம் மழை பொழிவது போல மிகுதியாய்க் கொடுக்கும் வள்ளலாகிய மேகம்; மகிபன் - அரசன்; கிள்ளை மொழி - கிளிபோன்ற மழலைப் பேச்சு; உலகை விலைக்கொள்ளுதல் - உலகத்தாரைத் தம் வசமாக்குதல்; கிளர் ஒளியீர் - பொங்கும் ஒளியினையுடையீர்; உள்ள தனம் விட்டு - கையிலுள்ள பொருளைத் தொலைத்து விட்டு; அலைகை

யுறுதல் உயர்பு இல்லை - வறுமையால் வாடி அலைதலைச் செய்வது உயர்வான செயலன்று. உள்ள தனம் விட்டு - மார்பில் உள்ள முலைகளை விடுத்து; அலை - கடல், கண்; அலை கையுறல் - கடல் போன்ற கண் களைக் கையால் பற்றியிருத்தல்.

253

பொய்க்கூடு செல்லு கிலாநன் னெறியிற் புவிபுரப்போன்
கைக்கூடு நீள்கொடைச் சீராச ராசன் கனவரைவாய்
திக்கூடு செல்லத் தெரியாது கண்கள் திசைத்தலினுன்
முக்கூட லையளித் தீருங்கள் கூடலை முன்னுமெற்கே.

பொய்க்கு ஊடு செல்லுகிலா - பொய்யின் இடையிலே செல்லுதல் இல்லாத; நன்னெறி - நல்வழி; புவிபுரப்போன் - உலகைக் காப்போன்; கைக்கூடு நீள் கொடை - கையில் பொருந்திய பெருங்கொடை; திக்கூடு - சரியான திசையில், வழியில்; திசைத்தலினால் - மயங்குதலி னால்; முக்கூடல் - முக்கூடல் என்னும் ஊர்; கூடல் - மதுரை; கூடல் நகர் செல்லக்கருதும் எனக்கு முக்கூடல் ஊருக்கு வழி காட்டினீர் என்பது வெளிப்படை. திக்கு ஊடு செல்லத் தெரியாது - திக்குடனாய ஆகாயம் போன்ற இடை நடுவே இருப்பது தெரியாது. கண்கள் திசைத்தலினால் - கண்கள் கையிடமாக அடங்கியிருத்தலால்; உங்கள் கூடலை முன்னும் எற்கு - உங்கள் புணர்ச்சியை கருதும் எனக்கு; முக் கூட லை - முவுடன் கூட லை என்றது முலை.

254

மென்றினைக் காட்டிற் கணியாகி வள்ளியை வேட்டவன்சீர்
நன்றினைக் காட்டி மகிழ்ராச ராச நரேந்த்ரன்வரைக்
கன்றினைக் காட்டிய கையீர் தரிசனங் காட்டுவதிற்
குன்றினைக் காட்டியக் கந்தனை மாற்றல் குறையுமக்கே.

மென்தினைக்காட்டில் - மெல்லிய தினைவிளையும் புனத்தில்; கணி - வேங்கைமரம்; வேட்டவன் - மணந்தவன்; வள்ளியை வேட்டவன் - முருகன்; சீர் நன்றினைக் காட்டி - முருகனின் புகழைப் பெரிதும் பேசி; நரேந்த்ரன் - மக்களின் தலைவன்; கன்று - வளை; கன்றினைக் காட்டிய கை - வளையல் அணிந்த கை; தரிசனம் காட்டுவது - மூர்த்தியைப் பார்க்குமாறு செய்வது. குன்றினைக் காட்டி அக் கந்தனை மாற்றல் -

முருகன் வீற்றிருக்கும் மலையை மட்டும் காட்டி அம் மலையில் விளங்கும் முருகனை மறைத்தல்; குறை - குறைவு, குற்றம்; குன்று - மலை போன்ற முலை; அக்கந்தனை மாற்றல் - கண்ணை மறைத்தல்; அக்கம் - கண்.

## 255

சிலைதாங்கு மேரு மலைதாங்கு கொண்ட றிருவடியி
னிலைதாங்கு மன்பினன் சீராச ராச னெடுங்கிரியாய்
கலைதாங்கு கில்லவ ராகியு மென்னேவிக் காரிகையார்
அலைதாங்கு கையு மலைதாங்கு நெஞ்சுமுண் டாயினரே.

சிலை - வில்; கொண்டல் - மேகவண்ணனாகிய திருமால்; திருவடியின் நிலைதாங்கும் - திருவடியைப் போற்றி வணங்கும்; கலை - கலை நூல்கள், ஆடை; அலை - கடல், கண்; கடலைத் தாங்குகிற கையும் மலையைத் தாங்குகிற நெஞ்சமும் கொண்டவராயினர் என்பது வெளிப்படை. அலை தாங்கு கை - கண்ணை மறைத்த கை; மலை தாங்கு நெஞ்சம் - மலைக்கொப்பாம் முலையைச் சுமந்து நிற்கும் மார்பு.

## 256

போதுக் குவந்த மடவார்க் கிசைக்குப் புவிக்குப்புண்ய
சேதுக்கு நாயகன் சீராச ராசன் சிலம்பிற்றெய்வ
மாதுக் கனையீ ருமைப்பே தையரென்று வைத்ததற்கோ
ஏதுக்கு நீர்நுங்கண் மூடத் தனம்வெளி யிட்டதுவே.

போதுக்கு உவந்த மடவார் - தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள், கலைமகள்; இசை - புகழ்மாது; புவி - நிலமாது; புண்ய சேது - புண்ணியம் பயக்கும் சேதுத்துறை; நாயகன் - தலைவன்; செல்வம், கல்வி, புகழ், பூமியாட்சி, புண்ணியம் இவற்றை உடையன் என்பதாம். சிலம்பு - மலை; தெய்வ மாதுக்கு அனையீர் - தெய்வப் பெண்ணை ஒத்துள்ளீர்; பேதையர் - அறிவற்றவர்; பேதைமைக் குணமுடைய பெண்டிரையும் குறிக்கும். பேதையர் என்று பெயர் படைத்ததனாலா உங்கள் மூடத்தனத்தை வெளிப்படுத்தினீர் என்பது வெளிப்படை: மூடத்தனம் - அறியாமை; நும் கண்மூடத் தனம் வெளியிட்டதுவே - உமது கண்ணை மறைத்து முலையை வெளிப்படுத்தியது.

257

நீர்வள நாடு புரந்த வளவர் நெடுந்துணையாய்ப்
போர்பல வென்ற சிலைமற வோரிற் புலியனையான்
தேர்வலஞ் செய்ய வருராச ராசன் றிருவரையாய்ப்
பார்வலுள் ளாரிவர் பார்வல்கொள் ளாரென்ன பண்புடைத்தே.

நீர்வள நாடு - புனல் நாடாம் சோழநாடு; வளவர் - சோழர்; நெடுந்துணை - பெரிய துணைவலி; பார் வலுள்ளார் - பூமியில் மிக வலுவுள்ளவராகிய இவர்; பார்வல் கொள்ளார் - பிறரைக் கண்பார்த்தல் செய்யார், அதாவது பிறரை ஆதரியார். இது என்ன பண்புடைத்து - இது எத்தகைய பண்புடைமையாகும். பண்புடைமை ஆகாது என்பதாம். பார்வல் உள்ளார் - பார்த்தலை நினையார்; கண்ணை மறைத்துப் பாராது நின்றனர்; பார் வல் கொள்ளார் - பருத்த சூதுகாய் போன்ற முலைகளை மறைத்துக்கொள்ளாது விடுத்துள்ளார்.

258

நத்தலை வைத்த தடஞ்சூழ் முகவை நகர்க்கதிபன்
மெய்த்தலை வைத்த புகழ்ராச ராசமன் வெற்பனையாய்
முத்தலை வைத்தலை மட்டு மெமக்கு முனந்தெரித்தாய்
அத்தலை வைத்த பெருவேலை யென்கொ லடைத்ததுவே.

நத்து அலை வைத்த - நத்தையை அலைகளிடத்தே கொண்ட; நத்தலை வைத்த - விரும்புதலைக்கொண்ட என்றும் ஆம்; தடம் - தடாகம்; மெய்த்தலை வைத்த புகழ் - உண்மையின்பாற்பட்ட புகழ்; முத்து அலை வைத்தலை மட்டும் எமக்கு முனம் தெரித்தாய் - முத்து அலை களால் கொண்டு வந்து வைத்தலை மட்டும் எனக்குக் காட்டினாய்; அத்தலை வைத்த பெருவேலை என்கொல் அடைத்தது - அவ்விடத்தே பொருந்திய கடலை அடைத்தது ஏன். முத் தலைவைத்த லை - முலை முதலிலே பெற்ற லை - முலை; முலைமட்டும் முன்பு எனக்குத் தெரியக் காட்டினாய். அத்தலை வைத்த பெருவேலை - அந்தத் தலையின்கண் கொண்ட பெரிய கடல் போன்ற கண்களை.

259

போர்ப்பா லருச்சுன னுள்ளந் தெளிந்து பொரவிசைத்த
தேர்ப்பாகன் கீதை தெளிராச ராசன் றிருவரைவாய்
நேர்ப்பா கத்தம் மொத்த வரையடைந்து நிலைக்கொளினும்
பார்ப்பாரைப் பார்ப்பார்கள் பாராரைப் பாராரிப் பாரிடத்தே.

போர்ப்பால் - பாரதப்போரில்; பொர - போர் செய்யும்படி; தேர்ப் பாகன் - தேர்ப்பாகனாக இருந்த கண்ணன், பார்த்தசாரதி. நேர்ப்பாக - முயற்சியாக, சிறப்பாக; முயற்சியுடன் தம்மொத்த பிறரைச் சேர்ந்து நிலைபெற்றிருந்தாலும் தம்மை ஆதரிப்பவரையே ஆதரிப்பர்; தம்மை நோக்காத மற்றையாரை யார்தாம் இவ்வுலகத்தில் கவனிப்பர் என்பது வெளிப்படை. பார்ப்பார் - நோக்குபவர், ஆதரிப்பவர். நேர்ப்பு ஆகத் தம் ஒத்த வரை அடைந்து நிலைக்கொளினும் - நேர்த்தியாக ஒன்றோ டொன்று ஒத்துக் காணும் மலைபோன்ற முலைகளைப் பெற்று நிலையாக நிற்பினும்; பார்ப்பாரை - கண்திறந்து பார்ப்பாரை; பாரார் - கண்ணை மறைத்துப் பாராதவர்; பாரிடம் - உலகம்.

## 260

பாபத்தைப் போக்குந் தனுக்கோடி காவலன் பாவலர்சந்
தாபத்தைத் தீர்ப்பவன் சீராச ராசன் றடங்கிரிவாய்த்
தீபத்தை வெல்லொளி யாய்நல்ல கோவினைத் தேடுமெற்குக்
கோபத்தை மிக்க பகடளித் தாயுன் கொடைமைநன்றே.

பாவலர் - பாவில் வல்ல புலவர்; சந்தாபம் - மனத்துயரம்; தடங்கிரி - பெரிய மலை; தீபம் - விளக்கு; கோ - பசு, கண்; கோபத்தை மிக்க - சினம் மிகுந்த; பகடு - எருது, காளை; நல்ல பசுவைத் தேடுகிற எனக்குக் கோபம் மிகுந்த காளையை அளித்தாய்; உன் கொடை மிக நன்றாயிருந்தது; பொருத்தமின்று என்பதாம். கோவினைத் தேடும் எற்கு - கண்ணை விரும்புகிற எனக்கு; கோபம் - ஒருவகை ஆடை. கோபத்தை மிக்க - மேலாடையைவிட்டுப் பொங்கி வெளிப்பட்ட. பகடு யானை; முலை. கொடைமை - கொடைத்தன்மை.

## 261

மநுக்கோடி லாதுல கம்புரக் கின்றவன் வஞ்சகரை
யனுக்கீடி லாப்புகழ்ச் சீராச ராச னணிவரைவாய்த்
தநுக்கோ டியதுன்கை வந்து மலையா சலம்வரலால்
இனிக்கூட லும்வரு மன்பின்வை கைமட்டு மீந்திடினே.

மநுக்கோடிலாது - மநுநீதி தவறாமல்; புரக்கின்றவன் - காப்பவன்; அனுக்குதல் - வருத்துதல்; ஈடு இலாப் புகழ் - ஒப்பு இல்லாப் பெரும் புகழ்; மலையாசலம் - மலையமலை, பொதியமலை; கூடல் - மதுரை;

வைகை - வைகை நதி. தநுக்கோடித்துறை உன் கைவசமுள்ளது; பொதியமலையும் அதுபோன்றே உனக்கு உரித்தாயிற்று; பின் வைகை நதியையும் வசப்படுத்தினாய்; இனிக் கூடல் நகரும் உன் கைவசமாகும் என்பது வெளிப்படை. தநுக்கோடியது - வில்லைப்போன்று வளைந்த புருவத்துடன் கூடியதாகிய கண்; மலை ஆசு அலம்வரலால் - மலை போன்ற முலையாகிய பற்றுக்கோடு சுழன்று எழுதலால்; அன்பின் வைகைமட்டும் ஈந்திடின் - அன்போடு பண்ணின்மேல் வைத்த கையைத் தந்தால்; கூடலும் வரும் - புணர்ச்சியும் நேரும்.

62

வருகாலை ஞாயிறும் மாலை மதியமு மானவொளி
பெருகாலை நீர்செம்பி நாடாள் வரோதயன் பிஞ்ஞகனார்
இருகாலை யுந்தொழுஞ் சீராச ராச னிருங்கிரியீர்
முருகாலை யங்கண் டனம்வரு ணாலய முன்னுதுமே.

வருகாலை ஞாயிறு - உதித்துவருகிற இளஞ்சூரியன்; மாலை மதியம் - மாலையில் தோன்றுகிற சந்திரன்; மான - ஒப்பாக; ஒளிபெருகு செம்பிநாடன், ஆலைநீர் செம்பிநாடன் என்க. ஆலை - கரும்பு, கரும்பாலை; வரோதயன் - தெய்வ வரத்தால் பிறந்தவன்; பிஞ்ஞகனார் - சங்கரிப்போராகிய சிவனார்; முருகு - முருகன்; முருகு ஆலயம் கண்டனம் - முருகனுடைய ஆலயத்தைத் தரிசித்தோம்; வருணாலயம் - வருணனது இருப்பிடமாகிய கடல்; வருணாலயமும் காணக் கருதுகிறோம் என்பதாம். முருகாலயம் - முருகன் உறைவிடமாகிய குறிஞ்சி நிலம், மலை, மலைக்கு ஒப்பாம் முலை; வருணாலயம் - கடல்; கண்ணுக்கு ஒப்பு.

263

மடமுடை யாரை விடுத்தறி வான்மதி மானுவருக்
கிடமுடை யானென் றும்வற் றுதுலக மினிதருத்துந்
தடமுடை யானெங்கள் சீராச ராசன் றமிழ்வரையாய்
படமுடை யார்பட மில்லார் கடன்மன்கைப் பட்டதினே.

மடமுடையார் - அறியாமையையுடையவர்; விடுத்தறிவான் - கைவிட்டறிவான்; சேரவிடமாட்டான்; மதி மானுவர் - அறிவால் மிக்கவர்; இடமுடையான் - இடம் தந்து ஆதரிப்பான்; அருத்தும் - உண்பிக்கும்; தடம் - தடாகம், பேரேரி. படமுடையார் - பாம்பின் படம்போன்ற

அல்குலினை யுடையவர்; படம் - யானை முகபடாம்; படம் இல்லார் - முகபடாத்திற்கு இருப்பிடமானவர்; யானை; அதாவது முலை. கடல் - கண்; கடல்போன்ற கண் கையகத்துப் பொருந்தியதனால்.

**264**

நற்றன மென்பது கல்வி யதன்பய னல்லொழுக்கென்
றுற்றன சொல்லி யுயர்புல வோரை யுயிர்த்துணையாப்
பெற்றன னாகின்ற சீராச ராசன் பெருங்கிரிவாய்க்
கற்றன மென்பதென் னாகுங்கண் மேயின கையருக்கே.

நற்றனம் என்பது கல்வி - சிறந்த செல்வம் என்று சொல்லப்படுவது கல்வியே; கல்வியின் பயன் நல்லொழுக்கமாகும்; உற்றன - நேர்ந்தவை, ஏற்புடையவை; உயிர்த்துணை - நெருங்கிய நட்பு; உற்றுழி உதவும் நண்பன். கற்றனம் என்பது என்னாகும் - படித்தோம் என்பதனால் என்ன பயனாகும்; கண்மேயின கையர் - செருக்கு மிக்க கீழோர்; கல் தனம் -மலைக்கு ஒப்பாம் முலை; கண் மேயின கையர் - கண்ணைப் பொருந்தின கையையுடையவர்.

**265**

புடமொன்று பொன்னைப் பொருந்தவத் தோர்கள் புகவருந்த
இடமொன்று சத்திரம் பன்னூ றமைத்தா ரிருங்குலத்துத்
திடநின்ற கற்பகஞ் சீராச ராசன் றிருமலையில்
விடமின்றி நாகம் விடுத்தலி னேர்பய மேவலனே.

புடம் ஒன்று பொன் - நெருப்பில் புடமிடப் பெற்ற மாற்று உயர்ந்த பொன்; பொரும் - ஒக்கும்; புகவு அருந்த - உணவு உண்ண; இடம் ஒன்று சத்திரம் - இடம் பரந்த அன்ன சத்திரம்; சேதுபதி குலத்தார் நூற்றுக்கணக்கான அன்னசத்திரம் கட்டி வைத்தோராவர். திடம் நின்ற கற்பகம் - வலிமையொடு நின்ற கற்பகமரம் போல் கொடையாளன்; விடம் - நஞ்சு, கண்; நஞ்சில்லாமல் பாம்பை விட்டதனால் பொருந்திய பயனைப் பெற்றிலேன் என்பது வெளிப்படை. நாகம் - பாம்பு, மலை; நஞ்சு போன்ற கண் இல்லாமல் மலை போன்ற முலையை விடுத்ததனால் சரியான பயன் கிட்டவில்லை என்றவாறு.

## 266

மண்ணுள வேந்தர் தொழுஞ்சேது காவலன் வண்புலவோர்
எண்ணுள கீர்த்தி நிறைராச ராச னெழில்வரைவாய்ப்
பெண்ணுளர் யாரையும் வெல்லிய லாயுனைப் பேணிக்கண்டார்
கண்ணுள ரென்றுசொல் லார்சூத ரென்றே கழறுவரே.

மண் உள வேந்தர் - பூமியை ஆளும் மன்னர்; வண்புலவோர் எண்ணுள கீர்த்தி - தமிழ்வளம் பெற்றவர் கருதிப் போற்றும் புகழ்; எழில் - அழகு; பெண்ணுளர் யாரையும் வெல் இயலாய் - பெண்பாலார் எல்லாரையும் வெல்லும் தன்மை படைத்துள்ளவளே; விளி; பெண்கள் நாயகம் என்றபடி. கண்ணுளர் - இரக்கமுற்றவர், கண்பெற்றவர்; சூதர் - வஞ்சகர்; சூதுகாய் போன்ற முலையினையுடையவர்; கண்ணை மறைத்தமையால் கண்ணுளர் என்று சொல்லார் என்று குறிப்பிட்டான் என்க.

## 267

தடமார் வயற்செம்பி நாடாள் வரோதயன் றண்டமிழர்க்
கிடமான வனெங்கள் சீராச ராச னிருங்கிரிவாய்
விடமோர் புறத்தும் படமோர் புறத்தும் விதந்துகொண்டு
தடவாக மீதிரு வன்னுக மிங்குத் தலைப்படுமே.

தடம் - தடாகம்; ஆர் - நிறைந்த; வரோதயன் - தெய்வ வரத்தால் பிறந்தவன்; விடம் - நஞ்சு, கண்; படம் - பாம்பின் படம், அல்குல்; தடவாகமீதில் - பெரிய மேட்டின் மேல்; இரு வல் நாகம் - இரண்டு வலிய பாம்பு; தலைப்படும் - வெளிப்படும்; எதிர்ப்பட்டுத் தோன்றும். தட ஆகம் மீது - பரந்த மார்பின் மேல்; இரு வல் நாகம் - இரண்டு வலிய யானை; அதாவது யானைத் தந்தம் போன்ற முலை.

## 268

மண்ணிய ஞடு பலவுந் தொழுது வழிபடுஞ்சீர்ப்
புண்ணிய நாடு புரக்கின்ற சேது புரந்தரன்யாம்
பண்ணிய நற்றவஞ் சீராச ராசன் பருப்பதத்தே
கண்ணிய ரல்லிர் மலையத் தனைதனங் கண்டுமென்னே.

மண் இயல் நாடு - உலகில் உள்ள நாடு; நாடு இங்கே ஆகு பெயராய் நாட்டாரைக் குறித்தது. தொழுது வழிபடும் - வணங்கி வழி

படுதலைச் செய்யும்; புண்ணிய நாடு - நன்மை தழைத்த செம்பிநாடு; சேதுபுரந்தரன் - சேதுகாவலன்; யாம் பண்ணிய நற்றவம் - நாம் செய்த நல்ல தவப்பயன் ஆவார்; கண்ணியர் - கண்ணியமானவர்; மலையத்தனை தனம் கண்டும் - மலையளவான பெருஞ் செல்வத்தைச் சேர்த்து வைத்தும்; என்னே - என்ன பயன்; கண்ணியரல்லிர் - கண்ணை யுடையவரல்லீர்; தனம் - முலை.

## 269

வகுந்தன பாயனைப் பாவெங்குஞ் செய்த வரோதயனுட்
புகுந்தனங் துஞ்சு வயற்செம்பி நாடன் புலவருக்குத்
தகுந்தன நல்குறுஞ் சீராச ராசன் றடவரைவாய்
மிகுந்தன மென்பதுண் டோகை யினிற்கடன் மேயபின்னே.

வகுந்து - பகிர்ந்து; அனபாயன் - அனபாய சோழன்; வரோதயன் - வரத்தின் பயனாய்ப் பிறந்தவன்; அனம் - அன்னம்; துஞ்சு - உறங்குகிற; தகுந்தனம் - ஏற்ற பல செல்வம்; கடன் கையினில் மேயபின் - கடனைக் கைப்பற்றியபின்; மிகும் தனம் என்பது உண்டோ - மிகுந்த செல்வம் என்பது சிறந்து நிற்பது உண்டோ; சிறவாது என்பதாம். கையினில் கடல் மேயபின்னே - கையில் கடல் போன்ற கண்ணைப் பொருந்தியபின், அதாவது கண்ணை மறைத்தபின்; மிகும் தனம் என்பது உண்டோ - கதித்து வெளிப்படும் முலை என்பதனால் பயன் உண்டோ.

## 270

கழித்தலைப் புன்னையி லன்னங் கருவென்று கண்மயங்கக்
கொழித்தலை முத்தங் குவிக்குங் கடற்றுறைக் கொண்கனிசை
செழித்தலை வேட்ட கொடைராச ராசன் றிருமலைவாய்
விழித்தலை வேண்டினன் றூங்கலைத் தந்தனை மெல்லியலே.

கழித்தலை - உப்பங்கழிக்கரை; கரு - முட்டை; புன்னைப்பூவைக் கண்ட அன்னம் அதனைத் தன் முட்டை என மயங்கியது. அன்னத்தின் முட்டைபோன்ற உருவினது புன்னைப் பூவாதலின். கண் மயங்க - கண்பார்த்து வியந்து மயங்கும்படி; கொழித்து அலை முத்தம் குவிக்கும் - அலையால் தள்ளி முத்துக்களைக் கரையில் கொண்டு வந்து குவிக்கும்; கொண்கன் - நாயகன்; இசை செழித்தல் - புகழ் வளர்தல்; வேட்ட - விரும்பிய; விழித்தல் - கண் விழித்திருத்தல்; தூங்கல் - உறக்கம்;

விழித்திருத்தலை விரும்பினேன், ஆனால் நீ உறங்குதலைத் தந்தாய் என்பது வெளிப்படை; விளித் தலே வேண்டினன் - கண்ணை முற்பட விரும்பினேன்; தலைவி கண்மூடியுள்ளமையால் விழித்தலை வேண்டினேன் என்றான்; தூங்கல் - யானை, முலை.

**271**

**காவா யிருந்து புவிக்கருள் பாற்கரன் கண்டதவக்**
**கோவா யிரும்புவி யாளராச ராசன் குலவரைவாய்**
**நாவா யிருந்து மிருந்தன மென்று நணர்களம்மா**
**ஆவா விருந்த கடலிணங் காத வமயத்திலே.**

கா - கற்பகச்சோலை; தவக்கோ - தவப்புதல்வன்; நாவாய் - கப்பல்; தனம் - செல்வம், முலை; நணார்கள் - நண்ணார்கள், பொருந்தார்கள்; ஆவா இருந்த - ஆக்கத்திற்குரியதாயிருந்த; கடல் இணங்காத சமயம் - கடல் ஒத்து வாராத காலம்; கடல் கொந்தளிப்பாயிருந்தால் கப்பலைச் செலுத்திப் பிற இடங்களிலிருந்து செல்வம் தேட இயலாது என்பது வெளிப்படை. நா - நடு. நாவாய் இருந்தும் - நடுவிடத்தில் அதாவது மார்பிடத்திலிருந்தும்; நாவாய் என்பதற்கு நாவாய்ப்பறை என்று கொண்டு அப்பறை போன்ற முலை என்றும் கொள்ளலாம். கடல் இணங்காத அமையம் - கடல் போலும் கண்ணைத் திறந்து காட்டாத காலம்.

**272**

**சுரும்பாக் கியதள வாரத்தன் வென்றித் தொடைபுனேயும்**
**இரும்பாக் கியபடைச் சீராச ராச னெழிற்புகலூர்க்**
**கரும்பாக் கியமொழி மாதரசே யின்கண் காண்டலின்றேல்**
**அரும்பாக் கியமுலே யாலை முற்று மடைந்துமென்னே.**

சுரும்பு - வண்டு; தளவாரத்தன் - முல்லைமாலையுடையவன்; வென்றித் தொடை — வெற்றிமாலை; இரும்பு ஆக்கிய படை - இரும்பினால் செய்யப்பெற்ற ஆயுதம்; புகலூர் - இராசராசன் ஆளுகைக்குட்பட்ட ஊர்களில் ஒன்று; கரும்பு ஆக்கிய மொழி - கரும்புபோல் இனிக்கும் சொல்; மாதரசு - பெண்கள் நாயகம்; இனிய கண்பார்வை இல்லையேல் அரும்பாகத் தோற்றமளிக்கும் முல்லைப்பூவினால் ஆம் நன்மை முற்றும் பெற்றும் பயன் இல்லை என்பதாம். அரும்பு ஆக்கிய முலை - தாமரை அரும்பு போன்ற முலை.

273

அடலோகை மேய மறவோர் குடிக்கர சாகியிவண்
இடலோகை மேவிய பாற்கரற் குப்புவி யேந்தவந்து
மிடலோகை மிக்கவன் சீராச ராசன் மிளிர்வரைவாய்
கடலோகை மேவின போதே மலையிடர் கண்டதென்னே.

அடல் ஓகை மேய மறவர் - பகைவரைக்கொல்லுதலில் மகிழ்ச்சி மிக்க வீரர்; அடலோ கைமேய மறவர் எனின் வலிமை கைவரப்பெற்ற வீரர் என்றாம். இவண் - இவ்வுலகில்; இடல் - கொடுத்தல்; ஓகை - உவகை, மகிழ்ச்சி; மிளிர்வரை - ஒளிபடைத்த மலை; கடல் ஓகை மேவின போது - கடல் பெருக்கெடுத்துப் பொங்கிய சமயத்தில்; மலை இடர் கண்டது என்னே — மலை துன்புற்றது என்ன வியப்பு. கடலோ கை மேவின போதே - கடல் போன்ற கண் கையில் பொருந்திய போது, கண்ணை மறைத்த போது; மலை - முலை; இடர் கண்டது - ஒன்றுடன் ஒன்று மோதித் துன்புற்றது.

274

ஏற்றினைப் போன்றிகல் வாரண மேறி யெதிர்ந்தபகைத்
தூற்றினை வெட்டிய கோன்றள வாய்வழித் தோன்றல்வையை
யாற்றினைப் பெற்றவன் சீராச ராச னணிவரையீர்
கூற்றினை மாற்றினர் வல்வம்ப ரென்னுங் குவலயமே.

ஏறு - ஆண்சிங்கம்; இகல் வாரணம் - போர் செய்தலில் வல்ல யானை; மாறுபாடு கொண்ட யானை; தூறு - புதர்; பகைத்தூறு - பகைவராகிய புதர்க் காடு; வெட்டிய - அழித்த; தளவாய் - வீரன்; வையை - வைகை; கூற்று - பேச்சு; கண்; வல் வம்பர் - வல்வழக்கிடுவதில் தேர்ந்தவர்; குவலயம் - பூமி, உலகத்தார்; கூற்றினை மாற்றினர் - யமன்போல் வருத்தும் கண்ணைக் கையால் மறைத்தார்; வல்வம்பர் - வல்லுக் காய் போன்ற முலைகளுடன் கச்சினையும் உடையவர்; வம்பு - கச்சு.

275

ஏதஞ்ஞு வெல்லப் படாவிகல் வேந்த ரிருங்குடியிற்
புதஞகை விஞ்சிய சீராச ராசன் புனல்வரைவாய்
மதனுணை முற்று மிருள்வந்த போதில் வருமல்லது
மதனுணை மேவுகை யாலிருள் போந்ததென் மாதரசே.

இருங்குடி - பெருங்குலம்; புதனாக - புதன் கிரகமாக, புதல்வனாக; விஞ்சிய - மேம்பட்ட; புனல் - அருவி; மதன் ஆணைமுற்றும் இருள் வந்த போதில் வரும் - மன்மதனுடைய ஆணைகை இருள்வந்த இராப் பொழுதில்தான் நேரும்; அவ்வாறிருக்க மதன் நாணை மேவுகையால் இருள் போந்ததென் - மன்மதன் நாணைப் பொருந்துதலால் இருள் வந்தது ஏன் ; மதன் நாண் மேவு கை - வண்டைப் பொருத்தும் கை; கண்ணை மறைத்த கை; இருள் - மன்மதனின் யானை; இங்கே யானை என்றது முலைகளை.

## 276

கரும்பியல் சொல்லியர்வே டேவை வேந்தன் கனப்புயத்தி
லரும்பிய முல்லை யணிராச ராச னமர்கிரியீர்
விரும்பிய சேரரை நோக்கிவந் தேனுக்கு மெய்யளித்தும்
இரும்பொறை காட்டிப் பெருங்கடுங் கோமறைத் தீரென்னையே.

கரும்பு இயல் சொல்லியர் - கரும்பு போன்ற இனிய பேச்சினை யுடைய பெண்டிர்; வேள் — மன்மதன்; தேவை - இராமேசுவாம்; கனப் புயம் - பருத்த தோள்; அமர்கிரி - விருப்பந்தரும் மலை; சேரர் - சேர குலத்தார்; மெய்யளித்தும் - உண்மையுரைத்தும். இரும்பொறை, பெருங் கடுங்கோ என்பன பண்டைச் சேர மன்னர்களின் பெயர்கள். நான் விரும்பிய சேரரைக் குறித்து வந்த எனக்கு உண்மையைச் சொல்லியும் அச்சேரர்களுள் இரும்பொறையை மட்டும் காட்டிப் பெருங்கடுங்கோவை மறைத்துவிட்டீர்; யாது காரணம் என்பது வெளிப்படை. விரும்பிய சேர் அரை நோக்கி வந்தேனுக்கு - நான் விரும்பிய சேரும்படியான அரையாகிய அல்குலைக் கருதி வந்தேனுக்கு; மெய் அளித்து - உடம்பைத் தந்து; இரும்பொறை - பெரிய மலை, முலை; பொறை பாரம் என்றும் ஆம். பெருங்கடுங்கோ - பெரிய நஞ்சுத்தன்மை வாய்ந்த கண்.

## 277

மத்த வரைக்கரி மீதூர்ந்து வீதி வலம்வருவோன்
சித்த மெனக்கினித் தோன்ராச ராசன் றிருமலைவாய்
எத்தன் முள்ளவ ரேனுமச் சங்கை யிடைப்படுவார்
வைத்த விருட்பட் டவர்கே டிடையே மருவுவதே.

மத்த வரைக் கரி - மத்தகத்தோடு கூடிய மலைபோன்ற யானை; வீதிவலம் வருதல் - வீதியில் உலாவருதல்; சித்தம் - மனம்; எத்தனம் - முயற்சி; அச்சம் கையிடைப்படுவார் - பயத்தை இடையிலே பெற்றவர்; அச் சங்கையிடைப் படுவார் என்று பிரித்து அந்த ஐயத்தினைக் கொண்டவர் என்றும் கொள்ளலாம். வைத்த இருட்பட்டவர் - நிலைத்த துன்ப இருளிலே விழுந்தவராவர்; கேடு இடையே மருவுவதே - பெருங் கேடும் இடையே உண்டாகும். தனம் - முலை; எத்தனம் உள்ளவரேனும் - எத்தகு முலையை உடையவராயினும்; மச்சம் கையிடைப் படுவார் - மீன்போன்ற கண்ணைக் கையிடமாகக் கொண்டவர்; மச்சம் - மீன், கண்; வைத்த இருட்பட்டவர் - பார்வையின்மையால் சேர்ந்த இருளினைப் பெற்றவராவர்; கேடு இடையே மருவுவதே - இல்லாமை இடையிலே பொருந்துவதாம்; இடை - இடுப்பு.

## 278

புயத்தினிற் றீந்தள வத்திற்கு மேலும் புலவர்கவி
யுயர்த்திய சேது பதிராச ரரச னுயர்கிரிவாய்க்
குயத்தியு மாய்நல் லிடைச்சியு மாய குலக்கொடியாள்
மயற்கையி னாற்சக் கிலியாயி னாளொளி மாழ்குறவே.

புயம் - தோள்; தீம் தளவம் - இனிய முல்லை மலர்; புலவர் கவி உயர்த்திய - புலவர் பாடும் புகழ் மாலைகளை மேலாகப் பெற்ற; குயத்தியுமாய் நற்பண்புள்ள இடைச்சியுமாகிய உயர் குடிப்பிறந்த இப் பெண் மயக்கத்தால் புகழ்கெடச் சக்கிலிச்சி யாயினாள் என்பது வெளிப்படை; குயத்தி - குயவர் குலப்பெண்; இடைச்சி - இடையர் குலமகள்; மயற்கை - மயக்கம்; சக்கிலி - சக்கிலி சாதிப் பெண்; சக்கிலிச்சி. குயம் - முலை; குயத்தி - முலையினையுடையாள்; நல் இடைச்சி - நுண்ணிய இடையினையுடையாள்; குலக்கொடியாள் - கொடிபோன்ற நற்குலப் பெண்; மயல்கையினால் - மறைப்பான கையுடைமையால்; சக்கு - கண்; சக்கிலியாயினள் - கண்ணிலாதவளானாள்; ஒளி மாழ்குற - தம் அழகு குறையும் வண்ணம்.

## 279

தென்மலை போல வுயர்செம்பி நாட்டு நிருபதுங்கன்
சொன்மலை யாதவன் செந்தமி ழின்பஞ் சுவைகொள்வைகை
தன்முலை யாஞ்செம்பிச் சீராச ராசன் றடவரைவாய்
வன்முலை யாயின கோவிற் பயனில்கை வைத்திடலே.

நெல்மலை போல உயர் செம்பிநாடு - நெற்குவியல்கள் மலைபோல் விளங்கும் செம்பிநாடு; நிருபதுங்கன் - அரசர்களில் சிறந்தவன்; சொல் மலை ஆதவன் - புகழ்மலையில் விளங்கும் சூரியன்; சொல் மலை யாதவன் - சொன்ன சொல் பிழையாதவன் என்றும் ஆம்; செந் தமிழின்பம் சுவைகொள் சீராசராசன், வைகைதன்முலையாம் செம்பிச் சீராசராசன் என்க. செம்பிநாடு வைகை நதிப் பெண்ணின் முலை போல விளங்குகிறது. முலை பால் சுரந்தளித்தல்போல வைகைப் பெண் நீர் சுரந்தளிக்கிறாள் என்பதாம். வல்முலையாயின - சூதுகாய் போன்ற முலைகள் வெளிப்பட்டன; கோ - கண்; கண்ணில் கைவைத்திடலால் பயன் இல்லை என்று குறிப்பித்தவாறாம். வன்முலையாயின கோவில் பயனில் கைவைத்திடல் என்பது கல்முலைபடைத்த பசுமடியில் கை வைத் தால் பயனில்லை; பால் சுரந்தளியாது என வேறொரு பொருளும் தந்து நிற்கும்.

## 280

ஓரவ றந்த குசேலற் கனைத்து முதவுதுழாய்த்
தாரவன் பற்குனற் கோதிய கீதைத் தனியமிழ்தைத்
தேரவன் புற்றவன் சீராச ராசன் றிருவரைவாய்
ஆரவ னல்கிக் கடலைநல் காததென் னுரைணங்கே.

ஓரவறந்த - ஒருதலையாய் முற்றிலும் வறுமையுற்ற; கண்டார் எண்ணி இரங்கும் வகையில் வறுமையுற்ற; துழாய்த்தாரவன் - துளசி மாலை அணியும் திருமால், கண்ணன். பற்குனன் - அருச்சுனன்; தேர - தெளிந்தறிய; ஆரவன் நல்கி - ஆர் அவல் நல்கி - நிரம்ப அவலைத்தந்து; கடலை நல்காதது என் - கடலையைத் தராதது ஏன்; அவலும் பொரிகடலையும் சேர்த்து உண்பது வழக்கம். ஆர வல் நல்கி - முத்துமாலை அணிந்த சூதுகாய் போன்ற முலையைத் தந்து; கடல் - கடல் போன்ற கண். கடலை நல்காதது - கண்ணை வெளிப்படுத்தாதது.

## 281

இரவல்ல மேக மெனுங்கட மாக்களி றேறியுலா
வரவல்ல வன்றமிழ்ப் பாவாண ரொக்கல் மகாரதரைப்
பொரவல்ல வீர குலராச ராசன் பொழில்வரைவாய்
தரவல்லை யின்கண் டரவல்லை யல்லையென் ருழ்குழலே.

இரவும் மேகமும் யானையின் கரிய நிறத்திற்கு உவமை. கடமாக் களிறு - மதம் பொழிகின்ற பெரிய யானை; உலாவருதல் - வீதியில்

வலம் வருதல்; ஒக்கல் - சுற்றம்; மகாரதர் - பெருவீரர்; தரவல்லை - கொடுப்பதில் வல்லமையுடையாய்; இன்கண் தரவல்லையல்லை - இனிய பார்வையைப் பிறருக்கு அளிக்கவல்லாயல்லை; இன்கண் - இனிய பார்வை; அருள்நோக்கம். வல்லை தர - வல்லாம் முலைகளைத் தர; இன்கண் தர வல்லையல்லை - இனிய கண் பார்வையை வெளிப் படுத்த வல்லமையுடையாயல்லை; கண்ணை மறைத்துள்ளாய் என்பதாம்.

### 282

வஞ்சங்கைக் கொண்டவர் தன்பா லறுகா வகையுயர்ந்து
தஞ்சங்கைக் கொள்ளென் றடைந்தார்க் கெளிது தழுவுதற்கா
நெஞ்சங்கைக் கொண்டவன் சீராச ராச னெடுங்கிரிவாய்
நஞ்சங்கை நீக்கலி ரெல்லாந் தெரிந்து நயமில்லையே.

வஞ்சம் - கபடம், பொய், கொடுமை; தஞ்சம் கைக்கொள் - அடைக்கலமாக ஏற்றுக்கொள்; எளிது தழுவுதற்காம் - எளிமையாய்ச் சேர்த்துக்கொள்வதற்காம்; நம் சங்கை நீக்கலிர் - நமது ஐயத்தை நீக்கினீரில்லை; எல்லாம் தெரிந்தும் - முழுவதும் அறிந்தவராயிருந்தும்; நயமில்லை - விரும்பும் தன்மை இல்லை; நஞ்சு அம் கை நீக்கலிர் - நஞ்சுபோன்ற கண்ணிலிருந்து அழகிய கையை எடுத்தீரில்லை; எல்லாம் தெரிந்தும் - முழு அவயவமும் தெரியப்பட்டும்.

### 283

கொம்புகை வைத்த களிறூர்ந்து செங்களங் கொண்டபுகழ்
பம்புகை வல்லவர் கோன்ராச ராசன் பனிவரைவாய்
எம்புடை வெந்தன மென்றுசொ லாம லிருக்கவற்றோ
அம்புகை மாற்றினிர் வெம்பிய காமத் தழலிறைத்தே.

கொம்பு கை வைத்த களிறு - தந்தத்தின் மேல் தும்பிக்கையை வைத்த ஆண் யானை; செங்களம் - போர்க்களம்; பம்புகை - நிறைகை; பனி - குளிர்ச்சி; புடை - பக்கம்; எம் பக்கம் நெருப்பால் சுடப்பட்டோம் என்று சொல்லாமலிருக்க முடியுமோ, வருத்தும் காம நெருப்பை வீசி அழகிய புகையை அப்புறப்படுத்தினீர் என்பது வெளிப்படை. காமத் தழல் - காமமாகிய நெருப்பு; வெம்தனம் - விருப்பம் செய்யும் முலை; அம்பு கை மாற்றினிர் - அம்பு போன்ற கண்ணைக் கையால் மறைத்துத் தெரியாது செய்தீர்.

**284**

புட்காதல் செய்யும் பொழிற்றேவை வேந்தன் புலவருக்குத்
தட்காத வாயி லுடையான் பகைஞர் தளம்பெரிதென்
றுட்காத வீரன் சயராச ராச னுயர்கிரியீர்
கட்காதல் செய்கையி னூற்சூது விட்டுமென் கண்டனிரே.

புள் - பறவை; காதல்செய்யும் - விரும்பும்; பொழில் - சோலை; தட்காத - தடைசெய்யாத; தளம் - சேனை, படை; உட்காத - அஞ்சாத; கட்காதல் செய் கையினால் - கள்ளை விரும்புதல் செய்யும் ஒழுக்கமுடைமையால்; கை - ஒழுக்கம்; சூதுவிட்டும் - சூதாடலைக் கைவிட்டும்; என் கண்டனிர் - என்ன பயனைப் பெற்றீர். கள்ளும் சூதும் உடன் எண்ணப்பட்ட விதனம் என்க. கள் - வண்டு, வண்டு போன்ற கண்; சூதுவிட்டும் - சூதாடு கருவி போன்ற முலையை வெளிப்படுத்தியும்.

**285**

ஆலையி லேகன்னற் றீநீர் பொழிசெம்பி யாள்பவன்றேன்
சோலையி லேபெய்யுந் தேவைத் துறைக்குத் துரைதளவ
மாலையி லேபுயம் வாழ்ராச ராசன் வரையணங்கே
வேலையி லேயொளிப் பாரே தனத்தினை விட்டவரே.

ஆலை - கரும்பாலை; கன்னற்றீநீர் - கரும்புச்சாறு; செம்பி - செம்பி நாடு; துரை - தலைவன்; தளவ மாலை - முல்லை மாலை; வேலையிலே - தொழிலிலே; ஒளிப்பவர் - ஈடுபடாது நீங்குபவர்; தொழிலிலே ஒளிப்பவரே செல்வத்தைப் பெறாது விட்டவர் என்பது வெளிப்படை. வேல் அயிலே - வேலாகிய அயில்; கண்; தனத்தினை விட்டவர் - முலையினை வெளிப்படுத்தியவர்.

**286**

அடற்கட் செறிந்த கைவேலைக் களிற்றை யறவெறிந்தும்
உடற்கட் செறிந்த பெருவேல் பறித்துநக் கோர்குலக்கோன்
மடற்கண் ணிறைமுல்லைச் சீராச ராசன் வரையணையீர்
கடற்கண் ணிலாம லெழுமலை யித்தனை கண்டிலமே.

அடற்கட் செறிந்த கைவேல் - கொல்லுதல் தன்மை மிக்க சிறியவேல்; களிற்றை அற எறிந்தும் - யானையை இறந்து விழும் வண்ணம் வீசியும்;

உடற்கட் செறித்த - உடம்பில் தைத்த; நக்கு - சிரித்து; நக்கோர்குலம் - மறவர்குடி; மடற்கண் நிறை முல்லை - இதழ்களில் தேன் நிறைந்திருக்கும் முல்லைப் பூ; கடற்கண்... கண்டிலமே - கடலிடத்தே நிலைபெறாமல் ஓங்கிய மலையை இந்த அளவு எங்கும் பார்த்ததில்லை. கடற்கண் இலாமல் - கடல்போன்ற கண் இல்லாமல்; எழுமலை - எழுச்சிபெற்ற முலை;

'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்'

என்னும் குறளின் (774) கருத்தைக் கவிஞர் அப்படியே இப்பாடலில் எடுத்தாண்டு மறவர் குடிப்பெருமையைப் போற்றியுள்ளார்.

## 287

வேந்துவல் லார்தொழுஞ் சேதுக் கதிபன் விருந்தருத்தி
மாந்தவல் லாளனெஞ் சீராச ராசன் வரையிடத்தே
ஏந்துவல் லென்னமுன் னின்றனை யானுமுன் னேந்துவல்காண்
போந்துகை யாலென்னை மாத்திரங் கட்டிப் பொருந்துகவே.

வேந்து வல்லார் - அரசர்களில் வல்லமை படைத்தவர்; அதிபன் - தலைவன்; விருந்து அருத்தி - விருந்தினரை முன்னர் உண்பித்து; மாந்த - உண்ண; ஏந்துவல் - காப்பேன்; முன் ஏந்துவல் - முற்படத் தாங்குவேன்; ஏந்துவல் - எழுச்சிபெற்ற முலை; கட்டிப் பொருந்துக - கட்டிப்பிடித்துச் சேர்வாய்.

## 288

வெங்கற் புயத்து மறவோர் குடிக்கு விளக்கனையான்
இங்கற் புதமென வின்கவி பாடு மிரும்புலவர்
தங்கற் பகமெனுஞ் சீராச ராசன் றமிழ்வரைவாய்
நுங்கற் பருமைகண் டோமானங் கைக்கொள ணேக்கினமே.

வெங்கல் - விரும்பத்தக்க மலை; இங்கு - இவ்வுலகில்; அற்புதம் என - காணக் கிடைக்காத அதிசயம் என்று போற்ற; கற்பகம் - கற்பக மரம் போலக் கொடுப்பவன்; கற்பு - கல்வி; மானம் - பெருமை; உம்முடைய கல்வியின் அருமையைப் பார்த்தோம்; பெருமையைக் கொண்டிருத்தலையும் தெரிந்தனம் என்பது வெளிப்படை. கல - மலை, முலை; நும் கல் பருமை கண்டோம் - உமது முலையின் பருமையைப்

பார்த்தோம்; மான் அங்கைக் கொளல் நோக்கினம் - மான் போன்ற கண்ணை உள்ளங்கையால் பற்றியிருத்தலையும் பார்த்தோம்.

## 289

திரைவாரி சூழ்புவி முற்றும் புரந்த திருக்குலத்துப்
புரைவா ரிலாதுயர் பாற்கர பூபன்செய் புண்ணியத்திற்
றரைவா யுதித்து வளர்ராச ராசன் றமிழ்வரைவாய்
வரைவா ரிலாமைகண் டேனஞ் சுவடி மறைந்ததென்னே.

திரை வாரி - அலைகளோடு கூடிய கடல்; புவி - பூமி; முற்றும் - முழுவதும்; புரைவார் - ஒப்பார்; பூபன் - மன்னன்; தரைவாய் - உலகில் உதித்து - தோன்றி, பிறந்து; வரைவார் இலாமை கண்டேன் எழுதுவார் இல்லாதிருத்தலைப் பார்த்தேன்; அம் சுவடி மறைந்தது என்னே - அழகிய எழுதும் சுவடி மறைந்தது என்ன வியப்பு; வரைவார் இலாமை கண்டேன் - வரை - மலை, முலை; வார் - கச்சு; வரைவார் இலாமை - முலைகள் கச்சினுள் கட்டப்படாமை; நஞ்சு வடி மறைந்தது - நச்சுத்தன்மை கொண்ட மாவடு போன்ற கண்கள் மறைப்புண்டது. வடி - மாவடு, கண்.

## 290

எங்கிலை வேந்துக்கு மேலாய சேதுமன் னிப்புவியைச்
செங்கிலை யாள்கின்ற சீராச ராசன் றிருமலைவாய்
மைந்நிலைக் கூந்தலிர் மாமூல முற்றும் வழங்கிவிட்டு
கைந்நிலை கோவை வழங்காத தென்னைகொல் காரணமே.

வேந்து - வேந்தன்; செந்நிலை - செம்மையான முறையில், அரச நீதி தவறாமல்; மை - மேகம், கருமை; மைந்நிலைக் கூந்தலிர் - கருமை நிலைபெற்ற கூந்தலினையுடையீர்; மாமூலம் - சிறுபஞ்சமூலம்; கோவை - ஆசாரக் கோவை; சிறுபஞ்சமூலம், கைந்நிலை, ஆசாரக் கோவை என்னும் மூன்றும் பதினெண்கீழ்க்கணக்கைச் சார்ந்த இலக்கிய நூல்கள். மாமூலம் - யானைத் தந்தம் - முலை; கோ - கண்; கைந்நிலை கோவை - கையிடத்தே நிலைபெற்ற கண்ணை.

## 291

குருவெள்ளி யென்பவர் செய்திட்ட நூலிற் குறித்தமுறை
தருவெள்ள லில்புகழ்ச் சீராச ராசன் றடவரைவாய்த்
திருவெள்ளி யாரிரும் புள்ளார் தராக்கட் சிறப்புடையார்
பெரிதுள்ள மாதங்கத் தார்பித் தளைதலைப் பெய்தனரே.

குரு - வியாழன், பிருகற்பதி; வெள்ளி - சுக்கிரன்; வியாழனும் வெள்ளியும் அரச நீதிமுறைநூல் செய்துள்ளவராவர்; முறை தரு - நீதி செலுத்துகிற, அரசாளுகிற; எள்ளல் இல் புகழ் – இகழ்ச்சியில்லாப் பெரும்புகழ், தாழ் வில்லாத புகழ்; திரு எள்ளியார் - திருமகளை இகழும் படியான அழகு படைத்தவர்; இரும்புள்ளார் - புள் - வளையல்; பெரிய கைவளை அணிந்தவர்; தராக் கண் சிறப்புடையார் - பாராத கண்களைப் பெற்ற சிறப்புடையவர்; கைகளால் கண்ணை மறைத்தமை சுட்டியவாறாம்; பெரிதுள்ள - பெரிதான: மாதங்கத்தார் - யானையை யுடையவர்; யானைத் தந்தம் போன்ற முலையினை உடையார்; பித்து அளைதலைப் பெய்தனர் - காம இச்சையால் நான் மயக்கமுறுதலைத் தந்தனர். வெள்ளி, இரும்பு, தரா, தங்கம், பித்தளை என்னும் உலோகப் பெயர்களை இப்பாடலில் நயமுற அமைத்துப் பாடியுள்ளமை காணலாம். பித்தளை தலைப்பெய்தனர் - பித்தளையைக் கொண்டுள்ளனர்.

## 292

எல்லா வரசுங் தொழுஞ்சேது வேந்தனெண் ணெண்கலையும்
வல்லார் தரந்தமங் தேர்ந்தீத்த வள்ளன் மதுரகவிக்
கல்லால் வியவாத வன்ராச ராச னணிவரைவாய்
நல்லார் கலியணி யார்குறிஞ் சிப்பாட்டை நல்கினரே.

அரசு - அரசர்; எண்ணெண்கலை - அறுபத்து நாலுகலைகள்; தரம் தமம் - தகுதி தகுதியின்மை, உயர்வு தாழ்வு; ஈத்த - கொடுத்த தந்த; மதுர கவி - இனிய பொருள் நயம் வாய்ந்த பாடல்; நால்வகைக் கவி வகைகளுள் இஃது ஒன்று. நல்லார் - நல்லவராகியவர். பெண்டிர்; கலி - கலித்தொகை; குறிஞ்சிப்பாட்டு - பத்துப்பாட்டுள் ஒன்று. இவ் விரண்டும் முறையே எட்டுத் தொகை, பத்துப்பாட்டுகளுள் அமைந்த அகப்பொருள் இலக்கியங்கள். நல் ஆர்கலி அளியார் - அழகிய கண்ணைத் தாரார்; ஆர்கலி - கடல், கண்; குறிஞ்சிப்பாடு - மலை; முலை; குறிஞ்சிப்பாட்டை நல்கினர் - முலைகளைத் தந்தனர் என்பதாம்.

## 293

செஞ்சாலி நீள்வயல் சேர்செம்பி நாட்டினன் றீயவரை
நெஞ்சாலு மெண்ணலில் சீராச ராச னெடுங்கிரிவாய்
நஞ்சார்கை யாரிபம் போரா வருகுவர் நாகபடம்
அஞ்சா தெடுத்திவ ணாடவு நிற்ப ரரனென்னவே.

செஞ்சாலி - செந்நெல்; தீயவர் - கொடியோர்; அரன் - சிவன்; சிவன் என்னுமாறு இப் பெண்டிர் நின்றனர் என்று இருவருக்கும் உரிய ஒப்புமைச் சொற்களால் கவிஞர் உரைக்கின்றார். நஞ்சு ஆர்கையார் - நஞ்சை உண்பவர்; நஞ்சு ஆர் கையர் - நஞ்சு போன்ற கண்பொருந்திய கையையுடையவர்; இபம் போரா வருகுவர் - இபம் - யானை, யானைத் தோலைப் போர்த்து வருவார்; யானைக் கொப்பாம் முலையினை மூடாது வருவார்; நாகபடம் அஞ்சாது எடுத்து இவண் ஆடவும் நிற்பர் - பாம்பு பயமின்றிப் படம் எடுத்து ஆடவும் நிற்பர்; நாகபடம் அஞ்சாது இவண் நாடவும் நிற்பர் - நாகபடம் என்றது அல்குலை; இவண் நாடவும் - இங்கே விரும்பும்படி.

## 294

நீள வறிந்த வரைக்களி றேற்றி நிதியளித்துக்
காள வகையெதி ரூதச் செலவிட்டுக் காசினியை
ஆள வகைதெரிந் தோன்ராச ராச னணிவரையீர்
தாள வகைதெரித் தீர்வரிப் பாட்டினைத் தந்திலிரே.

நீள அறிந்தவரை - மிகுதியும் கற்றவரை; களிறு ஏற்றி - யானை மீது ஏற்றுவித்துச் சிறப்புச் செய்து; நிதி - பொற்கிழி; காளவகை - எக்காளவகையான சின்னங்கள்; செலவிட்டு - போகவிட்டு, வழியனுப்பி வைத்து; காசினி - பூமி; தாளவகை தெரித்தீர் - தாள வகைகளை நன்கு அறிவித்துள்ளீர்; வரிப்பாட்டு - இசை வகையான பாடல்; தாளவகைகளை நன்கு தெரித்தீர் வரிப்பாட்டைத் தந்தீரில்லை என்பது வெளிப்படை. தாளம் - முலைக்கொப்பு; வரிப்பாடு - வண்டின் தன்மை பெற்ற கண்; செவ்வரிகளோடு கூடிய கண் எனலும் ஆம்.

## 295

தேவுடன் வாழ்கின்ற பன்னூறு கோயில் திருந்தவைத்துப்
பூவுட னாள்கின்ற வன்றள வாய்வழிப் புண்ணியன்வான்
காவுட னீடுகைச் சீராச ராசன் கனவரைவாய்
கோவுடன் மாவந்த போதனை வோருங்கை கூப்புவரே.

தேவு - தெய்வம் ; திருந்நவைத்து - செவ்விய முறையில் நடைபெறு மாறுவைத்து; பூ - பூமி; தளவாய் - மறவன், வீரன்; வான்கா - தேவ லோகக் கற்பகதருச் சோலை; நீடுகை - கொடையால் நீண்ட கை; கோவுடன் - அரசனோடு; மாவந்தபோது - அரசயானை உலாவந்த போது; அனைவோரும் - எல்லோரும்; கைகூப்புவர் கை குவித்து வணங்குவர். கோ - அரசன், கண்; மா - யானை, முலை; கைகூப்பு வரே - கைகுவித்து மறைப்பரோ.

## 296

பல்லவ மான பதமாதர் பெண்ணைப் பரியிவர
அல்லவ மான மதமா மிசைவரு மாளியனுன்
வல்லவ மானதன் சீராச ராசன் வரையிடத்தீர்
வல்லவ மான வகையாம் வண்டங்கை மருவலினே.

பல்லவம் - தளிர்; மான - ஒத்த; பெண்ணைப்பரி - பனங்கருக்கா லான குதிரை; மடலேற முற்படுவார் பனங்கருக்காலாகிய குதிரையில் ஏறி வருதல் வழக்கம். இவர - ஏறி நடத்த; அல் அவமான மதமா - இருளும் கீழ்ப்பட்டது என்னும்படி கருமைநிறமுள்ள மதயானை; அல் - இருள்; அவம் - கீழ்; ஆளியனான் - சிங்கத்தை ஒத்தவன்; வல்லவ மானதன் - வலிமை படைத்த அரசன்; அண்டம் கை மருவுதல் - பூமி கைவசப்படுதல்; பூமியைக் கைவசப்படுத்தி மேம்படுதல் வன்மை பொருந்திய செயலாம் என்பது வெளிப்படை; வல் - சூது, முலை; அவமானவகையாம் - வீணாக வெளிப்படுத்தியதாம்; வண்டு அங்கை மருவலினே என்க. வண்டு - வண்டு போன்ற கண்.

## 297

பூவா னவரைப் பசுவை புலவரைப் போற்றியுயர்
தேவா னவரைத் தொழுராச ராசன் றிருமலைவாய்
கோவா னவரை நுங்கையி னடக்கிக் கொளுமட்டுநீர்
மாவா னவரை விடுத்தாலு மென்ன வருங்குறையே.

பூவானவர் - பார்ப்பார்; தேவானவர் - தெய்வத் தன்மை படைத்த வர், முனிவர்; கோ ஆனவரை - கண்களை; கையின் அடக்கிக்கொள்ளு தல் - கையால் மறைத்துக்கொள்ளுதல்; மட்டு - அளவு, வரை; மாவானவர் யானைத் தந்தம் போன்ற முலைகள்; என்னவரும் - என்ன

பயன்கிட்டும்; குறையே - குறையுடையதே, குற்றமே. கோவானவர் - அரசர்; மாவானவர் - சிறந்த தேவர்; அரசனில்லாமல் தேவர் காரியம் சிறப்புற நடவாது என்பது கருத்து.

**298**

**மோந்தக மண்டு மதுவா ரளிகுல மொய்ந்தமுல்லை**
**யேந்தக லந்திக ழுஞ்சேது வேந்த னெதிர்ந்தவர்க்கு**
**நாந்தக மேந்திய சீராச ராச னளிர்வரையீர்**
**நாந்தக நல்கலி ரெத்தனை யுந்தன நல்கியென்னே.**

மோந்து - முகர்ந்து; மண்டும் - நிறையும், நெருங்கும்; மது ஆர் அளிகுலம் - தேனை உண்ணும் வண்டுக் கூட்டம்; ஏந்தகலம் - பரந்த மார்பு; எதிர்ந்தவர் - போரில் எதிர்த்து வந்தவர்; நாம் தக நல்கலிர் - நாங்கள் தகுதிபெறும் அளவு தந்தீரில்லை; எத்தனையும் தனம் நல்கி என்னே — எவ்வளவு செல்வம் கொடுத்தும் என்ன பயன் என்பதாம். நாந்தகம் வாள்; நாந்தகம் நல்கலிர் - வாள் போன்ற கண்ணைத் தந்தீரில்லை; தனம் - முலை.

**299**

**ஏருறு தண்மயி லாபுரி நாதனுக் கெக்கஃகுடிப்**
**பேருறு மூர்நல்கு சீராச ராசன் பெருங்கிரியார்**
**சீருறு கோகிலந் தாழிசை யார்பல் திகழ்வெள்ளையார்**
**ஆர்கலி யார்கையி னார்வஞ்சி யாரக வல்லுளரே.**

ஏர் உறு - அழகு பொருந்திய; மயிலாபுரிநாதன் - மயிலாபுரி இறைவன்; எக்கஃகுடி — எக்கஃகுடி என்னும் ஊர்; பேர் உறும் ஊர் - புகழ் மிகும் ஊர்; சீர் உறு கோகிலம் தாழ் இசையார் — சிறப்புடைய குயில் போலும் தாழ்ந்த பேச்சுடைய பெண்டிர்; பல்திகழ் வெள்ளையார் - பல் ஒளிமிக்க முல்லைமலர் போன்றவர்; ஆர்கலி ஆர் கையினார் — துன்பத்தால் விழுங்கப் பெற்றவர்; வஞ்சியார் - வஞ்சனை புரியார்; அகவல் உளர் - மனவன்மை உடையவர்; ஆர்கலி ஆர் கையினார் - கடல் போன்ற கண் பொருந்திய கையையுடையவர்; வஞ்சியார் - வஞ்சிக்கொடி போன்றவர்; அகவல் உளர் - மார்பிடத்தே சூதுபோன்ற முலையினையுடையார். தாழிசை, வெள்ளை, கலி, வஞ்சி, அகவல் என்னும் பாவின் பெயர்கள் இதில் வெளிப்படுதலும் நோக்கத்தகும்.

## 300

தேவில்லை யென்பவ ருண்டென்று சொல்லத்திண் சேதுகட்டிச்
சாவில்லை யென்றிறு மாந்தவி ராவணன் றன்னையட்டோன்
மாவில்லை வாழ்த்திய சீராச ராசன் மணிவரையீர்
கோவில்லை யேனமிக வேதண்ட மென்றுங் குவலயத்தே.

தே - தெய்வம்; திண்சேது - வன்மையான திருவணை; சாவு இல்லை - இறப்பு இல்லை; இறுமாந்திருந்த - செருக்குக்கொண்டிருந்த; அட்டோன் - கொன்றவன்; இராவணன் றன்னை அட்டோன் - இராமன்; மா வில் - சிறந்த வில்லாகிய கோதண்டம்; கோ - அரசன், கண்; தண்டம் - கோல், அதாவது செங்கோல், அரசனில்லையானால் செங்கோலாட்சி நடவாது என்பதாம்: குவலயம் - உலகம்; கோ இல்லை யானால் - கண் வெளிப்படுதல் இல்லையானால்; மிக வேதண்டம் என்னாம - மிக்குத் தோன்றும் மலை போன்ற முலையால் என்ன பயன்: வேதண்டம் - மலை. முலை.

## 301

நெய்வேல் மறவர் குடிக்கிறை கோவை நெடுந்தமிழ்கொள்
ஐவே லசதி நிகர்கன்று மேய்த்தவ னவ்வுடையான்
செவ்வேலர் சந்ததிச் சீராச ராசன் றிருவரைவாய்
கைவேல்வன் கண்மை களிற்றெடு நேர்பொரக் காட்டுகவே.

நெய்வேல் - எண்ணெய் பூசப்பெற்ற வேல்; இறை - தலைவன்: கோவை - அகப்பொருட்கோவை; நெடுந்தமிழ் - பெருமை படைத்த தமிழ்நூல்; ஐவேல் அசதி - ஐவேல் அசதி என்னும் பெயருடையவன்; கூரிய வேலையுடைய அசதி என்பவன். ஔவையாரால் அசதிக்கோவை என்னும் நூல் பெற்றவன். அசதி - மாடு மேய்த்தல் தொழில் செய்தவன்; நிகர் - ஒத்த; கன்றுமேய்த்தவன் அவ்வுடையான் - கன்று மேய்த்த கண்ணனாகிய இறைவன்; வேலர் சந்ததி - மறவர் வழித்தோன்றல்; வன்கண்மை - வீரம்; கையில் பிடித்த வேலின் வன்மையை யானையின் எதிரே நின்று போர் செய்தலால் வெளிப்படுத்துக என்பது வெளிப்படை. கைவேல் வன்கண்மை-கையில் மறைத்த வேல் போன்ற வலிய கண்ணின் தன்மை; களிறு - யானை, முலைக்கு ஒப்பு. காட்டுக - வெளிப்படுத்துக.

302

வேகமுண் டாகிய மாமீ திவர்ந்து விரவலரைச்
சோகமுண் டாகப் பொருதட்ட கோன்றள சூரனிட்ட
போகமுண் டாகிய சீராச ராசன் பொருப்பனையீர்
நாகமுண் டாகியு நஞ்சமின் றுயதென் னுரியரே.

வேகம் - விரைவு; மா - குதிரை; இவர்ந்து - ஏறிச் செலுத்தி; விரவலர் - பகைவர்; சோகம் - துன்பம், வருத்தம்; பொருது அட்ட கோன் - போரிட்டுக் கொன்ற அரசன்; தளசூரன் - தளவாய், சேனைத்தலைவன்; போகம் - இன்பம்; நாகம் - பாம்பு, மலை; நஞ்சம் - நஞ்சு, கண்; பாம்பு உண்டாயிருக்கவும் அது நஞ்சு இன்றி இருப்பதேன் என்பது வெளிப்படை. நாகம் உண்டாகியும் - மலை போன்ற முலை வெளிப்பட்டும்; நஞ்சம் இன்றாயது - நச்சுத்தன்மை யுடைய கண் வெளிப்படாமல் மறைந்திருத்தல். நாரியர் - பெண்டிர்.

303

செஞ்சொற் றமிழ்க்குப் பதினா யிரந்தருந் தேவையர்கோன்
நெஞ்சத் தினிக்குமெஞ் சீராச ராச னெடுங்கிரியாய்
நஞ்சுக்குக் கொம்பு முளைத்ததன் பாலிரு நாகமுண்டாய்
எஞ்சப் படாம லிருக்கநஞ் சேனின்னு மேந்துவையே.

செஞ்சொல் தமிழ் - அழகிய இனிய செம்மையான சொற்களை யுடைய தமிழ்ப்பா; தமிழ்க்குப் பதினாயிரம் தரும் - தமிழ் நூலுக்குப் பதினாயிரம் பொன் பரிசு அளிக்கிற; நெடுங்கிரி – நீண்ட பெருமலை; நஞ்சுக்குக் கொம்பு முளைத்தால் நெஞ்சு எனப்படும். நாகம் - மலை; இரு நாகம் என்றது இருமுலைகளை; எஞ்சப்படாமல் - குறைவின்றி; நஞ்சு - நஞ்சுக்கு ஒப்பாம் கண்; ஏந்துவை - தாங்கி மறைப்பாய்.

304

விண்ணுட ரேத்திய சேதுக்கு வேந்தன் விரும்பறத்தான்
மண்ணுடர் யாருந் தொழுதக்க கண்ணியன் வண்புலவர்
கண்ணாக நிற்பவன் சீராச ராசன் கனவரைவாய்
அண்ணு மலைநல்கி னுய்திருக் கோவலை யாங்கொளித்தே.

விண்ணாடர் - வானுலகத் தேவர்; விரும்பு அறத்தான் - விரும்பிச் செய்யும் தருமவான்; கண்ணியன் - சிறந்தோன்; வண்புலவர் - புலமை வளம் வாய்த்த புலவர்; கண்ணாக நிற்பவன் - கண் போன்று உதவு பவன், ஆதரிப்பவன்; அண்ணாமலை - திருவண்ணாமலை; கோவல் - திருக்கோவலூர்; திருக்கோவலூரை மறைத்து திருவண்ணா மலை ஊரினைக் காண்பித்தாய் என்பதாம். அண்ணா மலை - நிமிர்ந்த மலை. எழுச்சி பெற்ற முலை; திருக்கோ அலை ஆங்கு ஒளித்தே — அழகிய கண்ணாகிய கடலை அங்கே மறைத்து என்றவாறு.

## 305

மலைப்பாற் குடகு வளநாட் டெவரு மகிழ்ந்துதங்கத்
தலைக்கா விரிச்சத் திரங்கட்டி வைத்தவன் றண்டமிழர்
நிலைப்பாக நிற்பவன் சீராச ராச நெடுங்கிரிவாய்
முலைப்பா லெமைப்புக விட்டுநஞ் சோகை முடித்தனையே.

குடக வளநாடு - குடகு நாடு, கர்நாடகதேசம்; தலைக்காவிரி - காவிரிநதி உற்பத்தியாகி வரும் புனித தலம்; சத்திரம் - மக்கள் தங்கி இளைப்பாறும் இடம்; நிலைப்பாக நிற்பவன் - நிலைத்து வாழும்படி நிற்பவன்; முலைப்பால் எமைப் புகவிட்டு நம் சோகை முடித்தனையே - முலைப்பாலை யாம் அருந்தும்படி தந்து எம் சோகை நோயைப் போக்கினாய் என்பது வெளிப்படை. முலைப்பால் - முலையிடத்தே; நஞ்சு - நஞ்சின் தன்மை படைத்தகண்; நஞ்சோகை முடித்தனையே - கண்ணைக் கையால் மூடி மறைத்தனை என்றபடி.

## 306

மடங்கிடைக் காத மதியோ ரவையின் மதித்ததலை
யிடங்கிடைத் தாள வலசேது பூபதி யென்றுமனத்
திடங்கிடைத் தானெங்கள் சீராச ராசன் றிருமலையாய்
தடங்கிடைத் தாலுமென் னுறுகா லின்றெனிற் றாழ்குழலே.

மடம் கிடைக்காத - அறியாமையில்லாத; மதியோர் - அறிஞர்; தலையிடம் - தலைமையிடம்; மதியோர் அவையில் தலைமை தாங்கி நடத்தவல்லவன் சேதுபதி என்பதாம்; மனத்திடங் கிடைத்தான்-உள்ளத் திடத்தே நிலைத்திருப்பவன்; தடம் - வயலிடம்; தடாகம்; மலை. நாறு கால் - நாற்றங்கால்; தடம் என்பதற்கு தடாகம் என்று கொண்டால்,

அதில் நீர் வரவும் வெளியேறவும் ஆறும் கால்வாயும் இல்லையானால் என்றாம். தடம் கிடைத்தாலும் - மலைபோன்ற முலைபெற்றாலும்; ஆறுகால் - வண்டு; வண்டுபோன்ற கண்.

## 307

செங்கட் கருமுகில் போலப்புல் லாணித் திருப்பதிக்கண்
எங்கட் கினியவன் மாயவ னூர விருந்தடந்தேர்
வெங்கட் களிறு தருராச ராசன் மிளிர்வரைவாய்
உங்கட் குடங்கை யிருக்கையி லேகுட மோவிட்டிரே.

செங்கட்கருமுகில் - சிவந்த கண்களையுடைய மேகம்; திருமாலுக்கு உவமை; புல்லாணி - திருப்புல்லாணி; திருமால் திருப்பதிகள் நூற்றெட்டுள் ஒன்று. எங்கட்கு இனியவன்-எங்களுக்கு இனிமை செய்பவன்: எம் கட்கு இனியவன் என்று கொண்டு எம் கண்களுக்கு இனிய காட்சி தருபவன் என்றும் கூறலாம். இருந்தடந்தேர் - பெரிய அகலமான தேர்; வெங்கட்களிறு - சினத்தால் மிக்க கண்களையுடைய யானை; திருப்புல்லாணித் திருமால் எழுந்தருளத் தேரும் யானையும் தந்தவன் இராசராசன். மிளிர்தல் - விளங்குதல்; உம் கட்குடம் கையிருக்கையிலே குடமோ விட்டிரே - உமது கள்ளுக்குடம் கையிலிருக்கையிலே வெறுங் குடத்தைத் தந்தீரே என்பது வெளிப்படை. உம் கண் குடங்கை இருக்கையிலே - உம்முடைய கண் உள்ளங்கையில் மறைக்கிருக்கையில்; குடமோ விட்டிர் - குடம்போன்ற முலைகளை வெளிப்படுத்தினீர் என்றவாறு.

## 308

புல்லர் சலஞ்செயற் குட்பட லில்லாப் புகழ்மையொடு
வல்லச லம்பொர நிற்பவன் றன்பெரு மைக்கியைய
இல்லச லம்மெனச் செய்ராச ராச னிருங்கிரியீர்
நல்லச லங்கொடுத் தீர்கணற் றேனை நயந்தவற்கே.

புல்லர் - கீழோர்; சலம் - வஞ்சனை; புகழ்மை - பெருமை; வல் அசலம் பொர நிற்பவன் - வலிய மலைபோன்று நிலைபெற்று விளங்குபவன்; இல் அசலம் என-அரண்மனையை மலையென்னும்படி; அசலம் - மலை; பொர - ஒக்க; நல்ல சலம் - நல்ல தண்ணீர்; நற்றேன் - நல்ல தேன்; கொம்புத்தேன்; நல்ல தேனை நயந்தவனுக்கு நல்ல தண்ணீரைக்

கொடுத்தீர் என்பது வெளிப்படை. நல் அசலம் - நல்ல அசலமாகிய முலை; கண் நற்றேன் - கண்ணாகிய நல்ல வண்டு; நயந்தவற்கு விரும்பியவனுக்கு.

309

வேளிகற் காயவில் செய்யோங்கு தேரினு வேலிவைப்பிற்
காளியைப் போற்றிச் செருக்களம் செல்தறு கண்மறவர்
நீளியற் றொல்குலச் சீராச ராச னெடுவரைவாய்
வாளிகைப் பூட்டி நெஞ்சிற்சிலம் பார்த்தல் வனப்பிலையே.

வேள் இகற்கு ஆய வில் - மன்மதனின் போருக்குரிய வில்லாகிய கரும்பு; செய் — வயல்; வேலி வைப்பு - காவல் சூழ்ந்த இடம்; காளி - காளிதேவி; போரில் வெற்றிதரும் கொற்றவை; செருக்களம் - போர்க் களம்; போர்க்களம் செல்லும் மறவர் காளி தேவியை வணங்கித் துதித்துச் செல்லுதல் மரபு; தறுகண்-அஞ்சாமை; மறவர் நீள் இயல் தொல்குலம்- வீரரின் மிகப்பழங்குடி; வாளி கைப்பூட்டி - காதிற் பூட்ட வேண்டிய வாளி என்னும் அணியைக் கையில் அணிந்து; நெஞ்சில் சிலம்பு ஆர்த்தல். காலில் அணிய வேண்டிய சிலம்பினை மார்பில் கட்டுதல்; வனப்பில்லை. அழகில்லை; முறையன்று என்பதாம். வாளி - அம்பாகிய கண்; சிலம்பு மலையாகிய முலை.

310

புத்தியி லாதவர் மாடு தணந்து புலவர்குழா
மத்தியி லாதவன் போலொளிர் கின்றவன் மாற்றலரைக்
குத்தியி லாதுசெய் சீராச ராசன் குளிர்வரையீர்
சத்தியி லாவிடின் மேருவி னுற்பயன் சார்வரிதே.

மாடு - பக்கம்; தணந்து - நீங்கி; ஆதவன் - சூரியன்; மாற்றலர் - பகைவர்; குத்தி — வேலால் குத்தி; சத்தி - ஆற்றல்; வேல்; கண். மேரு- மேருமலை, முலை. பயன் சார்வரிது - பயன்கிட்டுவது அரிது.

311

இம்பர் நிலமன்ன ரேத்திய தேவேந் ரேந்திரன்சீர்க்
கம்பர் கவித்திறத் தின்சுவை காண்பவன் கற்றவர்க்கு
நம்பல் சிறந்த கொடைராச ராச னளிர்வரைவாய்
உம்பல் வெளிசெய்ய வோகரு வேற்கட்கை பொன்றினிரே.

இம்பர் - இவ்வுலகம்; நிலமன்னர் - நாட்டுக்குரிய அரசர்; நரேந்திரன் - மக்கள் தலைவன், அரசன்; நம்பல் - விரும்பல்; நம்பிக்கை; உம் பல் ஒளிசெயவோ கரு வேற்கண் கை ஒன்றினிர் - உம்முடைய பல்லினை வெள்ளிபோற் செய்யக் கருவேல மரத்தின்கண் கை பொருந்தினீர். 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி' என்பது பழமொழி. உம்பல் - யானை, முலை; கருவேல்கண் - கருமைபொருந்திய வேல் போன்ற கண்.

### 312

வெறுஞ்சுவை யில்லாக் கவிக்குரு காதவன் மெய்ப்புலமை
நறுஞ்சுவை கண்டு தரதமந் தேர்ந்து நலநிதியம்
பெறுஞ்சுக மெய்தத் தருராச ராசன் பெரிதுடைய
குறிஞ்சியைக் காட்டினை நெய்தலைக் காட்டிலை கோமளமே.

சுவை இல்லா வெறுங்கவி என்க; வெறுங்கவி-பொருட்சிறப்பில்லாத வெள்ளைக்கவி; உருகாதவன் - மனம் நெகிழாதவன்; மெய்ப்புலமை - உண்மையான அறிவுத்திறன்; நறுஞ்சுவை - இனிய சுவை; தரதமம் - உயர்வு தாழ்வு; நிதியம் - செல்வம்; சுகம் எய்த - இன்பங்களை அடைய: குறிஞ்சி - குறிஞ்சி நிலம்; நெய்தல் - நெய்தல் நிலம்; குறிஞ்சி நிலத்தைச் காட்டியவர் நெய்தல் நிலத்தைக் காட்டவில்லை என்பது வெளிப்படை. குறிஞ்சி - மலை, முலை; நெய்தல் - நெய்தல் மலர் போன்ற கண்; கோமளம் - அழகு, அழகுடைய பெண்.

### 313

கொடைக்கரங் காட்டிய பாற்கர வேந்தன் கொழுந்தருமத்
திடைப்புவ னிக்கண்வந் தோன்றேவை காவல னின்றமிழ்ப்பா
நடைக்கம ரும்புகழ்ச் சீராச ராச னளிர்வரைவாய்க்
கடற்கயல் காட்டலிர் நீரானை காட்டினிர் காணுறவே.

கரம் - கை; கொழுந்தருமம் - மிகுந்த தருமம்; புவனி - பூமி; இன்தமிழ்ப்பா நடைக்கு அமரும் புகழ் - புலவர் பாடும் பாக்கொண்ட பெரும் புகழ்; கடற்கயல் - கடலிலுள்ள கயல்மீன்; நீரானை - நீரில் வாழும் யானை; கடற்கயல் - கடல்போன்றதும் கயல்மீன் போன்றதும் ஆகிய கண்; காணுற - காணும்படி; நீர் ஆனை காட்டினிர் காண் உறவே - யான் பொருந்தும்படி நீர் யானை போன்ற முலைகளை வெளிப்படுத்தினீர் என்றவாறாம்.

## 314

இனம்படைக் காது பகைகாட் டுவருக் கெனக்கொடிய
வனம்படைத் தான்றழு வப்பெறு வார்க்கு வழங்குபெரு
மனம்படைத் தானெங்கள் சீராச ராசன் வரையிடத்தே
தனம்படைத் தார்க்குப் புதைக்கை யெந்நாளுந் தகாததுவே.

இனம் படைக்காது - நட்பை வளர்க்காமல்; பகை - பகைமை; கொடிய வனம் - கொடிய காடு; சீராசராசனிடம் பகைத்துக் கொண்டவர் தோற்றுக் காடே புகலிடமாக மறைந்து வாழ்வர் என்பதாம்; தழுவப் பெறுவார் - இணங்குபவர், நட்பினர்; பெருமனம் - நல்ல மனம்; தனம் - செல்வம், முலை; மறைக்கை - புதைத்துவைக்கை; எந்நாளும் - எந்தக் காலத்திலும்; செல்வம் தேடி உண்ணாமல் புதைத்து வைப்பது தகாத செயலாகும். 'தனம் தேடி உண்ணாமல் புதைக்க வேண்டாம்' என்பது உலகநீதி; தனம் படைத்தார்க்கு - முலையைப் படைத்தவருக்கு; புதை - அம்பு; கண்; புதைக்கை - அம்பு போன்ற கண்ணிலே உற்ற கை.

## 315

கோல்விட் டிகன்றவர் தந்நாடு விட்டுக் குறையிரப்ப
மேல்விட்டு வெல்படைச் சீராச ராசன் மிளிர்வரைவாய்
ஆல்விட் டரம்பைவிட் டீர்மாவும் விட்டிங் கரசும்விட்டு
வேல்பற்றி னீர்தடை வேலி யிடுமவ் விதங்கினைத்தே.

கோல்விட்டு - செங்கோல் செலுத்துவதை விடுத்து; இகன்றவர் - தவறியவர்; மாறுபட்டவர்; குறையிரப்ப - தம் குறைகூறி இரந்து வேண்ட; ஆல் - ஆலிலையாகிய வயிறு; அரம்பை - வாழையாகிய துடை; மா - யானையாகிய முலை; அரசு - அரசிலையாகிய அல்குல்; வேல் - வேலாகிய கண்; முள்வேல் மரம்; ஆல், அரம்பை மா, அரசு இவற்றிற்குத் தடைவேலி வேலாதல் காண்க.

## 316

பொய்தலை வேண்டிய மானுர்தஞ் சிற்றில் பொருதுமுத்தம்
பெய்தலை யுந்துங் கடல்வளச் சேதுமன் பேணலரைக்
கைதலை வைக்கச்செய் சீராச ராசன் கனகிரிவாய்
நெய்தலை வேண்டிவந் தேற்கிரு பாற்குடம் நேர்பட்டதே

பொய்தல் - விளையாட்டு; மான்றார் - பெண்கள்; சிற்றில் - மணலில் கட்டிய சிறு வீடு; முத்தம்பெய்து அலை உந்தும் - முத்தங்களை இட்டு அலையால் தள்ளும்; பேணலர் - பகைவர். கைத்தலைவைத்தல் - செயலற்றுக் கைகளைத் தலைமேல் குவித்தல்; பெருந்துக்கமடைதல். நெய்தல் வேண்டி வந்தேற்கு நெய் பெறுவதற்காக விரும்பி வந்த எனக்கு; பாற்குடம் - பால் நிறைந்த குடம்; நெய்யை விரும்பிய எனக்கு இரு பாற்குடம் வாய்த்தது. நெய்தல - நெய்தல் மலர்போன்ற கண்; பாற்குடம் - முலை; நேர்பட்டது - எதிர்ப்பட்டது, வெளிப்பட்டது.

## 317

இருக்கண சிவந்தரி யேறென்னப் போரி லிகன்மறவர்
மருகன் றமிழ்ப்பா வலருக் கெலாமும் வழங்கியருள்
தருகண் மணியெனுஞ் சீராச ராசன் றடவரைவாய்
முருக னிடத்துக்கு வேலடை யாள மொழிகுவரே.

அரியேறு - ஆண் சிங்கம்; இகல் மறவர் - போரிடும் பெருவீரர்; மருகன் - வழித்தோன்றல்; எலாமும் - எல்லாப் பொருள்களும், எல்லாச் சிறப்புக்களும்; அருள்தரு - கருணை செய்கின்ற; கண்மணி - கண்மணி போல் சிறந்தவன்; முருகனின் இருப்பிடத்திற்கு வேல் அடையாளமாகக் கூறுவர் என்பது வெளிப்படை; முருகனிடம் - மலை - முலை; வேல் - வேலாயுதம், கண்; உக்கு - வெளிப்பட்டு; வேல் அடையாளம் ஒழிகுவர் - கண்ணாகிய அடையாளத்தைக் காட்டாதுபோவர்.

## 318

நத்திரங் குங்கடற் சேர்ப்பன் மருவலர் நாடுகெடப்
பத்திரங் கைவத் தவன்சேது காவலன் பார்முழங்கும்
முத்திரங் கூர்முர சாள்ராச ராசன் முதுகிரிவாய்
அத்திரங் கைப்பற்று வார்கள்கல் லாரென் றறிந்தனமே.

நத்து இரங்கும் - சங்குகள் ஒலிக்கும்; மருவலர் - பகைவர்; பத்திரம் - வாள்; பார் - உலகம்; முத்திரம்கூர்முரசு - மூன்று இயல்புடைய முரசுகள்; படைமுரசு, மணமுரசு, கொடைமுரசு; முதுகிரி - பழமலை; அத்திரம் கைப்பற்றுவார்கள் - நிலையற்ற பொருளைக் கைவசப் படுத்திவைத்திருப்பவர்கள்; கல்லார் - கல்வி அறிவற்றவர்; அத்திரம் - நிலையற்றபொருள்; அம்பு; கண். அத்திரங்கைப்பற்றுவார் - அம்பு போன்ற கண்ணை மறைப்பவர். கல்லார் - மலையையுடையவர்; கல் - மலை, முலை; முலையினையுடையவர் என்றபடி.

## 319

முன்னுள வாய தமிழ்நூற் சுவையை முழுதுணர்ந்து
தன்னுள் ளினிப்பவன் சீராச ராசன் றடவரைவாய்
என்னுள் கலையக் கலையமுன் னிட்டவிவ் வேந்திழையாள்
தன்னுள் கலைதலைப் பட்டிலள் நன்கலை கைமறித்தே.

முன்னுளவாய தமிழ்நூல் - பழந்தமிழ்நூல்; முழுதுணர்ந்து -முற்றும் தெரிந்து; தன்னுள் - தன் மனத்தில்; இனிப்பவன் - மகிழ்பவன்; என் உள் கலை அக்கு அலைய முன்னிட்ட - என் மனத்தை மயக்கும் கண் ஒளிவீச எதிர்ப்பட்ட; நன்கலை கைமறித்தே தன்னுள் கலை தலைப்பட்டிலள்-நல்ல கலைகளைக் கைவரப் பெற்றும் தன் உள்ளத்தே கலையுணர்வைப் பெற்றாளில்லை என்பது வெளிப்படைப் பொருள். என் உள் கலையக் கலையம் முன்னிட்ட இவ் ஏந்திழையாள் - என் உள்ளம் தடுமாறும் படி கலையம் போன்ற முலைகளை வெளிப்படுத்திய இந்தப் பெண்; தன் உள் கலை தலைப்பட்டிலள் - தன் மார்பிலே ஆடையைப் பொருந்தினாளில்லை, நன்கு அலை கைமறித்தே - பெரிதும் கடல் போன்ற கண்ணை மறைத்து என்றபடி. அலை - கடல், கண்.

## 320

மறங்கலை யாதபல் வாள்வீரர் தொல்குடி வந்தரசர்
அறங்கலை யாதுல காள்கின்ற சேதுக் கதிபன்வினை
யுறங்கலை யில்லவன் சீராச ராசனல் லூரனையாய்
பிறங்கலை நல்கியும் நல்காத தென்னைகொல் பேதையரே.

மறம் கலையாத - வீரம் குறையாத; அரசர் அறம் - அரசநீதி; கலையாது - தவறாமல்; வினை உறங்கலை இல்லவன் - செயலாற்றுவதில் பின்னடையாதவன்; பிறங்கலை நல்கியும் பிறங்கலை நல்காதது என்னை கொல் என்க. பிறங்கல் - மலை, முலை; பிறங்கு அலை - விளங்கும் கடல்போன்ற கண்; பேதையர் - பேதைமைக் குணமுடைய பெண்டிர்.

## 321

போரார் விடைமிசை யூர்தரு மண்ணலைப் போற்றிநிதம்
ஆரா தனைசெய்த பாற்கர வேந்த னருந்தவத்தின்
நேராக வந்துல காள்ராச ராச னெடுங்கிரிவாய்
பாராத தேனு மமிழ்தேந்து நாகமும பார்த்தனமே

போர் ஆர் விடை - போர் செய்தலில் வல்ல எருது; விடைமிசை ஊர் தரும் அண்ணல் - எருது ஏறிவரும் சிவபெருமான்; போற்றி - வணங்கி, துதித்து; ஆராதனை - வழிபாடு; பாராத தேனும் - எங்கும் பார்க்கக் கிடைக்காத பசுவும்; தேனு - பசு; அமிழ்து ஏந்தும் நாகம் - அமிர் தத்தைத் தாங்கிய பாம்பு; தேனு - வண்டு, கண்; பாராத தேனு - மறைக்கப்பட்ட கண்; அமிழ்து - அமிர்தம், பால்; நாகம் - மலை, முலை; அமிழ்து ஏந்து நாகம் - பால் தாங்கிய முலை

## 322

பண்ணுட்சி செய்யுஞ் செவிப்புல நுட்பம் படைத்தபிரான்
விண்ணுட்சி பெற்ற கொடைக்கரப் பாற்கர வேள்தவத்து
மண்ணுட்சி யுற்றவன் சீராச ராசன் வரையிடத்தே
கண்காட்சி யின்முலைக கண்காட்சி யாயதென் காரணமே.

பண் - இசை; செவிப்புல நுட்பம் - செவியால் அறியும் நுட்ப அறிவு; விண்ணாட்சி பெற்ற - தேவருலக ஆட்சியை அடைந்த; பாற்கர சேது பதி மறைந்தமை கருதி இவ்வாறு கூறினர் என்க. மண் ஆட்சி உற்ற வன் - நாடாளும் உரிமை பெற்றவன்; கண்காட்சியின் முலை கண்காட்சி யாயது - கண்பார்வையில் முல்லை கண்ணுக்கு இலக்காக்கியது; கண் காட்சி இல் - கண்பார்வையில்லை; முலை கண்காட்சி ஆயது - முலை வெளிப்பட்டுக் கண்ணுக்கு விருந்தான காட்சியாயது.

## 323

கோரத்தை யூர்ந்த வளவர் குலேசர் குலமறவர்
பாரிற் புரிந்த பெரும்பாக் கியத்தின் பயனெனவிங்
கோரப் பிறந்தவன் சீராச ராச னுயர்வரைவாய்ச்
சேரற்கு வந்தவர் தென்னவ னைக்கரஞ் சேர்த்தலென்னே

கோரம் - சோழன் குதிரை; வளவர் - சோழர்; வளவர் குலேசர் குலமறவர் - சோழர் குலத்தைச் சார்ந்த மறவர்; செம்பி நாடாம் சேது நாட்டு வாழ்வீரர்; பாக்கியம் — புண்ணியம்; ஓர - நினைக்க; சேரற்கு உவந்தவர் தென்னவனைக் கரம் சேர்த்தல் என்னே - சேரனுக்காக மகிழ்வுடன் வந்தவர் தென்னவனாகிய பாண்டியனைக் கைப்பிடித்தது என்ன காரணம் என்பது மேற்போக்கான பொருள். சேரன் கு வந்தவர்-

கு - பூமி; சேரன் கு வந்தவர் - சேரன் நாடு மலை; மலைவந்தவர் என்றது முலையை வெளிப்படுத்தியவர் என்பதாம்; தென்னவன் - கூற்று, யமன், கண்; கூற்றின் தன்மைபடைத்த கண்; கரம் - கை.

324

ஏதுக்குடம் பட்ட பொழுதுந் தருமமிலதெனிலோ
அதுக்குடம் பட்டிலனுகி யழுக்கற்ற தாயபொன்னின்
புதுக்குடம் போல்பவன் சீராச ராசன் பொழில்வரையீர்
மதுக்குடம் காட்டி மதுக்கரக் கையுற்றிர் மாந்தலின்றே.

உடம்படுதல் - இசைதல்; தருமநெறி அல்லாத எதற்கும் இசையான் என்பதாம். அழுக்கு - மாசு; மதுக்குடம் - கள் நிறைந்த குடம். கட்குடத்தைக் காட்டியவர் அதிலுள்ள கள்ளைத் தர மறுத்தீர். ஆதலால் குடித்தல் இயலாதே என்பது வெளிப்படை. மதுக்குடம் - முலை; மதுகரக் கையுற்றீர்; மதுகரம் - வண்டு, கண்; மாந்தல்-பருகுதல், அனுபவித்தல்.

325

வேலையி லேசங்க மேயும் வியன்துறை வேந்துதெய்வம்
காலையி லேதொழும் சீராச ராசன் கனவரைவாய்ச்
சோலையி லேயெதிர் நின்று ரிருகொம்பு சூழ்ந்துகொண்டார்
சேலையி லேயொளித் தார்தெரி யார்கள் தெரிவையரே.

வேலை - கடல்; சங்கம் - சங்கு; வியன்துறை -அகன்ற கடற்துறை; சோலையிலே எதிரே நின்றவர் பெரிய மரக்கொம்புகள் சூழப் பெற்றவராய் ஆடைக்குள்ளே மறைப்புண்டார். அதனால் இப் பெண்பாலார் கண்ணுக்குத் தெரியாதவராயினார் என்பது மேற்போக்கான பொருள். இரு கொம்பு - இரண்டு தந்தங்கள், முலை; சேல் அயிலே ஒளித்தார் - கெண்டைமீன் போன்றும் வேல் போன்றும் விளங்கும் கண்ணை மறைத்தார். தெரிவையர் என்று பேர்படைத்த இப்பெண்டிர் முறைமை தெரியாதவர்களாயினர் என்பது கருத்து.

326

கல்லார் குழுவை யகன்று கலையிற் கடலனைய
நல்லார் குழுவுறை சீராச ராச னளிர்வரைவாய்
வல்லா ரெனநின்ற நீர்பொரு ளென்றும் வகுத்தறித
லில்லா ரெனவிழிக் கையுற் றிருப்ப திருவியப்பே.

குழு - கூட்டம், சபை; கலையிற் கடல் அனைய நல்லார் குழு - கலைகளில் சிறந்து கடல் போன்று பரந்த அறிவுபடைத்த புலவர் அவை. வல்லார் - வல்லவர்; விழிக்கையுற்றிருத்தல் - திகைத்தல். ஒன்றும் - சிறிதும்; கலைத்திறத்தில் வல்லவர் என நின்ற நீர் பொருள் சிறிதும் வகுத்து அறியமாட்டாத பேதையர் போலத் திகைத்து நிற்பது பெரு வியப்பாகும் என்பது வெளிப்படை. வல்லார் - சூதுபொருந்தியவர், முலைகளையுடைவர்; வகுத்தறிதல் - பகுத்துணர்தல்; விழிக்கையுற்று இருப்பது - கண் கைகளிலே புதையுண்டிருப்பது.

### 327

பொய்வைத்த நெஞ்சர் தமக்குட் படாதுயர் புந்தியினன்
நெய்வைத்த வேல்வல்ல சீராச ராச னெடுங்கிரிவாய்க்
கைவைத் துளவிடத் துச்சேலை யெய்துறு காரணத்தான்
மெய்வைத்த சேலை விடுத்தார் வல்லாரிவர் மேதினிக்கே.

புந்தி - புத்தி; நெய் வைத்த வேல் - எண்ணெய் பூசப் பெற்ற வேலாயுதம். கையில் ஆடைபெற்றதன் காரணமாக உடம்பில் உள்ள ஆடையை விடுத்தார் ஆகிய இவர் இப்பூமியில் மாயம் வல்லார் என்பது வெளிப்படை. கை வைத்துள இடத்துச் சேல் - கைவைத்து மறைத்துள்ள இடத்தில் பொருந்திய சேல்மீன் போன்ற கண்; விடத்துச் சேல் எனக்கொண்டால் நச்சுத்தன்மை பொருந்திய சேல்மீன் போன்ற கண் என ஆம். சேலை - ஆடை; மெய் வைத்த சேலை - உடம்பில் சேர்ந்த ஆடை; நீத்தார் - விடுத்தார். வல்லார் - சூது காய் போன்ற முலையினையுடையார்; மேதினி - பூமி.

### 328

காலையெல் வீசு மிரவியு மல்லைக் கடியவரு
மாலையி லாய மதியமு மாகி வறந்துழிநீள்
சோலையி னுள்ளவன் சீராச ராசன் றொடர்வரைவாய்
வேலைநல் காய்மிக வேதன நல்கினை மின்னணங்கே.

எல் - ஒளி; இரவி - சூரியன்; அல் - இருள், இரவு; அல்லைக் கடிய - இருளைப் போக்க; மதியம் - சந்திரன்; வறந்துழி - வறுமை வந்த காலத்து, நீர்வற்றிப் பூமி காய்ந்த வழி; நீள் சோலையினுள்ளவன் - நீண்ட சோலைபோல உதவுபவன்; வேலை - தொழில்:

வேதனம் - கூலி; வேலை தராமல் மிகுந்த கூலியைத் தந்தாய் என்பது வெளிப்படைப் பொருள்; வேலை - வேல் போன்ற கண்ணை; மிகவே தனம் நல்கினை - மிகுதியாக முலையை வெளிப்படுத்தித் தந்தாய். தனம் - முலை. மின்னனங்கு - மின்னல்போல ஒளி படைத்த பெண்.

## 329

நஞ்சே யமிழ்தென வுண்டவன் பாத நளினமிசை
நெஞ்சே யணிகிற்குஞ் சீராச ராச னெடுங்கிரிவாய்
அஞ்சே லெனவொன்று சொல்லற் கிலாதும் மரியநெஞ்சம்
செஞ்சே வகங்கொ ளிடமென் றெமக்குத் தெரித்தலென்னே.

நஞ்சே அமிழ்து என உண்டவன் - சிவபெருமான்; பாதநளினம் - திருவடித்தாமரை; நெஞ்சே அணிகிற்கும் - நெஞ்சைப் பொருந்த வைக்கும், தியானிக்கும். அஞ்சேல் - பயப்படாதே; உம் அரிய நெஞ்சம் - உம்முடைய அருமையான மனம்; சேவகங்கொள் இடம் - ஊழியஞ்செய்கிற இடம்; தெரித்தல் - தெரிவித்தல். அம் சேல் என ஒன்று சொல்லற்கிலாதும் - அழகிய கெண்டைமீன் போன்ற கண் என்று சொல்லற்கியலாதபடி; நெஞ்சம் - மார்பு; செஞ் சேவகம் கொள் இடம் - நான்கு யானை தங்கும் இடம்; யானை என்றது முலைகளை.

## 330

புன்கு பொரிசூழ் புகலூ ருறங்காப் புளியடியின்
மன்குமரற்குமுன் னோனை வணங்கி வழிவழிவாழ்
தன்குடி யிற்றில கம்ராச ராசன் றமிழ்வரையீர்
நன்கு வடுநல்கி னீர்நல்க லீரிதென் னரியரே.

புன்கு பொரி சூழ் - புன்கு மரத்தின் பொரி போன்ற மலர்கள் சூழ்ந்துள்ள; புகலூர் - சேதுநாட்டு ஊர்களில் ஒன்று; உறங்காப்புளி - எப்பொழுதும் இலை குவியாதிருக்கும் புளியமரம்; மன் - நிலைபெற்றுள்ள; குமரற்கு முன்னோன் - முருகனுக்கு முன்னோனாகிய விநாயகன்; முன்னோன் - மூத்தோன், தமையன்; வழிவழிவாழ் - தலைமுறைதலைமுறையாக வாழ்ந்து வருகின்ற; திலகம் - நெற்றிப் பொட்டு, தலைமை. நன்கு வடு நல்கி நீர் நல்கலீர் - நல்ல மாவடுவைத் தந்து குடிப்பதற்குத் தண்ணீரைத் தந்தீரில்லை என்பது வெளிப்படை; நன் குவடு நல்கினீர்; குவடு - மலை, முலை; நன்கு வடு நல்கலீர்; வடு - மாவடு போன்ற கண். நாரியர் - பெண்.

## 331

இனமுங் குடியும் படையு மரணு மெவையுமுள்ளோன்
சினமுங் கொலையும் மடியும் கடிந்தவன் செய்கையொப்ப
மனமுஞ் சொல்லு மூளராச ராசன் வரையினிலே
தனமும் பணமும் படைத்தார் கடன்மட்டுந் தந்திலரே.

இனம் - சுற்றம்; மடி - சோம்பல்; கடிந்தவன் - போக்கியவன்; செய்கை - செயல்; எண்ணம், சொல், செயல்கள் ஒத்த தன்மையன்; உள்ளம், உரை, உடல் என்னும் முக்கரணங்களாலும் தூயன் என்றபடி; தனம் - செல்வப்பொருள், முலை; பணம் - பொற்காசு, பாம்பின் படம்; அல்குல்; தனதானியம் முதலிய செல்வம் படைத்தவர் கடன்மட்டும் தந்தாரில்லை என்பது வெளிப்படை; கடல் மட்டும் தந்திலர் - கடல் போன்ற கண்ணை மட்டும் வெளிப்படுத்திக் காட்டினாரில்லை; தனமும் பணமும் படைத்தார் - முலையும் பாம்பின் படம் போன்ற அல்குலையும் பெற்றுள்ளார்.

## 332

மாதா கபாலி மருவிய கன்னி வனசைகலை
யாதார வாணி யிவர்சே வடிக ளநுதினமும்
மீதாக வைத்துத் தொழுராச ராசன் மிளிர்கிரியீர்
சூதாக நல்கினி ரம்பங்கை நல்கலிர் தோகையரே.

மாதா - தாய்; கபாலி - சிவபெருமான்; கபாலி மருவிய கன்னி - பார்வதி; வனசை - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; கலை ஆதார வாணி - கலைகளுக்கு எல்லாம் ஆதாரமாயுள்ள கலைமகள்; சேவடிகள் - சிவந்த திருவடித் தாமரைகள்; அநுதினமும் - எந்நாளும்; மீதாகவைத்து - தலைமேல் வைத்து, தலையால் வணங்கி; சூதாக நல்கினிர் - மாறுபட்ட கருத்துடன் பொருள் தந்தீர்; அம்பு - நீர்; அம்பு அங்கை நல்கலீர் - உங்கையால் நீர் வார்த்துந் தந்திலிர். இது மேற் போக்கான பொருள்; தோகையர் - மயில்போன்ற சாயல் படைத்த பெண்; சூது அகம் நல்கினிர் - சூதுகாய் போன்ற முலைகளை மார்பிடத்தே தந்தீர்; அம்பு - அம்பு போன்ற கண்; அங்கை நல்கலிர் - மறைத்துள்ள அழகிய கையை விடுத்துத் தந்தீரில்லை; மறைத்துள்ளீர் என்றபடி.

## 333

மஞ்செனத் தந்த கொடைப்பாற் கரவள்ளன் மைந்தன்பொய்யை
நஞ்செனத் தள்ளு பவன்றேவை காவலன் நற்றமிழ்க்கு
நெஞ்சனைத் தும்மகிழ் சீராச ராச னெடுங்கிரிவாய்
அஞ்சனக் கண்ணரு ளாதார்க்கு வல்லமை யாதெனலே.

மஞ்சு - மேகம்; தள்ளுபவன் - நீக்குபவன்; அஞ்சனக் கண் - கரிய கண், மைதீட்டப்பெற்ற கண்; வல்லமை - ஆற்றல், திறமை; கண்ணால் பார்த்துக் கருணை காட்டாதாருக்கு வல்லமை யாது என்று சொல்ல இயலும்; ஆற்றல் எதுவும் இல்லை என்றபடி. அஞ்சனக்கண் அருளாதார் கண்ணை மறைத்திருப்பவர்; வல் - சூது, முலை; அமையாது எனல் - பொருந்தாது என்று சொல்லுதல் காண் என்றவாறு.

## 334

பெருந்தானை மன்னர் செருவென்ற வீரப் பெருமிதத்தோன்
மருந்தான வின்கவி மாலையு முல்லையின் மாலையுந்தோள்
பொருந்தானை வேந்தனெஞ் சீராச ராசன் பொருப்பனையாய்
திருந்தானை யேற்றங்கண் டோங்காட்டு நன்குதிரையேற்றமே

பெருந்தானை - பெரும்படை; செரு - போர்; மருந்து - அமுதம்; மருந்தான இன்கவி - அமுதம் போன்ற இனிய பாடல்; மாலை தோள் பொருந்து ஆனை வேந்தன் என்க. பொருப்பு - மலை; திருந்து ஆனை யேற்றம் கண்டோம்; நன் குதிரை யேற்றமும் காட்டும் என்பது வெளிப் படை. திருந்து ஆனை ஏற்றம் - அழகிய முலை வெளிப்பாடு; நன்கு திரை ஏற்றம் காட்டும் - திரை - கடல், கண்; கண்ணின் உயர்வையும் காட்டும்; மறையாதீர் என்றபடி

## 335

தென்பாற் றமிழ்வளர் நாடாளு தற்குச் செகமுதித்த
நன்பாற் கரன்றரு சீராச ராச னளிர்வரைவாய்
இன்பா னிறைந்து மமிழ்தா யிருந்து மினிமைக்கணே
அன்பாற்கை வைத்து மெனக்கதி கார மரும்பினதே.

தமிழ்வளர்நாடு - சேதுநாடு; செகம்-பூமி; இன்பால் நிறைந்தும் இன்பத்தால் நிறைவுற்றும்; இனிமைக்கண் அன்பாற் கைவைத்தும் இனிமையில் அன்புடன் தோய்ந்தும்; அதிகாரம் அரும்பினது

அதிகாரம் உண்டாயது. இது வெளிப்படைப்பொருள். இன்பால் நிறைந்தும் - இனிய பால் நிறைந்தும்; பால் நிறைவுற்றமையால் அமிழ்தமாயிருந்தது. மைக் கண் - மைதீட்டப்பெற்ற கண்; கைவைத்தும் - கைவைத்து மறைத்தும்; எனக்கு அதிகாரம் அரும்பினது - எனக்கு அதிகாரம் அரும்பின்கண்ணது; அரும்பு - முலை.

336

மரம்பட மாக்கடல் வற்றி வறக்க வலியரக்கன்
சிரம்பட வாளிப் பெருமழை பெய்த திருப்புயலைத்
திரம்பட வேத்தித் தொழும்ராச ராசன் றிகிரியின்வாய்
சரம்விடுக் கத்தெரி யார்க்குவல் லாண்மை தருவதின்றே.

மரம்பட - மராமரம் துளைபட; வற்றி வறக்க - வற்றிக் காய்ந்து போகும்படி; வலியரக்கன் - வலிமை பெற்ற அரக்கனாகிய இராவணன்; சிரம்பட - தலை அற்று விழும்படி; வாளிப் பெருமழை - அம்புமழை. வாளிப் பெருமழை பெய்த திருப்புயல் என்க. திருப்புயல் - அழகிய மேகவண்ணனாகிய இராமன். திரம்பட - உறுதியாக; ஏத்தித் தொழும் - துதித்து வணங்கும்; திகிரி - மலை; சரம் - அம்பு; அம்புவிடத் தெரியாதவருக்கு வலிய வீரம் பொருந்தாது என்பது வெளிப்படை. சரம் விடுக்கத்தெரியார் - அம்பு போன்ற கண்ணை வெளிப்படுத்தத் தெரியாதவர்; வல் - சூது, முலை; வல் ஆண்மை - முலையினது ஆளும் தன்மை; தருவதன்று - பொருந்தாது, ஏற்றதாகாதது.

337

அஞ்சித் தொழுஞ்சிற் றரசர்க் கரணென லாகியன்பால்
எஞ்சித் தந்தித்திப் பவன்ராச ராச னிருங்கிரிவாய்
நெஞ்சிற் குவடு மிகுந்துள ராகின்ற நேரிழையார்
தஞ்செய்கை யென்றும் வடுப்பட்ட தாதல் தகுதியதே.

அரண் - கோட்டை, காப்பு; எம் சித்தம் தித்திப்பவன் - என் மனத்துக்கு இனிப்பவன்; நெஞ்சிற்கு உவடு மிகுந்துளதாகிய நேரிழையார் - உவடு - வெறுப்பு; நெஞ்சினிடத்து வெறுப்பு மிகவுடையராகிய பெண்டிரின் செய்கை குற்றமுடைத்தாதல் பொருத்தமானதே என்பதாம். நெஞ்சில் குவடு மிகுந்துளர் -மார்பிடத்தே முலை மிகுந்து காணப்படுவர்; குவடு - மலை, முலை; தம் செய் கை வடுப்பட்டதாதல் தகுதியதே - தம்முடைய சிவந்த கை எப்பொழுதும் கண்ணில் பொருந்தியிருப்பது ஏற்றதாகுமா? ஆகாது என்றபடி. வடு - மாவடு, கண்.

## 338

அரவிழி யார்மயி லன்னார் மடலெழு தாரழகன்
இரவிழி யாதெமை யாதரிப் போன்புவி யேந்துவர்சீர்
பரவிழி யாநிலைச் சீராச ராசன் பனிவரைவாய்க்
கரவிழி யாரென்று கண்டேந் தனக்கொடை காண்டலினே.

அரவிழியார் - அரம்போலக் கூரிய கண்ணுடையவர்; மயிலன்னார் - மயில்போன்ற சாயலையுடையவர்; ஆர் அழகன் - நிரம்பிய அழகுடையான்; இரவிழியாது - இரத்தலினால் தாழ்வுறாது; புவியேந்துவர் - பூமியாளும் அரசர்; சீர்பரவு - சிறப்புகளை எடுத்துரைக்கிற; இழியா நிலை - தாழ்வில்லா உயர்நிலை; பனி - குளிர்ச்சி; தனக்கொடை காண்டலின் கரவு இழியார் - செல்வத்தைக் கொடுத்தலில் மறைக்கும் இழிநிலையுளார் என்பது வெளிப்படை. கர விழியார் - கையில் மறைத்த கண்ணுடையவர்; தனக் கொடை - முலையாகிய கொடை.

## 339

பிடிக்கை யனைய துடையார் மடன்மாப் பிடிக்குமதன்
அடிக்கை யுடைய குணின்முர சார்முன்றி லான்புலவர்
படிக்கை யுடைய புகழ்ராச ராசன் பனிவரைவாய்
வடிக்கையுண் டாகுங்கொ லோதனம் பொங்கற்கு வைத்தபின்னே.

பிடிக்கை - பெண்யானையின் துதிக்கை; மடன்மா - மடலேறுவதற்கான குதிரை; மதன் - மன்மதன் போன்ற அழகன்; குணில் - முரசு அடிக்கும் குறுந்தடி; முன்றில் - முற்றம்; புலவர் படிக்கையுடைய புகழ் - புலவர் பாடும் புகழ்; ஓதனம் பொங்கற்கு வைத்தபின் வடிக்கையுண்டாகுங் கொலோ - சோற்றை பொங்குமாறு விட்டபின்பு கஞ்சி வடிப்பதற்கு இயலுமோ; இயலாது என்றபடி; வடிக் கை உண்டாகும் கொலோ - மாவடு போன்ற கண்ணில் கை பொருந்துவதாகுமோ; கையால் கண்ணை மறைத்தமை சுட்டியவாறு. தனம் பொங்கல் - முலை வெளிப்படல்.

## 340

அகழாக வாழி சுலாவும் பெரும்புவி யாளவறம்
இகழாதவ னெங்கள் சீராச ராச னிருங்கிரிவாய்த்
திகழ்மா னிடருறு கண்விடுக் காதிருந் தேவரைநீ
புகழ்கூர் தரச்சிறை நீக்கலுற் றுய்மலர்ப் பூங்கொடியே.

அகழ் - அகழி; ஆழி - கடல்; சுலாவும் - சூழ்ந்திருக்கும்; பெரும்புவி - பரந்த பூமி; அறம் இகழாதவன்-அறத்தைக் கீழாக நினையாதவன், அற நிலை தவறாதவன்; திகழ்மானுடர் - உலகில் நிலவும் மனிதர்; உறுகண் - துன்பம்; உலகில் உள்ள மனிதர் துன்பத்தைப் போக்காது பெரிய தேவரை நீ புகழுமாறு சிறையிலிருந்து விடுவித்தாய் என்பது வெளிப் படை; மலர்ப்பூங்கொடியே - மலர்க்கொடி போன்ற பெண்ணே, விளி; திகழ் மான் இடருறு கண் - விளங்கும் மான் போலத் தாவும் கண்; கண் விடுக்காதிருந்தே - கண்ணைக் கையிலிருந்து வெளிப்படுத்தாமலிருந்தே; வரை நீ புகழ் கூர்தரச் சிறை நீக்கலுற்றாய் - வரை மலை, முலை. சிறை நீக்கலுற்றாய் - கட்டிலிருந்து வெளிப்படுத்தினாய்.

## 341

இன்புடை நற்றமி ழாய்கின்ற வேந்த னிரும்புலவர்
தன்புடை வைத்துவப் போன்ராச ராசன் றமிழ்வரைவாய்
என்றெய்வம் போலுவை மாவீடு தந்துளை யேனுநின்கண்
அன்புடை யேற்குத் திருவடி யேதந் திலாயணங்கே.

இன்புடை - இனிமையுடைய; நற்றமிழ் - நல்ல தமிழ், இலக்கியத் தமிழ்; ஆய்கின்ற - ஆராய்கின்ற; புடைவைத்து - பக்கத்தில் வைத்து; உவப்போன் - மகிழ்விப்பவன், என் தெய்வம் போலுவை - என் தெய்வம் போலக் காட்சியளிக்கின்றாய்; மாவீடு தந்துளை - பெரிய வீட்டின் பத்தைத் தந்துள்ளாய்; திருவடியே தந்திலாய் - திருவடியை அளித்தா யல்லை மா வீடு தந்துளை - மாப் போலும் முலையை விடுத்தாய்; மா - யானை, முலை; திரு வடி - அழகிய மாவடு போலும் கண்.

## 342

படைகாட் டியவென்றி பாடும் புலவர் பரிசிலர்க்குக்
கொடைகாட் டியகரன் சீராச ராசன் குளிர்வரையாய்
கடைகாட் டிலாது கடைக்கயல் காட்டிய காரணத்தா
லிடைகாட் டிலாநங்கை நிற்கே யிராசி யிலையென்பரே.

படை காட்டிய வென்றி – போரில் பெற்ற வெற்றி; பாடும் புலவர் - புகழ்பாடும் புலமையாளர்; பரிசிலர் - பரிசில் வேண்டி இரப்போர்; இடை காட்டிலா நங்கை-இடையைக் காட்டாத பெண்ணே, விளி. நுண்ணிடை யாள் என்பது புலப்படுத்தியவாறாம். கடையைக் காட்டாது கடைக்கு

வெளிப்பக்கத்தைக் காட்டிய ஏதுவால் பெருக்கம் இல்லை என்பர் என்பது மேற்போக்கான பொருள். இராசியில் கடை - மீனம்; கண்ணுக்கு உவமை; இராசியிற் கடைக்கு அயல் - கும்பம்; முலைக்கு உவமை. இராசியிலை - பொருத்தமில்லை.

## 343

அன்பம ரும்பெரு நண்பரைத் தன்னெக்க வாதரித்தல்
தன்பர மென்று தெரிந்தவன் தேவைத் தராபதிபார்
மன்பர வும்புகழ்ச் சீராச ராசன் வளவரைவாய்
இன்ப மரங்கையுள் ளாரெனக் கீந்தன ரின்கனியே.

பரம் - பொறுப்பு, கடமை; தேவைத்தராபதி — இராமேசுவரத்தை ஆளும் அரசன்; தராபதி - அரசன்; பார்மன் - உலகிலுள்ள மன்னர்; பரவும் புகழ் - துதிக்கும் படியான கீர்த்தி; இன்ப மரம் கையுள்ளார் எனக்கு இன்கனி ஈந்தனர் என்பது வெளிப்படை. பமரம் - வண்டு, கண்; இன் பமரம் கையுள்ளார் - இனிய கண்ணைக் கைப்பற்றியவர்; கனி - கனிபோன்ற முலை.

## 344

கவரியை யீச்சோப் பியையால வட்டத்தைக் கைப்பிடித்துத்
துவரியை சேயிதழ் வேளமின் ஞர்பணி சூழ்வரவிண்
சுவரியை தேவை வருராச ராசன் றெடர்வரைவாய்
உவரியை நீர்கைவைத் தீர்நல் லசல முதவினிரே.

கவரி, ஈச்சோப்பி, ஆலவட்டம் என்பவை விசிறிவகை. கவரி - வெண் சாமரம்; ஈச்சோப்பி - ஈயொட்டி, ஒருவகை விசிறி; ஆலவட்டம் - பெரு விசிறி; துவர்இயை சேயிதழ் - பவளத்துக்கு ஒப்பான சிவந்த உதடு: வேளமின்னார் - சிறைப் பிடிக்கப்பட்ட மகளிர்; பணிசூழ்வர - பணிமாறி வர, வீசிவர; தொண்டு செய்து சுற்றிவர; விண்சுவர் இயை தேவை - வானளாவ உயர்ந்த மதிலை யுடைய தேவைப்பதி. உவரி - உவர்நீர், உப்பு நீர்; உவர் நீரை நீர் கைவைத்துக்கொண்டு நல்ல நீரைத் தந்தீர் என்பது வெளிப்படை. நல்ல சலம் - நல்ல தண்ணீர்; உவரி - கடல், கண்; நல் அசலம் - நல்ல மலை. மாலை.

### 345

தளர்விலை யாக முயல்வோன் முகவையிற் றன்மனைமுன்
கிளரொளி மேய திருவாயின் மாடங் கெழுமுவித்தன்
புளர்பலர் சூழ்தரு சீராச ராச னுயர்கிரியீர்
வளரொளி யுண்டென்ப ரான்மணி நாகம் வரப்பெறினே.

தளர்விலையாக - சோர்வு இன்றி; மனை - அரண்மனை; வாயின் மாடம் - முகமண்டபம்; கெழுமுவித்து - பொருந்த அமைவித்து; மணி நாகம் - அழகிய மலை; மணிவடம் அணிந்த முலை; வளர் ஒளி - கண்; இங்கு முலை வெளிப்பட்டும் கண் வெளிப்படவில்லை என்பது குறிப்பித்தவாறாம்.

### 346

அளியின் றெனிற்கொடை யாற்பய னென்ன வணிமனத்துக்
களியின் றெனிற்செல்வத் தாற்பய னென்னு டகத்தினென்ன
விளியின் றெனினெனுஞ் சீராச ராசன்றன் வெற்பிடத்தே
ஒளியின் றெனினத் திரியாற் பயனென் னுளதணங்கே.

அளி - கருணை; களி - மகிழ்ச்சி; விளி - பேச்சு; வெற்பு - மலை; ஒளி - விளக்கு, ஒளி இன்றெனின் அத் திரியாற் பயன் என் உளது. விளக்கொளியில்லாத அந்த வெறுந்திரியாற் என்ன பயன் உளதாகும். ஒளி - கண்; அத்திரி - மலை, முலை.

### 347

படைநாக மேறி வெலும்ராச ராசன் பனிவரைவாய்
இடைநாகம் வைத்திரு நாகம் விடுத்தொரு நாகத்தினைப்
புடையாட விட்டு விடனுக மின்னங்கை போந்திருந்தும்
கடையாக [illegible] மிலாதவ ராயதென் காரணமே.

படை. நாகம் ஏறி வெலும் - படையை யானை மீது ஏறிச் சென்று வெல்லும்; நாகம் - யானை, ஆகாயம், மலை, பாம்பு, ஆடை. இடை நாகம் - இடையாகிய ஆகாயம்; ஆகாயம் - வெளி; இருநாகம் - இரு மலையாய தனம்; ஒரு நாகம் - ஒரு பாம்பாகிய அல்குல்; விடன் ஆக மின் அம்கை - விடமாகிய கண்ணிடத்தாக மின்னும் அழகிய கை; கடையாக நாகமிலாதவர் - இறுதியாகத் தூசில்லாதவர்.

348

கொலையைத் தடவிய வைவேன் மறவர் குடிக்கரசாய்ச்
சிலையைத் தடவுந் தளவாய் வழிவந்து சேரலரைத்
தலையைத் தடவிய சீராச ராசன் தடவரைவாய்
மலையைத் தொடாம லலையடைத் தீரணை வாய்த்தலின்றே.

கொலையைத் தடவிய - கொலையைச் செய்த; வைவேல் - கூரிய வேல்; சிலை - வில்; தளவாய் - சேதுகுல முன்னோராகிய வீரன்; சேரலர் - பகைவர்; தலையைத் தடவிய - தோல்வியுறச் செய்த· மலையைந் தொடாமலே கடலை அடைத்தீர்; அதனால் அந்த அணை உருப்பெறுதல் இல்லை; கைகூடாது என்பதாம். மலை - முலை; தொடாமல் - தொட்டு மறையாமல்; அலை - கடல், கண்; அணை - அணைப்பு, புணர்ச்சி; வாய்த்தல் இன்று - கிட்டுவதில்லை

349

கலைகற் றனமென வந்தார் தரதமங் கண்டவரை
நிலைபெற் றனமெனச் சொல்லவைப் போனென்று நீளவைமிற்
றலைபெற்ற நன்புகழ்ச் சீராச ராசன் றமிழ்வரைவாய்க்
கொலைகற் றனமெனக் காட்டிச் செய்விரெமன் கொள்கையினே.

தரதமம் - தாரதம்மியம், உயர்வு தாழ்வு; நிலைபெற்றனம் - வாழ்க்கையில் நிலையான தன்மையைப் பெற்றோம்; நீளவை - பெரிய சபை; தலைபெற்ற - தலைமைபெற்ற; எமன் கொள்கையின் கொலை கற்றனம் எனக் காட்டிச் செய்வீர் - கொல்லும் எமன் கொள்கையினால் கொலையைக் கற்றோம் எனக் காட்டிப் போர் செய்வீர் என்பது வெளிப்படை. கொலை கல் தனம் எனக் காட்டி - வருத்தும் மலை போன்ற முலையைக் காட்டி; எமன் கொள் கை - கண்ணைப் பொதிந்த கை.

350

கரிதிகழ் தேர்ப்பரி காலா ளிவைகொடு காசினியில்
விரிதிரை போல்வரு சீராச ராசன் மிளிர்வரைவாய்
அரிதிவ ணெய்தினிர் தும்பிக்கை வாய்ந்தவ ராதல்கண்டேம்
பெரிது முலையிடை யூறுசெய் யாவணம் பேணுதிரே.

கரி - யானை; பரி - குதிரை; யானை, தேர், குதிரை, காலாள் இவை நாற்படையாம். காசினி - பூமி; விரிதிரை - பரந்த கடல்; இவண் அரிதின் எய்தினிர் - இங்கே மிகவும் அருமையாய் வந்துள்ளீர்; தும்பி - வண்டு, கண்; தும்பி கை வாய்ந்தவராதல்; கண்ணைக் கையால் மறைத்தவராதல்; பெரிதும் முலை இடை ஊறு செய்யாவணம் பேணுதிர் - மிகுதியும் உம் முலை இடைக்குத் துன்பம் செய்யாவண்ணம் காப்பீர். இப்பொழுது முலை வெளிப்பட்டு இடைக்கு ஊறு செய்துகொண்டிருக்கிறது என்பதாம்.

351

காருக்கு முந்து கொடைப்பாற் கரவள்ளல் கண்டதவம்
பாருக் குவந்த தெனுராச ராசன் பணிவரைவாய்
ஆருக்கு மாகமுன் னல்வாயி லல்லாம லவனியிலே
பேருக் கெனினுமுண் டோவம்பு கையிற் பிணைமயிலே.

கார் - மேகம்; முந்து-விஞ்சிய; பார் - பூமி; ஆருக்குமாக - ஆருக்கானாலும் ஆகட்டும்; முன்னால் - முற்பட; அவனியிலே வாயில் அல்லால் கையில் வம்பு உண்டோ என்க. முற்பட வாயினால் வம்பு வளர்ப்பது உண்டே யன்றிக் கையில் வம்பு வளர்ப்பதில்லை என்பது வெளிப்படை. ஆகம் முன் நால்வாயில் அல்லாமல்-மார்பின் முன்னால் யானை போன்ற முலைக்கு அல்லாமல்; நால்வாய் - யானை, முலை; வம்பு உண்டோ - கச்சுக் கட்டுவது உண்டோ? முலைக்கே கச்சுக்கட்டுவர் என்பதாம்; அம்பு கையில் பிணை - அம்புபோன்ற கண்ணைக் கையில் கொண்டுள்ள; மயிலே - மயில் போன்ற சாயலையுடைய பெண்ணே.

352

மாரி வழங்குதல் போலே வழங்கி மகிதலத்துப்
பாரி வழங்கவந் தான்பின்னு மென்றெண்ணும் பாற்கரன்சேய்
வேரி வழங்கு தொடைராச ராசன்றண் வெற்பினுள்ளே
வாரி வழங்க வறியார் தனத்தை மருவியென்னே.

மாரி - மேகம்; மகிதலம் - பூமி; பாரி - கடையெழுவள்ளல்களுள் ஒருவன்; பறம்பு மலைக்குத் தலைவன்; பாரியே மீண்டும் கொடை தர வந்தான் என்று எண்ணும்படியாக அமைந்தது பாற்கர சேதுபதியின் கொடை. சேய் - புதல்வன்; வேரி - தேன்; தொடை - மாலை, முல்லை

மாலை; செல்வத்தை அள்ளிப் பிறருக்குக் கொடுக்கத் தெரியாதவர் செல்வத்தைப் பெற்றும் என்னபயன் என்பது வெளிப்படை; வாரி - கடல், கண்; கண்ணை வழங்க அறியார் - கண்ணை மறைத்தவர் என்றபடி. தனம் - முலை.

## 353

மலைமேல் மலைவிளக் காகின்ற சோலை மலையழகன்
நிலைமேய நெஞ்சன் சீராச ராச னெடுங்கிரிவாய்
இலைமே லிருந்த வரைவெளி யேற்றி யெமையுணச்செய்
திலையே யருளென்ன நின்ரு ரையுமறித் தென்பயனே.

மலைமேல் - திருமாலிருஞ்சோலைமலைமேல்; மலை விளக்கு - குன்றின் மேலிட்ட தீபம்; நிலை - திருவடிநிலை; இலைமேலிருந்தவரை வெளியேற்றி - உண்பதற்காக இலையின் முன்னிருந்தவரை வெளியேறச் செய்து; எமை உணச் செய்திலை - எம்மை உண்ணுமாறு செய்திலை; அருள் என நின்றாரையும் மறித்து என்பயன் - கருணையுருவாய் நின்றாரையும் தடுத்ததால் விளையும் பயன் என்ன; ஒன்றும் கிட்டாது என்பதாம். இது வெளிப்படைக் கருத்து. இலை மேல் இருந்த வரை வெளியேற்றி - ஆலிலைபோன்ற வயிற்றின் மேல் இருந்த மலைபோன்ற முலையை வெளியே புறப்படவிட்டு; எமை உணச் செய்திலை - யாம் துய்க்குமாறு செய்தாயில்லை; அருள் என்ன - வழங்கியருள் என்று வேண்ட; தாரை - வேல், கண்.

## 354

கொன்னவில் வேற்படை வீரர் குடிக்கிறை கூர்ந்தறிந்து
சொன்ன மொழியிரண் டில்லாத வன்பாச் சுவைதெரிந்தே
யென்ன பொருளுந் தரும்ராச ராச னிருங்கிரிவாய்
மன்னகி லந்தந்து ளீர்பத் திரத்தை வழங்குவிரே.

கொல் நவில் வேற்படை - கொல்லுதலில் பயின்ற வேலாயுதம்; வீரர்குடி — மறவர் குலம்; கூர்ந்து அறிந்து - நுட்பமாக ஆராய்ந்து அறிந்து; சொன்ன மொழி இரண்டு இல்லாதவன் - சொன்னசொல் மாறாமல் ஒன்றே உரைப்பவன்; பாச்சுவை - தமிழ்ப்பாட்டின் இன்சுவை; என்ன பொருளும் - எத்தகைய பொருளும், எல்லாப் பொருளும்; மன் அகிலம் தந்துளீர், பத்திரத்தை வழங்குவிரே - நிலையாகப் பூமியைத்

தந்துளீர், உரிமைப்பத்திரத்தை வழங்குவீர் என்பது வெளிப்படை. மன் நகிலம் தந்துளீர் - மார்பில் பொருந்திய முலையைக் கொடுத்துள்ளீர்; பத்திரம் - வாள், கண்.

355

திரிக்கப் படாநன் னெறியிற் றிகழ்கின்ற சேதுபதி
பிரிக்கப் படாவளத் தான்ராச ராசன் பெருமலைவாய்
தெரிக்கப் பெருவித் துணையா வரையுந் தெரியவைத்தும்
அரிக்கய லாகின்ற கையருக் கென்னுள்ள மார்வமின்றே.

திரிக்கப்படா நன்னெறி - மாறுபாடில்லாத நல்வழி; பிரிக்கப்படா வளம் - வகைப்படுத்தி அறிய இயலாத பெருஞ்செல்வம்; தெரிக்கப்பெறு ஆவித்துணை யாவரையும் தெரியவைத்தும் - ஆவித்துணை - உயிர்த் துணை; அரிக்கு அயலாகின்ற கையர் - பகைவரைக் காட்டாது வேறு பட்டிருக்கிற கீழோர்; ஆர்வம் - விருப்பம். தெரிக்கப்பெறா இத் துணையாவரையும் தெரியவைத்தும் - வரை - மலை, முலை; அரிக்கயல் -செவ்வரி படர்ந்த மீன் போன்ற கண். கையர் - கையையுடையவர்.

356

பொற்கை வழுதிக் கொப்பாகப் புவியைப் புரந்துநடு
நிற்கை வழாதவன் சோடச தான நிதிவழங்கு
மற்கையி னுனெங்கள் சீராச ராசன் வரையிடத்தே
கற்கைநன் றென்பர்கள் கட்கைபொல் லாதென்பர் காரிகையே.

பொற்கைவழுதி - பொற்கைப் பாண்டியன்; நீதியை நிலைநாட்டத் தன்கையையே துணித்ததனால் பொற்கை பெற்றவன்; புவியைப் புரந்து - பூமியைக் காத்து; நடு நிற்கை - நடுவுநிலையில் நிற்றல்; வழாதவன் - தவறாதவன்; சோடசதான நிதி வழங்கும் கை, மற்கை என்க. சோடச தானம் - பதினாறுவகையான தானம்; அவையாவன: பசு, நிலம், எள், நெய், வெள்ளி, உப்பு, நெல், உடை, வெல்லம், தங்கம் என்பவை தச தானம் என்றும் இவற்றுடன் ஆசனம், விளக்கு, குடை, செருப்பு, படுக்கை, பழம் என்னும் ஆறும் சேரச் சோடச தானம் என்றும் உரைப்பர். சோடசம் - பதினாறு; மல் - வலிமை; கற்கை - படித்தல்; கட்கை - களவு; பொல்லாது - தீங்கு; கல்கை - முலையிடத்தே கை; கட்கை - கண்ணுடைய கை. பொல்லாது - குற்றமுடையது.

**357**

விண்டொடு கோபுரத் தேவைப் பதியிரா மேசனடி
கண்டொடுஞ் சேவையன் சீராச ராசன் கனவரைவாய்
ஒண்டொடி கண்ணே யுளவைம் புலனுமென் றோதினர்தாம்
கண்டில ரும்மையங்தோ வொத்தவின் பங்கண் கண்டிலையே.

விண் - ஆகாயம்; இராமேசன் - இராமநாதன்; கண்தொடும் சேவையன் - கண்ணால் தொட்டு வணங்குபவன்; எட்டு அங்கமும் நிலம்தோய விழுந்து வணங்குபவன்; ஒண்டொடி கண்ணே உள ஐம்புலனும் என்று ஓதினர் - திருவள்ளுவர்; பெண்ணிடத்தே ஐம்புல இன்பங்களும் ஒருங்கே பொருந்தியுள என்பதாம். 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள' (குறள். 1101) என்னும் வள்ளுவர் குறளைக் கவிஞர் இப்பாடலில் எடுத்துக் காட்டியுள்ளார். ஒத்த இன்பம்-முலைகளால் இணைந்த இன்பம்; கண் கண்டிலை - கண்ணால் பார்த்தா யில்லை

**358**

களவென்ப தின்றிப் புவிப்பரப் பைத்தனிக் காத்தபுகழ்
உளவன் கிழவன் ரகுநாதன் சேதுக்கு வாய்த்தவன்போல்
அளவின்று பாடல் புனைராச ராச னணிவரைவாய்
வளவன்முன் மற்றை யிருவர் கொடியு மறைந்தனவே.

தனிக் காத்த புகழ் - ஒருவராய் நின்று காத்த புகழ்; புகழ் உளவன் கிழவன் ரகுநாதன் என்க. கிழவன் ரகுநாத சேதுபதி அமிர்த கவிராயரால் ஒருதுறைக் கோவை பெற்றவர்; இவர் 1645 முதல் 1670 வரை சேது நாட்டை ஆண்டவர்; அளவின்று பாடல் - அளவிடமுடியாத புகழ்ப் பாடல்கள். வளவன் - சோழன்; மற்றை இருவர் - சேரர், பாண்டியர்; வள வல் முன் - வளம் பொருந்திய சூதாகிய தனத்தின் முன்; இருவர் கொடி. -சேரன் கொடியாகிய சிலைப்புருவமும் பாண்டியன் கொடியாகிய் கயற்கண்ணும்.

**359**

மெய்கொண்ட செந்தமி ழேடெதி ரேறிய வீறுவைகை
செய்கொண்டு நெல்விளைக் குஞ்செம்பிநாடு செழிக்கவரும்
பொன்கொண் டிலாமொழி யான்ராச ராசன் புனவரைவாய்க்
கைகொண்டு நீர்கட் படாமிட் டியானையைக் காட்டினிரே.

மெய் கொண்ட செந்தமிழ் ஏடு - உண்மையான தெய்வப் பாடலைத் தாங்கிய ஏடு; திருஞான சம்பந்தர் சமணருடன் நிகழ்த்திய நீர்வாதத்தில் எழுதியிட்ட 'போக மார்த்த பூண்முலையாள்' (தேவா. 1:49) என்று தொடங்கும் திருப்பதிகம். இப் பதிகம் எழுதிய ஏட்டைத் திருஞான சம்பந்தர் வைகையில்விட அது எதிரேறிச் சென்று திருவேடகத்தில் கரையில் ஒதுங்கியது என்பது வரலாறு. வீறு - பெருமை, அழகு; செய் - வயல்; கட்படாம் - யானை முகபடாம். கைகளால் முகபடாம் இட்டு யானையை அலங்கரித்துத் காட்டினீர் என்பது வெளிப்படை. கண்படாம் இட்டு - கண்ணுக்குத் திரையிட்டு, அதாவது கண்ணைக் கையால் மறைத்து; யானை - முலை.

## 360

உறுகாலத் தூற்ற யிருப்பவன் சேதும ஞென்னலரை
இறுகாலற் கீபவ னெக்காலும் பொய்யை யிகந்ததமிழ்ச்
சிறுகாலைக் கற்றுத் தெளிராச ராசன் றிகிரியிலே
அறுகாலுக் கெண்காற் பொருள்பெரி தென்ப தறிந்திலையே.

உறுகாலத்து - துன்பம் உற்ற காலத்து; ஊற்றாயிருப்பவன் - ஊன்று கோலாயிருந்து தாங்குபவன்; 'இழுக்க லுடையுழி ஊற்றுக்கோலற்றே ஒழுக்க முடையார்வாய்ச் சொல்' என்னும் திருக்குறள் (415) இங்கு நினைவு கூரத்தக்கது. உறுகாலத்து ஊற்றாயிருப்பவன் என்பதற்கு வெயில் உறுகாலத்து ஊற்று நீர் போல் இருந்து உதவுபவன் என்றும் கொள்ளலாம். ஒன்னலர் - பகைவர்; இறுகாலன் - கொல்லும் யமன்; எக்காலும் - எந்தக் காலத்திலும்; இகந்த - நீங்கிய; சிறுகாலை - இளம் வயது; அறுகாலை விட எண்கால் பெரிது என்பது வெளிப்படை. அறுகால் - வண்டாகிய கண்; எண்கால் - எட்டுக்கால், இரண்டு பொருள் - தனம்; எண்காற் பொருள் இரண்டு தனம்.

## 361

திங்க ளௌனக்கலை வர்ண ரவையிற் றிகழ்ந்தவர்தாம்
எங்கண் மணியெனச் சொற்றிறம் தேருந ரேந்திரன்சீர்
பொங்கும் வளச்செம்பிச் சீராச ராசன் புனவரையிற்
றங்கண் மணியின்றி யானை வெளிவிடுத் தாரிலையே.

திங்கள் - முழுமதி, பூர்ணச் சந்திரன்; கலைவாணர் அவை - பல கலைகளிலும் வல்ல புலவர் நிறைந்த சபை; கண்மணி என - கண்ணின் கருமணி என்று போற்ற; சொற்றிறம் - சொல்லின் நயம்; நரேந்திரன் - மக்களின் தலைவன், அரசன்; மணியின்றி யானை வெளிப்படுத்தா ரிலை - மணி கட்டாமல் யானையை வெளியில் விட்டாரில்லை என்பது வெளிப்படை; தம் கண் மணி இன்றி - தம்முடைய கண்பார்வை இல்லாமல்; யானை - முலை.

### 362

தலையா லுலகு தொழுந்தநுக் கோடித் தலைவனன்பின்
வலையா லெனைப்பிணித் தோன்ராச ராசன் வளர்கிரியீர்
மலையா சலத்தொ டகத்திய ஞரை மருவினர்க்கும்
உலையாத மாக்கடல் கையேந்த லாமென் றுணர்ந்தனமே

உலகு - உலகத்தார், ஆகுபெயர்: மலையாசலம் - மலையமலை, பொதியமலை; இது அகத்தியனார் இருப்பிடம்; மலையமலையோடு அகத்தியனாரைச் சேர்ந்தவர்க்கும் அகத்தியனார் கடலைக் கையில் அடக்கியதுபோல், கெடாத பெரிய கடலைக் கையில் ஏந்தலாம் என்று உணர்ந்தோம் என்பது வெளிப்படை; உலையாத - கெடாத; மாக்கடல் - பெரிய கடல்; மலையாசலம் - முலைக்கு ஒப்பு; அகத்து இயல் நாரை - மார்பிலே பொருந்திய கச்சினை; மருவினர் - பொருந்தியவர்; அகத்து இயல் நாரை மருவினர் என்றது தனங்களைக் குறித்தபடி, மாக்கடல் - பெரிய கடல் ஒத்த கண்.

### 363

குறும்பு தனைவென் றெழுபது பாளையக் கொற்றவரும்
பெறும்பத விக்குத் தகவரி சைப்படி பேணிவணங்
குறும்பத தாமரை யான்ராச ராச னுயர்வரைவாய்
எறும்பி தனைத்தெரி வித்தேநற் றேனை யெடுத்தனையே.

குறும்பு - பகைவர்; பாளையம் - அரசனுக்குப் போரில் உதவ வேண்டும் என்னும் நிபந்தனையுடன் வீரக்குடியினர்க்கு விடப்பட்ட நிலம்; கொற்றவர் - தலைவர்; வரிசைப்படி - தங்களின் பதவி வரிசை முறையில்; எறும்பி - எறும்பு; எறும்புக்குக் காட்டி நல்ல தேனைத் தேர்ந்தெடுத்தாய் என்பது வெளிப்படை; எறும்பி - யானை, முலை; தேன் - வண்டு, கண்; எடுத்தனை - கண்ணைக் கையில் பெற்றாய்; கையால் மறைத்தாய் என்றவாறு.

364

என்றிடை வந்த குலமர போனெது போதுமுள்ளம்
நன்றிடை யல்லது செல்லாத தூயவ னண்ணலரைச்
சென்றிடை யட்டவன் சீராச ராசன் செழும்புவியிர்
குன்றிடை விட்டனை கண்ணில்லைகை யைக்கொடுத்தருளே.

என்று - சூரியன்; என்றிடை வந்த குலமரபோன் - சூரியகுல மரபினைச் சார்ந்தவன்; எதுபோதும் - எந்தச் சமயத்திலும்; நன்று - அறம்; தூயவன் - மனம் வாக்கு மெய்யில் தூய்மையானவன்; நண்ணலர் - பகைவர்; இடை அட்டவன் - போரிடத்துக் கொன்றவன்; செழும்புவி - வளப்பம் மிக்க நாடு; குன்றிடை - மலைவழியில்; கண் இல்லை - கண் பார்வை இல்லை; கைகொடுத்தருள் - நடப்பதற்கு கை கொடுத்து உதவுவாய். குன்று - மலை, முலை; இடை இட்டனை - இடையின் மேலே தெரிய விடுத்தாய்; கையைக் கொடுத்தருள் - மறைத்த கையை எடுத்துக் கண்ணைக் காட்டி உதவு.

365

அடலுண்ட வைவேன் மறமன்னர் சென்னி யணிகழலான்
திடல்கொண்ட தேவை யிராமேசர் தாள்புனை சென்னியன்தோள்
மடல்கொண்ட முல்லையன் சீராச ராசன் மலயமின்னே
கடலுண்ட கையுடை யாய்குன் றினையென்னை காரணமே.

அடலுண்ட - கொல்லும் தன்மை படைத்த; வைவேல் - கூரிய வேல்; சென்னி - தலை - கிரீடம்; கழலான் - பாதத்தையுடையவன்; திடல் கொண்ட தேவை - கடலிடையே தீவுத்திட்டாக விளங்கும் இராமேசுவரம்; இராமேசர் - இராமநாதர்; மடல் - இதழ்; கடலுண்ட கை - கடலைப் பற்றின கை; கடல் - கண்; குன்றினை - குறைவுபட்டாய்; மலையினை யுடையாய் - மலை என்றது முலையினை.

366

தண்டில்லை யாடுந் தனித்தே றலைநெஞ்சந் தங்கவைத்துக்
கொண்டில்லை நீத்தமுத் தாய்நாச்சி பேரன் குவலயத்தோர்
கண்டில்லை யொப்பெனுஞ் சீராச ராசன் கனவரைவாய்
வண்டில்லை யென்னின் மணமில்லை யென்ப வனசத்திலே.

தண் தில்லை ஆடும் தனித்தேறல் - குளிர்ந்த தில்லைப் பதியிலே நடமாடும் ஒப்பற்ற தேனாகிய நடராசன்; இல்லை நீத்த - குடும்பத்தை விடுத்த, துறவு பூண்ட; முத்தாய் நாச்சி - இராசராச சேதுபதியின் பாட்டி; குவலயத்தோர் - உலகத்தோர்; ஒப்பு - சமமானவர்; வனசம் - தாமரை; வண்டு மொய்த்தல் இல்லையானால் தாமரையில் வாசனை இல்லை என்று சொல்லுவர் என்பது வெளிப்படை. வண்டு - வண்டு போன்ற கண்; வனசம் - தாமரை முகை போன்ற முலை; மணம் இல்லை - வாசனை இல்லை, சிறப்பு இல்லை.

## 367

தண்டக நாடு முதலாக வெந்தத் தரையினருந்
தொண்டக னோடு புரிகின்ற சேது துரந்தனூர்
செண்டக வாசியி னுன்ராச ராசன் றிருவரைவாய்க்
கண்டகங் கைமறைத் தாரிம யத்தினைக் காண்பொழுதே.

தண்டக நாடு - தொண்டைநாடு; தரையினர் - நாட்டார்; தொண்டு- நற்பணி; அகனோடு - உள்ளன்போடு; சேதுதுரந்தரன் - சேதுகாவலன்; செண்டகம் - வையாளி வீதி; குதிரை முதலியவற்றைப் பழக்கிச் செலுத்தும் இடம்; வாசி - குதிரை; கங்கை - கங்கை நதி; இமயம் - இமய மலை; வெளிப்படத்தெரியும் கங்கையை இமயத்தினைக் காணுகின்ற பொழுது மறைத்தார் என்பது வெளிப்படை. கண்டகம் - வாள், கண்; கண்டகம் கை மறைத்தார் - வாள்போன்ற கண்ணைக் கையால் மறைத்தார் என்றபடி; இமயம் - இமயமலை, முலைக்கு ஒப்பு.

## 368

சிலைப்பொறி யாற்பகை யட்டோ னிராவணன் றீமைமுடி
நிலைப்பறி யாமைசெய் தோனபி ராமனை நெஞ்சின்வைத்து
மலைப்பறி யாதவன் சீராச ராசன் வரையனையீர்
தலைப்பொறி யின்றித் தனம்படைப் பார்கொல் தரணியிலே.

சிலைப்பொறி -வில்லாயுதம், அட்டோன்- கொன்றவன்; தீமைமுடி- தீயவாய் அமைந்த தலைகள்; நிலைப்பறியாமை செய்தோன் - நிலைக்காமல் இற்றுப் போகச் செய்தவன்; அபிராமன் - மனத்துக்கினியவன், இராமபிரான்; மலைப்பு - மயக்கம்; தலைப்பொறி - தலையெழுத்து, ஊழ்; தலைமையான பொறியாகிய கண், தனம் - பொருள், முலை.

369

நஞ்சிலும் வெய்ய கொடியா ரெனப்பொய் நவிலுவரை
நெஞ்சிலுங் கொள்ள நினையானெஞ் சேது நிருபதுங்கன்
எஞ்சலி லாத கொடைராச ராசற் கிணங்கலர்தாம்
நெஞ்சிலுஞ் சூதினர் கையிலும் வஞ்சம் நிலைத்தவரே.

நவிலுவர் - சொல்லுபவர்; நிருபதுங்கன்-வேந்தர்களுள் சிறந்தவன்; எஞ்சல் இலாத - குறைவு படாத; இணங்கலர் - பகைவர்; நெஞ்சிலும் சூதினர் - மனத்திலும் வஞ்சக எண்ணங்கொண்டவர்; வஞ்சம் நிலைத்த வர் - வாள் நிலைபெற்றவர்; நெஞ்சு - மார்பு; சூதினர் - சூதுகாய் போன்ற முலையினையுடையார்; வஞ்சம் - வாள்போன்ற கண்.

370

கைச்சேலையுமொரு கைக்கூந் தலும்விட்டுக் கைகுவிக்கும்
அச்சோர் பொழுதத்தி லேஐவர் பத்தினிக் காடைதரு
மைச்சோ தியைப்பணி சீராச ராசன் வரையிடத்தே
மெய்ச்சேலை விட்டவர் கைச்சேலை வைத்த விதமென்னையே.

கைச்சேலை - கையில் பற்றிய புடவை; கூந்தல் - தலைமயிர்; கை குவிக்கும்-கை கூப்பித் தொழும்; சோர் பொழுதத்தில் -தளரும்சமயத்தில்; ஐவர் - பஞ்ச பாண்டவர்; ஐவர்பத்தினி - திரௌபதை, பாஞ்சாலி; ஐவர் பத்தினிக்கு ஆடைதரு மைச்சோதி - திருமால்; சேலை - ஆடை; உடம் பிடத்திலே சேலையை நெகிழ விட்டவர் கையில் சேலையைப் பற்றியிருத் தல் என்ன காரணம் என்பது வெளிப்படை. மெய்ச்சேல் - மார்பில் உள்ள முலை; கைச்சேல் - கையிடத்துள்ள கண்; சேல் - மீன்.

371

மறைக்க ணிலைபெற்ற வந்தண ருக்கன்பு வைத்தளிப்போன்
முறைக்க ணிலைபெற் றெழுபது பாளைய முந்தொழுஞ்சீர்
தறைக்க ணிலைப்புகழ்ச் சீராச ராசன் றமிழ்வரைவாய்
கறைக்கண் டனையெமைக் காட்டாது விண்டெமைக் காட்டினையே.

மறை - வேதம்; முறை - செங்கோல் முறைமை, அரசநீதி; எழுபது பாளையம் - சேதுபதிகளின் கீழ் அமைந்தவை இவை; பாளையம் - பாளையகாரர், ஆகுபெயர்; தறை - பூமி; கறைக்கண்டன் - நஞ்சுக்கறை

படிந்த கழுத்தையுடைய சிவபெருமான்; விண்டு - விட்டுணு, திருமால்; சிவபெருமானை வெளிப்படக்காட்டாது திருமாலைக் காட்டினாய் என்பது வெளிப்படைப் பொருள். கறைகண் தனைக் காட்டாது, நஞ்சு போன்ற கண்ணை வெளிப்படுத்தாது; விண்டு - மலை, முலை; விண்டு எமைக் காட்டினாய் - முலையை எமக்கும் வெளிப்படுத்திக் காட்டினாய் என்ற வாறு.

372

செம்மக ரக்கொடி வைத்தவ னுக்கிணை செய்தலைக்கொண்
டிம்மக ரக்கடல் சூழ்புவி வந்தோ னிலையென்னவர்
தம்மக ரத்துத் தரும்ராச ராசன் றடவரைவாய்
அம்மக ரக்கைபொல் லாதித் தனைதன மார்ந்தவர்க்கே.

செம்மகரக்கொடி - செந்நிறமான மீனக் கொடி; மகரக்கொடி வைத்தவன் - மன்மதன்; இணைசெய்தல் - ஒப்பாதல்; மகரக்கடல் - மீன் நிறைந்த கடல்; தம்ம கரத்துத் தரும் — இரப்பவர் தம்முடைய கைகளில் கொடை தரும்; அம்ம - வியப்பிடைச் சொல்; கரக்கை - கொடாமல் மறைத்தல்; இத்தனை தனம் - இவ்வளவு செல்வம்; பெருஞ்செல்வம் படைத்தார் பிறருக்குக் கொடாது மறைத்தல் வியப்புத் தருவது என்பது வெளிப்படை; அம் மகரக்கை பொல்லாது - அந்த மகர மீன் போன்ற கண்ணில் உள்ள கை தீதாம்; தனம் - முலை.

373

இறும்பிடை நின்ற குறும்பொறை யூர்களு மின்மருதம்
நறும்பெரு வேலியு நெய்தலு மெங்கு நலந்திகழ்த
லுறும்புகழ்ச் செம்பியன் சீராச ராச னுயர்கிரியார்
குறும்பிடி கைக்கொண்டு போரானை மேல்வருங் கோதையரே.

இறும்பு-குறுங்காடு; குறும்பொறை ஊர்கள் - சிறிய பொற்றைகளில் உள்ள ஊர்கள்; இன்மருதம் — காண்பதற்கு இனிய மருதநிலம்; வயல் வளம் நிறைந்த நிலம்; நெய்தல் - கடற்கரை நிலம்; நலம் - நன்மை; செம்பியன் - செம்பி நாட்டுக்கு உரியவன்; குறும்பிடி - வாள், கன்; போரானை மேல்வரும் - போர் வல்ல யானைமேல் வரும்; யானை போன்ற முலை வெளிப்படவரும்

374

களிதடுக் காத மறவர் படைக்கடல் கைக்கொண்டுமுன்
வெளிதடுக் காத பிரசண்ட மாருத மேல்வரல்போற்
றுளிதடுக் காமல் வருராச ராசன் றொடர்வரைவாய்
அளிதடுப் பாருமுண் டோமுகிழ் நாறு மமயத்திலே.

களி - கள்ளுண்டு களித்தல்; வெளி - அண்ட வெளி; ஆகாயம்; பிரசண்ட மாருதம் - சூறாவளிக்காற்று; துளிதடுக்காமல் - சிறிதும் தடையில்லாமல்; அளி - வண்டு, கண்; முகிழ் - பூவரும்பு, முலை; நாறும அமையம் - மணம்வீசும் காலம், தோன்றும் காலம்.

375

தவரங்கை வைத்திகல் வெல்வான் மறவர் தலைவனிவன்
எவருங்கை கூப்பிய சேதுக் கதிபதி யின்புகழைக்
கவருங்கை வண்மையன் சீராச ராசன் கனவரையீர்
நவிரங்கை வந்தது மாதே வரையினி நாந்தொழவே.

தவர் - வில்; இகல் - போர்; கைகூப்பிய - கைகுவித்து வணங்கிய; அதிபதி - தலைவன்; கைவண்மையன் - கொடையாளன்; நவிரம் - சிவ பெருமான் கோயில் கொண்ட மலை (மலைபடுகடாம் - 5) மாதேவர் - மகாதேவராகிய சிவபெருமான். கைவந்தது - அடுத்தது; நவிர் அங்கை வந்தது மாதே வரை இனி நாம் தொழவே என்க. நவிர் - வாள், கண்; மாதே - பெண்ணே, விளி. வரை - மலை, முலை; தொழ - வணங்க; பார்க்க.

376

அளிவிட்டி லாத தளவத் தொடையுட னய்புலவர்
களிவிட்டி லாத கவிமாலை யும்புனை காழ்ப்புயத்தாற்
றளிவிட்டி லாது தொழும்ராச ராசன் றமிழ்வரைவாய்
ஒளிவிட் டிருட்டின் முலைபுல்ல மாட்டா ருணர்ந்தவரே.

அளி - வண்டு; விட்டிலாத - நீங்காத; தளவத்தொடை - முல்லை மாலை; ஆய்புலவர் - ஆராய்ச்சி வல்ல புலவர்; களி - களிப்பு, மகிழ்ச்சி; காழ்ப்புயம் - உறுதியான தோள்; தளி விட்டிலாது - திருக்கோயில் தவறாமல்; ஒளி - பகல், கண்; முலை - முல்லை, முலை; புல்லமாட்டார் - பெறமாட்டார், தழுவமாட்டார். உணர்ந்தவர் - நன்கு அறிந்தவர்.

**377**

மடனுற்று கில்லா வறிவாள ருக்கித மாகமதித்
துடனுற்று வள்ளன்மைச் சீராச ராச னுயர்கிரிவாய்
கடனுட்ட மாதெனக் கையினிற் காட்டிய காரிகைநீ
திடனுக யானே மலைநாட்ட மானவன் தேரினியே.

மடன் - அறியாமை; இதமாக - நன்மையாக, இன்பமாக; மதித்து- போற்றி, பெருமைப் படுத்தி; வள்ளன்மை - கொடை; கடல் நாட்ட மாது - நெய்தல் நிலப்பெண்; திடனாக - உறுதியாக; மலைநாட்டமான வன் - குறிஞ்சி நிலத்தை விரும்புகிறவன். கடல்நாட்டம் - கடல்போன்ற கண்; கையினிற் காட்டிய-கையால் மறைத்துக் காட்டிய; மலை - முலை; நாட்டமானவன் - விரும்புகிறவன்; தேர் - தெளிவாய்.

**378**

உருமு புலிக்கு நிகராகப் பாயு முயர்மறவர்
பொருமு படைக்கு ளரியே றெனப்போய்ப் பொருந்தலரைத்
திருமு தலைச்செய்யும் சீராச ராசன் செழுங்கிரிவாய்
இருமு கிழத்தன மீந்தா யிளமைக்க ணின்கைவைத்தே.

உருமுபுலி - இடிபோல முழங்குகிற புலி; உருமுதல் - உறுமுதல், முழங்குதல்; நிகராக - ஒப்பாக; பொருமு படை - போர்வல்ல சேனை, திரண்ட சேனை; அரியேறு - ஆண் சிங்கம்; பொருந்தலர் - பகைவர்; திருமுதலைச்செய்யும் - திரும்பி ஓடுதலைச் செய்யும், புறமுகிட்டோடச் செய்யும். இருமு - இருமல்; கிழத்தனம் - முதுமை, மூப்பு; இளமையை உன்கைவசம் வைத்துக்கொண்டு இருமலோடு கூடிய கிழத்தனத்தை எமக்குத் தந்தாய் என்பது வெளிப்படைப்பொருள். இருமுகிழ் அத் தனம் ஈந்தாய் -இரண்டு அரும்புபோன்ற அழகிய முலைகளைத் தந்தாய்; இள மைக்கண் நின்கை வைத்தே - இளமையான கரிய கண்ணை உன் கைக்குள் வைத்துக்கொண்டு.

**379**

செய்ப்பாற் பணிலந் தரளஞ் சொரிவளச் செம்பியன்சொன்
மெய்ப்பா லொளிர்கின்ற சீராச ராசன் மிளிர்வரைவாய்
ஒப்பாக வெல்லா மமிழ்தி னியன்ற வுறுப்புடையாள்
கைப்பாணங் கையுற்றன ளென்னி லோவசை காட்டவற்றே.

செய் - வயல்; பணிலம் - சங்கு; தரளம் - முத்து; மெய் - உண்மை; எல்லாம் ஒப்பாக அமிழ்தின் இயன்ற உறுப்புடையாள் - எல்லாம் ஒன்று போல அமிழ்தாயிருக்கிற உறுப்பினையுடையாள்; அதாவது சோற்றிற்கு அங்கமாகிய கறிவகைகளையுடையவள். கைப்பு ஆணம் - கசப்பான குழம்பு; அமிழ்தமாயிருக்கிற நல்லுணவில் கசப்பான குழம்பு கையுறுதல் பழிப்பாகும் என்பதாம். எல்லாம் ஒப்பாக அமிழ்தின் இயன்ற உறுப்பு முலை; கைப்பாணம் கையுற்றனள் - சிறிய அம்பு போன்ற கண்ணைக் கையிடத்தே கொண்டாள்.

## 380

தீதுவிட் டாரின மல்லாது வேறு செறிவதிலான்
கோதுவிட் டார்புல வோரிசை வாணர் குழூவியவன்
பேதுவிட் டானெங்கள் சீராச ராசன் பெருங்கிரிவாய்ச்
சூதுவிட் டார்நற் றவர்கைப்பட் டாரிந்தத் தோகையரே.

தீது - பாவம், குற்றம்; தீதுவிட்டாரினம் - நல்லார் கூட்டம்; செறிவு - நெருங்குதல், சேர்க்கை; கோது - குற்றம்; புலவோர் - இயற்றமிழ் வல்லார்; இசைவாணர் - இசைப்புலவர்; குழூவியவன் - குழுவில் மேம்பட்டவன்; பேது - பேதைமை; சூதுவிட்டாராகிய நல்ல தவமுடையாரிடத்துச் சார்ந்தார் என்பது வெளிப்படை. சூதுவிட்டார் - சூதுகாய் போன்ற முலைகளை வெளிப்படுத்தினார். நல் தவர் - நல்ல அம்பு; அம்பு என்றது இங்குக் கண்ணை. தவர் என்பதற்கு வில் என்று கொண்டு வில்லைப் போன்ற புருவத்தினையுடைய கண்களை மறைத்தார் என்றுமாம்.

## 381

மொய்யிரு ளிற்கு நிகர்கூந்த லார்மதன் முற்றுநெஞ்சும்
பொய்யிரு ளிற்புக வொல்லான் கலைவலர் புன்கணென்னு
வையிரு ளிற்கொளி சீராச ராசன் வளவரையீர்
மையிரு ளிற்புகு வாரோ விலங்கல் வழிக்கொளவே.

மொய் இருள் - நெருங்கிய இருள்; நிகர் - ஒத்த; கூந்தலார் - கூந்தலையுடைய பெண்டிர்; மதன் - மன்மதன், முற்று நெஞ்சும் - முழுமனமும்; பொய்யிருள் - பொய்யாகிய இருட்டு; ஒல்லான் - ஒருப்படான்; புன்கண் - துன்பம்; புன்கண் என்னும் வை இருளிற்கு ஒளி - துன்பம் எனப்படும் கூரிய இருளிற்கு ஒளியாயிருப்பவன். மையிருள் - கரிய இருள், கும்மிருட்டு: விலங்கல் வழிக்கொள - மலைவழியிற் செல்ல

மலைவழியில் இருட்டிற் செல்லார் என்பதாம். மை - மைதீட்டப் பெற்ற கண்; இருளிற்புகுவாரோ - இருளிற்புகும்படி செய்வாரோ; கை மறைத்து இருளடையச் செய்யார் என்றபடி; விலங்கல் - மலை, முலை.

### 382

இலங்கைக் கரசன் முடிபத்தும் வீழ வெடுத்தசிலை
யலங்கற் றுழாயண்ணல் சேவடிக் கன்பி னசலமெனக்
கலங்கற் கிலாமனச் சீராச ராசன் கனவரைவாய்
விலங்கற் குரியவர் நீரே வண்டங்கை விழைதலினே.

இலங்கைக்கு அரசன் - இராவணன்; சிலை அலங்கல் துழாய் அண்ணல் - வில்லேந்திய இராமன்; அசலம் என - மலைபோல; கலங்கற்கு இலா மனம் - அசைவற்ற மனம். அண்டம் - உலகம். உலகம் முழுவதும் கையுற விரும்புதலால், விலங்கற்கும் உரியவராயினிர் என்ப தாம். விலங்கல் - மலை, முலை; வண்டு அம் கை விழைதலினே - வண்டுபோன்ற கண்ணைக் கையால் விரும்பிக் கொள்ளுதலான் என்ற படி.

### 383

கரித்தலை யேறு மரியே றெனமுனை காய்ந்துவென்று
சிரித்தலை யுள்ள மறவோர் தொழுமிறை சீர்ப்புகழ்மை
வரித்தலை மிக்க கொடைராச ராசன் வளர்வரைவாய்
பிரித்தலை யேகொள்வை யாற்றனஞ் சேர்கின்ற பெற்றியிலே.

கரித்தலை - யானையின் தலை; அரியேறு - ஆண் சிங்கம்; முனை - போர்க்களம்; காய்ந்து - சினந்து; வரித்தல் - தன்னதாகப் பெறுதல் பிரித்தலையே...பெற்றியிலே-தனம் சேர்கின்ற தன்மையில் பிரித்தலையே கொண்டுள்ளாய் என்பது வெளிப்படை. பிரித்து அலையே கொள்வை கையை விரித்துக் கண்ணைப் பற்றுவை; அலை - கடல், கண்; தனம் முலை.

### 384

செய்ச்சால் வளைதவழ்ந் தூர்செம்பி நாடுடைச் சேதுபதி
பொய்ச்சார் பிலாதவன் சீராச ராசன் புனவரைவாய்
மெய்ச்சார் பினிய தனஞ்சுவை காண்கின்ற வேளையிலே
கைச்சா யகமொடு நின்றுயி.'. தென்ன காரணமே.

செயச்சால் - வயல்களில் உழுத உழுபடைச் சால்; வளை - சங்கு; மெய்ச்சார்பு இனிய தனம் - உண்மையாக வந்து சேர்ந்த இனிய பொருள். சுவை காண்டல்-அனுபவித்தல்; கைச் சாயகமொடு நின்றாய்-கையில் அம்புடன் நின்றாய்; மெய்ச்சார்பு இனிய தனம் — மார்பிலே சேர்ந்துள்ள இனிய முலை; சுவை - இன்பம்; சாயகம் - அம்பு, கண்.

**385**

சேற்கலை யாதகண் மாஞர் மடல்வரச் செய்துமலே
மேற்குல வும்மிள ஞாயி றெனக்கரி மீதிவரும்
சூற்கன மானுங் கொடைராச ராசன் றெடர்வரைவாய்ப்
பாற்க லயந்தங் துளீர்மன் னுததியப் பான்மறைத்தே.

சேல் - கெண்டைமீன்; மானார் - பெண்கள்; குலவும் - விளங்கும்; இளஞாயிறு - காலைக் கதிரவன்; கரி - யானை; இவரும் - ஏறி நடத்தி வரும்; சூற்கனம் - சூல் கொண்ட மேகம்; மானும் - ஒக்கும்; பாற்கலயம் தந்துளீர் மன்னு ததி அப்பால் மறைத்தே என்பது வெளிப்படை. ததி - தயிர்; பாற்கலயம் - பாலுள்ள செம்பு, முலை; மன் உததி அப்பால் மறைத்தே என்க. உததி - கடல், கண்.

**386**

நினைப்பருந் தெய்வத் திணையடிப் போதிற்றன் னெஞ்சை வைத்தே
எனைப்பெரும் போதும் பணிசெய்த பாற்கர் வேந்தன்றவர்
தனைப்பொரும் பாக்கியஞ் சீராச ராசன் றமிழ்வரைவாய்
உனைப்பெருங் கோப்பெண் டெனவுரை யார்செல்வ முற்றென்னையே.

நினைப்பருந்தெய்வம் - எண்ணுவதற்கு அருமையான தெய்வம்; இணையடி - இரண்டு திருவடி; அடிப்போது - திருவடித்தாமரை; எனைப் பெரும்போதும் - எல்லாக் காலங்களிலும்; பணிசெய்த - கடமை யாற்றிய; பாக்கியம் - புண்ணியம்; செல்வம்; பொருளைப் பெற்றும் என்ன பயன்; உன்னைப் பெருங்கோப்பெண்டு என்று உரையார் என்பது நான்காமடியின் மேற்போக்கான பொருள். பெருங்கோப்பெண்டு - அரசி; கோப்பெண்டு - கண்ணையுடைய பெண்; கண்ணை மறைத்துள்ளாள் என்பது குறிப்பித்தவாறு. கோ - கண்; செல்வம் - தனம், முலை.

387

செருத்தலை யேகுட மாக்கொண்ட வானிரை சேர்த்துவப்போன்
திருத்தலைச் செய்து முறையே புரக்கின்ற சேதுபதி
பருத்தலைக் கொள்களிற் ருன்ராச ராசன் பனிவரைவாய்
ஒருத்தலைப் பக்கம் வையார்வடுக் கோளிறும் பூதுடைத்தே.

செருத்தல் - பால்மடி; குடமாக்கொண்ட-குடம்போலப் பருமையாகக் கொண்டுள்ள; ஆனிரை - பசுக் கூட்டம்; திருத்தலைச் செய்து - திருந்தி நடக்குமாறு செய்து; முறையே புரக்கின்ற - முறைப்படி ஆள்கின்ற. பருத்தலைக் கொள்களிறு - பருத்தலை யுடைய பெரிய யானை; ஒரு தலைப்பக்கம் வையார் - ஒரு சார்பாக ஏதனையும் செய்யாதவர்; வடுக் கோள் - பழிகொள்கை, குற்றம் பொருந்துகை; இறும்பூது - வியப்பு; ஒருத்தல் - யானை, முலை; பக்கம் வையார் - ஒரு பக்கத்தே அடக்கி வையார்; வடு - மாவடு போன்ற கண்.

388

பண்ணி லியலி லெதுவு நுணுகிப் பகுத்துணர்வி
லெண்ணித் துணிவிற் றலைராச ராச னிருங்கிரிவாய்
விண்ணில் லிருநிதி தம்மை வழங்கிய வேளையினும்
கண்ணைக் கெடுத்த வரையார் விரும்புவர் காரிகையே.

பண் - இசை; இயல் - இயல்தமிழ்; நுணுகிப் பகுத்துணர்வில் - நுண்ணியதாகப் பகுத்து ஆராய்ந்து உணர்வதில்; எண்ணித்துணிவில் - ஆராய்ந்து துணிவதில்; தலை ராசராசன் - சிறந்த ராசராசன்; விண்ணில் இருநிதி - வானுலகத்திலுள்ள பெருஞ்செல்வங்களாகிய சங்க நிதி, பதுமநிதி; ஆகாயமாகிய இடையின் மேல் உள்ள இருதனம்; கண்ணைக் கெடுத்தவரை - கண்ணில்லாதவரை, கண்ணை மறைத்த வரை.

389

பசித்திரங் காதுதன் னுற்றுரைக் காப்பவன் பற்றலரை
ஒசித்திரங் காதவன் சீராச ராச னுயர்வரைவாய்
விசித்திர மோங்க லுறுமிந்த வேளையின், மின்னனையாள்
வசிப்படு கிற்கிலள் பாரா திருளின் வசத்தளென்னே.

உற்றார் - சுற்றத்தார், பற்றலர் - பகைவர்; ஒசித்து - அழித்து; விசித்திரம் - அற்புதம்; ஓங்கலுறும் இந்த வேளை - மிகுதியாயிருக்கும் இந்தச் சமயத்தில்; வசிப்படுதல் - வசமாதல், ஈடுபடுதல், வசியமாதல்; பாராது இருளின் வசத்தள் என்னே என்க. இருளின் வசத்தள். அறியாமை கொண்டவள். விசித்திரம் ஓங்கல் - அழகிய மலை, முலை; வசி - வாள். கண்; படுகிற்கிலள்-படும்படியாகச் செய்திலள்; மறைத்துள்ளாள் என்றபடி.

## 390

புயல்கையின் வைத்தவன் பாற்கர வேந்தன் புரிந்துதவ
முயல்கையி னுற்றவன் பொய்நெஞ்ச வஞ்சரை மூடரைச்சேர்
மயல்கை யறவிட்ட சீராச ராசன்றன் வார்கடல்வாய்க்
கயல்கையின்வைத்து வெறுமுலை வைத்தென்ன காண்பதுவே.

புயல் கையில் வைத்தவன் - மேகத்தைக் கையில் கொண்டவன்; மேகம் போலக் கொடையாளன் என்பதாம். பொய் நெஞ்ச வஞ்சர் - பொய் பொருத்திய நெஞ்சினையுடைய வஞ்சகர்; மூடர் - அறிவற்றவர்; மயல் - மயக்கம்; கையற விட்டவன் - முற்றும் நீங்கியவன்; வார் கடல் வாய் - பெருங்கடலில், பெருங்கடல் சூழ்ந்த உலகில்; கயல் - கயல்மீன்; வெறும் உலை வைத்து - அடுப்பில் உலை மட்டும் வைத்து; கயல் கையின் வைத்து-கயல்மீன் போன்ற கண்ணைக் கையால் மறைத்து; வெறுமுலை வைத்து - முலைமட்டும் வெளிப்படுத்தி.

## 391

தாருக்கு நேர்கொடை யாகும் விசயன் றனைப்புரந்த
காருக்கு நேர்நிற்குஞ் சீராச ராசன் கமழ்வரைவாய்
ஆருக்கு நோக்க மளியா தவரென் றறிவித்துப்பின்
மார்புக் கிருவரை யேற்றுநிற் பீரிது மாண்பிலதே.

தார் - சேனை; விசயன் - அருச்சுனன்; புரந்த - காப்பாற்றிய; கார் - மேகம்; மேக வண்ணனான திருமால்; திருமாலுக்கு ஒப்பாக நிலை பெற்றிருப்பவன் இராசராசன். நாடு காக்கும் அரசரைத் திருமாலுக்கு ஒப்புக் கூறுதல் மரபாகும். ஆருக்கும் - எவருக்கும்; நோக்கமளியாதவர்- பார்ப்பதற்கு இடம் கொடாதவர்; மார்புக்கு இருவரை ஏற்று நிற்பீர் - மார்பிலே இரண்டு பேரை ஏற்றுக் கொண்டுள்ளீர்; இருவரை-இருமலை, இருமுலை; மார்புக்கு இருவரை ஏற்பது ஒழுக்கமன்று என்றவாறு. நோக்கம் - கண், பார்வை; மாண்பு - பெருமை; சிறப்பு.

392

செல்லா லமர்ந்த திருக்கரத் தாற்றமிழ் சேர்ந்தளித்த
வல்லாளன் சேது பதிரகு நாதனை மானுமெனப்
பல்லார் துதிசெயும் சீராச ராசன் பனிவரைவாய்
கல்லா லடிகாட் டினையாற் குருக்கண்முற் கைமறைத்தே.

செல் - மேகம்; அமர்ந்த - தங்கிய, விரும்பிய; புயல் கையில் வைத்தவன் (390) என்பதனுடன் ஒப்பு நோக்குக. வல்லாளன் - வல்லமை பொருந்தியவன்; சேதுபதி ரகுநாதன் - ரகுநாத சேதுபதி; மானும் - ஒக்கும்; ரகுநாத சேதுபதி அமிர்த கவிராயர் பாடிய ஒருதுறைக் கோவையைப் பாராட்டிப் பரிசில் தந்த சிறப்புடையார். கல்லால் அடி - கல்லால மரத்தின் அடி; குருக்கள் முன் கை மறைத்தே - கல்லால மரத்தின் அடியில் வீற்றிருக்கும் குருவினை மறைத்து; கல்லாகிய முலையும் ஆலாகிய வயிறும், அதன் அடியிலுள்ள அல்குலும் காட்டினை என்பது குறிப்பு; குருக்கண் - நிறம் பொருந்திய விழி.

393

மத்தம் பிறைத்தலை வைத்தோன் மலரடி மன்னுளத்து
நித்தம் நினைக்கின்ற சீராச ராச நெடுங்கிரிவாய்ச்
சித்த முருகிட மாய்க்கொண் டுளாரித் தெரிவையர்க்கு
மெத்தென் றிருப்பதல் லாற்கரங் கட்டெனல் மேன்மையின்றே.

மத்தம் - ஊமத்தம் மலர். பிறைத்தலைவைத்தோன் - சிவபெருமான்; நித்தம் - நாள்தோறும், எந்நாளும்; சித்தம் உருகிடமாய்க் கொண்டுள்ளார் - மனத்தை நெகிழ்விடமாகக் கொண்டவர்; மெத்தென்றிருப்பதல்லால் கரங்கட்டு எனல் மேன்மையன்று - மென்மைத் தன்மை பெற்றிருப்பதல்லாமல் கரடுமுரடான வன்மையாயிருத்தல் பெருமை தருவதன்று என்பது வெளிப்படை. கரம் கட்டு - கரடு முரடானது, நஞ்சு தங்கியது; கரம் - நஞ்சு. சித்தம் முருகிடமாய் - நெஞ்சு முருகனிடமாகிய மலையாய்; கரம் கட்டு - கை கண்ணையுடையது

394

செய்ம்மீன வாளை கமுகினிற் கண்படுஞ் செம்பிநன்னாட்
டம்மீ னவன்பொர வாழவந் தோனழ கான்மடவார்
எம்மீன கேதனனென் ராச ராச னிருங்கிரியார்
தம்மீன மாற்றினர் தம்மீன மாற்றலர் தாமென்னையே.

செய்ம்மீனவாளை - வயலில் உள்ள மீனாகிய வாளை; கமுகினின் கண்படும் - கமுகின் மேலிடத்தே தாவிப் பொருந்தும்; கண்படும் - உறங்கும். மீனவன் - பாண்டியன்; பொர - ஒப்ப; மீனகேதனன் - மீனக் கொடியுடையவனாகிய மன்மதன்; தம்மீனம் - தம்முடைய ஈனம். மாற்றினரும் மாற்றலரும் ஆயினர். தம்மீனம் மாற்றினர் - தம்முடைய மீன் போன்ற விழியை மாற்றினர்; தம்மீனம் - தகரத்தின் மீப்பட்டுள்ளனம் என்பது தனம் - தனம் மாற்றிலர் என்றவாறு.

### 395

முன்னவ ரென்று சொலப்பட்ட சேது முதல்வர்புகழ்
தன்ன தெனச்செய்யுஞ் சீராச ராசனைச் சாரலர்போல்
நன்குடை விட்டனிர் கோன்மறைத் தீர்வலி யானைவிட்டீர்
என்னெதி ரேயிடை தோற்றல்செய் தீரர சென்னதுவே.

முன்னவர் - முன்பே அரசாண்டவர்; சேது முதல்வர் - சேது காவலர்; சாரலர் - பகைவர்; நன்குடைவிட்டனிர், கோல் மறைத்தீர், வலியானை விட்டீர், என் எதிரே இடை தோற்றல் செய்தீர், அரசு என்னது என்க. போர்க்களத்தில் பகைவர் குடையைப் போட்டு அம்பை மறைத்து, வலிய யானையையும் ஒழிந்து ஓடிப்போமாறுபோல எனக்கு எதிரே தோற்றுவிட்டீர்; அதனால் அரசு என்னுடையது என்பது வெளிப்படை. நன்கு உடை விட்டனிர் - பெரிதும் உடையை நெகிழ விட்டீர்; கோல் - அம்பு, கண்; கோல் மறைந்தீர் - கண்ணை மறைத்தீர்; வலியானை - முலை; இடை தோற்றல் - இடை வெளிப்படுதல்; அரசு - அரசிலை போன்ற அல்குல்.

### 396

காரற்ற காலையுந் தன்கொடை யிற்சிறு காதவன்கு-
பேரற் கிணைகொள் பெருநிதி யோன்சுவை பெற்றதமிழ்க்
காரற் புதவன்பன் சீராச ராச னணிவரைவாய்
சேரற் கணிவந்து கோமாறன் மேவுந் திறமென்னையே.

கார் - மழை; சிறுகாதவன் சுருங்காதவன்; குபேரற்கு இணை கொள் - குபேரனுக்கு ஒப்பான்; ஆர் அற்புத அன்பன் - சுவைக்கும் சிறந்த அன்புடையோன்; சேரற்கு - சேரனுக்கு; கோமாறன் - பாண்டிய மன்னன். சேரனுக்குப் பக்கத்தில் வந்து பாண்டியனைச் சேரும் வகை என்ன. விநோதம் என்பது வெளிப்படை. சேரற்கண் நிவந்து - மலை

யிடம் மேலெழுந்து; அதாவது முலை வெளிப்பட்டு; சேரற்கண் - சேரனுக்குரிய இடம் மலை - முலை; கோ மாறல் - கண் பார்க்க மறுத்தல்; கண்ணை மறைத்தல்; என்னையே - என்ன பயனாம்.

## 397

சீரான தண்புக லூருறங் காப்புளி சேருமொரு
காரானை மாமுக னைத்தொழுஞ் சேதுக்குக் காவலன்வெல்
பேரானை மீதிவர் சீராச ராசன் பிறங்கலன்னீர்
போரானை மீச்செல்வ ரேதிட்டி வாயிற் புகுகையென்னே.

புகலூர் - திருப்புகலூர் என்னும் தலம்; உறங்காப்புளி - இலை குவியாத புளிய மரம்; காரானை மாமுகன் - விநாயகன்; இவர் - ஏறிச் செலுத்துகிற; பிறங்கல் - மலை; போரானை மேலே செல்பவர் திட்டி வாயிலிற் புகுகை என்ன காரணம் என்பது வெளிப்படை. ஆனை-முலை; திட்டி வாயில் புகுகை - சிறிய வாசலில் செல்லுகை; கண்ணிடத்தே கை சென்று சேர்கை; அதாவது கண்ணை மறைக்கை.

## 398

கார்ப்பா லுளகொடை யெல்லாந் தமது கரத்தமைத்துச்
சீர்ப்பா லிரணிய கர்ப்பம் புரிந்தவர் செம்மறெய்வத்
தேர்ப்பா கனைத்தொழும் சீராச ராசன் செழுங்கிரிவாய்
பார்ப்பாரைப் பற்றி முனிவரை விட்டதென் பாவையரே.

கார் - மேகம்; கரம் - கை; இரணிய கர்ப்பம் - பொன்னாற் செய்த பசுவின் வயிற்றினுள் புகுந்து வெளிவரும் சடங்கு; செம்மல் - தலைவன்; தெய்வத்தேர்ப்பாகன் - பார்த்தசாரதியாகிய கண்ணன்; பார்ப்பாரை ஆதரித்து முனிவரைக் கைவிட்டது ஏன் என்பது வெளிப்படை. பார்ப்பார்-கண்; முனி வரை - கோபிக்கின்ற மலை, முலை.

## 399

அறமான சொல்லுஞ் செயலு நினைவு மமர்ந்தவரைத்
திறவா னவரென்று தேறுந் தகைமையன் சேதுபதி
மறவாணர் தொல்குடிச் சீராச ராசன் வரையிடத்தே
உறவான வர்க்களி யில்லாகிக் கன்னெஞ் சுறுவதென்னே.

அமர்ந்தவர் - பொருந்தியவர்; திறவானவர் - திறமையானவர், தேறும் - தெளியும்; தகையையன் - பண்புடையான்; தொல்குடி - பழங்குடி; உறவுடைய சுற்றத்தார்க்குக் கருணை காட்டாமல் கல் நெஞ்சாய் இருப்பது ஏன் என்பது வெளிப்படை. அளி - வண்டு, கண்; கல்நெஞ்சு உறுவது - மலை நெஞ்சிடத்தே பொருந்துவது; மலை - முலை.

## 400

ஆடுங் கடைமணி யாடாது மும்மர சார்ப்பவெங்கு
நீடும் புகழ்கொண்ட சீராச ராச னெடுங்கிரியீர்
நாடு மிரண்டு மலையுநல் லூரு நயந்தளித்தீர்
பாடு மளிக்கையி னீர்கிடைத் தீர்பெரும் பாக்கியமே.

கடைமணி - அரண்மனை வாயிலிற் கட்டிவைக்கும் ஆராய்ச்சிமணி; மும்முரசு - மணமுரசு, கொடைமுரசு, படைமுரசு என்னும் மூவகை முரசுகள்; நீடுபுகழ் - பெரும்புகழ்; நாடு, மலை, ஊர் விரும்பித் தந்தீர்; பாடும் - முயற்சியும்; நாடும் இரண்டு மலை - விரும்பும் இரண்டு தனம்; ஊரு - தொடை; பாடும் அளிக்கையினீர் - பொருந்தும் கண்ணில் கையுடையீர்; அளி - வண்டு, கண்; பெரும் பாக்கியம் - பெரும்பேறு, பெரிய செல்வம்.

—:o:—

இராசராச சேதுபதி ஒருதுறைக் கோவை
நானூறு பாடலும் குறிப்புரையும் நிறைவேறின.

# பாடல் முதற்குறிப்பு அகராதி

[எண் : பாடல் எண்]

—:o:—

# சிறப்புப்பெயர் முதலியவற்றின் அகராதி

[எண் : பாடல் எண்]

—:o:—